உ
ஓம்
தத், சத், பிரஹ்மணே நம:

ஸ்ரீ ஆத்துமாநந்தசுவாமிகளியற்றிய

# ஆத்துமாநந்த விளக்கம்

## மூலமும்

ஷை சுவாமிகள் மாணாக்கர்
முள்ளூர்
எ. ஜெனமல்லுக்கவுண்டரவர்களியற்றிய

## காண்டிகை உரையும்

இவை
நூலாசிரியர் முன்னிலையிற் பரிசோதித்து
இங்குச் சேர்க்கப்பட்ட
பொருளுபகாரப் பத்திரத்திற் காட்டப்பட்ட
உபகாரிகளின் பொருள் கொண்டு

வீரபாண்டியபுரம்
வீ. வீரவாகுபிள்ளையவர்களால்
பாளையங்கோட்டை பிரிண்டிங்காபிசில்
அச்சியற்றப்பட்டன.

ருகஷ்மிஞ உருத்திரோத்காரி வருடம்
காப்பி ரிஜிஸ்டர் செய்யப்பட்டது] [இதன் விலை ரூபா 2.

# அறிவிப்பு

இப்புத்தகம் வேண்டுவோர்கள் இதனடியிற் கண்டவரிடம் நேரிலாவது வி. பி. மூல்மாயாவது கிரயத்திற்குப் பெற்றுக்கொள்ளலாம்.

வை. சு. ந. சுப்பிரமணியன் செட்டியார்,
முதற்றெரு,
வீரவநல்லூர், S. I. R.

உ

கணபதி துணை

# செய்நன்றி கூறல்

## குறள்

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

உத்தமமாகிய ஆத்துமாநந்த விளக்க மூலமு முரையுஞ் சேர்ந்த வேதாந்த சாத்திரத்தை யச்சிட்டு நிலவச்செய்யவேணுமென்று என் குருமூர்த்தியாகிய இந்நூலாசிரியர் ஆஞ்ஞாபிக்க, யான் கிராமாந்தரங்களில் யாசிக்க எத்தனித்ததில் சில்லறையாக அதாவது ஒன்று இரண்டு ரூபாவாகக் கொடுக்க எத்தனித்தார்கள்.

இந்த யாசகா விருத்தியால் இவ்விஷயம் நிறைவேறாதென்றெண்ணித் தூற்றுக்குடி ஸ்ரீமான் அ. செ. சு. கந்தசாமி ரெட்டியாரவர்களிடமும் அவர்கள் மருகர் ஸ்ரீமான் முத்தைய ரெட்டியாரவர்களிடமும் இந்நூற் பெருமையை யெனக்குத் தெரிந்தவாறு தெரிவித்து இந்நூலின் கையெழுத்துக் காப்பிகளையும் சென்ற 1098-ம் ஆண்டு ஆனி மாதத்தில் பார்க்கும்பொருட்டுக் கொடுத்தும் அவர்கள் நாமதேயத்தால் நூலை யச்சிடப் பொருளுதவி செய்யவேணுமென்றுந் தெரிவித்தேன். ஷையார்கள் யோசித்துச்சொல்வதாய் ஆஞ்ஞாபித்தார்கள்.

அப்பால் அவர்களைச் சந்திக்கப் பன்முறை தூற்றுக்குடி சென்றும் இரண்டு மாதவரை மார்க்கமில்லை. இவ்வாறு சம்பவத்தைப் பார்த்தவர்கள் சிலர் நீர் நினைத்த நினைப்புப் பயனற்றதெனச் சொல்லினர்.

திருவருட்பயனுல் சென்ற புரட்டாசிமீ 21வ ஷை சீமான்கள் இருவர்களையும் தூற்றுக்குடியில் சந்தித்ததில் ரூபா நூற்றைம்பது கொடுப்பதாய் வாக்களித்தார்கள்.

இந்த வுத்தம கைங்கரியத்தில் உதவித்தொகை கொடுத்ததற்கும் அவர்கள் கொடுத்த காலமானது [கங்கையின் மகத்துவமெலாங் கலி ஐயாயிரத்துக்குமேல் பொருநைக்கே வந்துவிட்டதாமெனச் சான்ருேர் கூறியிருக்கின்ருர்]. பொருநையாற்றில் துலா மாதமும் தநுர் மாதமும் யான் ஸ்நானஞ்செய்ய வுதவியாயிருந்ததற்கும் எப்பொழுதும் ஷை சீமான்கள் இருவர்கள்பால் செய்ந்நன்றி மறவாதிருக்க ஈச்சுரன் எனக்கு அருள்புரிவாராக. சுபம்.

> ' காலத்தினுற் செய்த நன்றி சிறிதெனினும்
> ஞாலத்தின் மாணப் பெரிது ''—குறள்

பாளையங்கோட்டை பிரிண்டிங் பிரஸ் புரோப்ரைட்டர் மக-ா-ா-ஸ்ரீ K. D. முத்தையபிள்ளையவர்கள், இந்நூலச்சிடவும், புருப் பார்க்கவும், மிகுந்த வுதவி செய்தும், என்னை யன்புடனு தரித்தும், வந்தார்கள், நீடுவாழ்க.

இங்ஙனம்,
வீ. வீரவாகுபிள்ளை,
வீரபாண்டியபுரம்.

## ஆத்துமாநந்த விளக்க உரை அச்சிட்டவகைக்கு உபகரித்த பொருளும் உபகாரிகளும் ௧௯௯-ம்ளு

| ஊர் | பெயர் | ரூபா |
|---|---|---|
| | மஹா-ள-ள-ஸ்ரீ அவர்கள் | |
| ஆற்றூர்குடி | அ. செ. சு. கந்தசாமி செட்டியார் | 150 |
| டிை | சு. பா. லெ. லெக்ஷி செட்டியார் | 10 |
| வீரவநல்லூர் | வை. சு. ந. சுப்பிரமணியன் செட்டியார் | 25 |
| | சு. ப. பூமிலிங்க அடவியார் | 5 |
| டிை | M. சங்கரலிங்கஞ் செட்டியார் | 10 |
| டிை | எல். வே. சுப்பிரமணிய அடவியார் | 5 |
| டிை | வை. சு ந. இராமசாமி செட்டியார் | 5 |
| டிை | வள்ளிநாயகம் அடவியார் | 5 |
| டிை | அரு. ஸ்ரீநிவாச செட்டியார் | 5 |
| டிை | ரெயில்வே ஸ்டேஷன் மாஸ்டர் V. C. ஆறுமுகம்பிள்ளை | 7 |
| டிை | சில்லறை | 6 |
| பத்தமடை | பெருமாள் அடவியார் | 25 |
| | இராமசாமி செட்டியார் | 5 |
| உப்புவாணியன்புத்தூர் | சி. சு. ஆதிமூலகிருஷ்ணத்தேவர் | 25 |
| அத்தியாளநல்லூர் | பே. முத்தையா முதலியார் | 10 |
| அரிகேசநல்லூர் | மு. ஹரிஹர ஐயர் | 10 |
| டிை | மு. பிரமநாயகம்பிள்ளை | 25 |
| டிை | A. S. கணேச திருமலைக்கொழுந்துப் [பிள்ளை | 25 |
| டிை | M. R. திரவியம்பிள்ளை | 10 |
| டிை | கா. சுப்பையாபிள்ளை | 10 |
| மன்னார்கோவில் | முத்துக்கிருஷ்ண செட்டியார் | 25 |
| முத்துக்குமாரபுரம் | மு. சு. சி. ஆ சுப்பா செட்டியார் | 5 |

| | மக-ா-ா-ஸ்ரீ | அவர்கள் | |
|---|---|---|---|
| முத்துக்குமாரபுரம் | சில்லவா | | 5 |
| முள்ளூர் | ஷை | | 2 |
| கீழச்செய்த்தலே | ஷை | | 2 |
| கொல்லன்பருப்பு | ஷை | | 2 |
| ஐயர்பட்டி | ஷை | | 4 |
| சக்கம்மான்புரம் | ஷை | | 2 |
| பொம்மயபுரம் | ஷை | | 2 |
| வீரபாண்டியபுரம் | அ. கா. சி. சிவகாமுரெட்டியார் | | 5 |
| சாத்தூர் | சு. ச. சண்முகப்பிள்ளை | | 5 |
| | | ஆ வரவு ரூ ... | 437 |

## செலவு விபாம்

| | | |
|---|---|---|
| அச்சுக் கூலி | ரூபா. | 381 |
| நூலாசிரியர் படம் | ,, | 13 |
| | ஆகச் செலவு ரூபா. | 394 |
| | மீதம் இருப்பு ரூபா. | 43 |

ஷை ரூபா நாற்பத்துமூன்றையும் நூலாசிரியரால் செய்திருக்கிற கைவல்லிய வசனம் அசசிடுஞ்செலவுக்கு ஈடு செய்யப்படும்.

உ

கணபதி துணை

# ஆத்துமானந்த விளக்கம்

## நூல் உரைகளின் வரலாறு

இந்நூலானது ஆத்துமானந்தர் என்னும் ஆசிரியராற் செய்யப்பட்டது. இந்நூற்குப் பெயர் ஆத்துமானந்த விளக்கம் என வழங்குகின்றது. ஆத்துமானந்தராற் செய்ததுபற்றி இது கருத்தாவாகுபெயரன்று. வேறு யாது பெயர்? எனின், இந்நூலாசிரியரது ஆசிரியரால் இனிக் கூறப்படுங் காரணம்பற்றி இடப்பட்ட காரணவுவமையாகு பெயரென வறிக.

இந்நூல் ஆசிரிய விருத்தம், வெண்பா, கட்டளைக்கலித்துறை, என்னும் மூவகைப்பாக்களாலமைந்து ஒன்பது இயல்களாகப் பிரிவையடைந்திருக்கின்றது. அவற்றின் பெயர்கள் ஞானசாதனவியல், நிலையியல், பயனியல், அடைந்தாரியல், பொய்வேடவொழிபியல், அவிவேகியியல், இரங்கலியல், உற்றதுரைத்தலியல், உறுவதுகூறலியல், என்பனவாம. இவற்றுள் ஒவ்வோரியலோடும் அவ்வவ்வியற் பாக்களின் கருத்து ஒருவாறு ஒத்திருப்பனவன்றி முழுவதும் ஏத்திருக்கமாட்டா. அஃது உணர்த்துவதற்காகவே இவ்வாலாறு எழுதப்பட்டது. எதனல் மதுரசத்தால் வியாபிக்கப்பட்ட கோணற்கரும்பு அக்கோணுதற்றன்மையால் தின்போர்க்கு வெறுப்பு விடயமாகாமல் விருப்பு விடயமேயாகுமோ, அதனல் சுகத்திற்கேதுவாகிய ஆன்மஞானத்தில் உபயோகிகளாகிய அருத்தங்களால் வியாபிக்கப்பட்ட அப்பாக்கள் பொருணேக்கத்தால் அவ்வவ்வியற்பெயரோடு ஏகதேசம் வேறுபடுதல் காரணமாகச் சிஞ்ஞா

கர்களுக்கு வெறுப்பு விடயமாகாது. விருப்பு விடயமேயாமென வறிக. இவ்வனமிருத்தற்குக் காரணம் இக்கவிகளை ஆரம்பிக்கும் போது நூலாக்கக்கருதி ஆரம்பிக்கவில்லை. மற்றியாதுபற்றி ஆரம் பித்ததெனின்? இந்நூலாசிரியர் திருநெல்வேலிக்கடுத்த குறுக்குத் துறையில் வசிக்குங்கால் அதற்குப் பிற்காலத்து அக்குறுக்குத் துறையில் வசித்துத் தற்காலம் பரிபூரணமாகிய பிரஹ்ம நிஷ்ட பண்டித பிரஹ்மஸ்ரீ சிவானந்த சுவாமிகள் தமக்கு நண்பாய் விளங் கும் இந்நூலாசிரியாது குருமூர்த்தியாகிய ஆன்மாராம உபசாந்த சித்தவாக விளங்கிய ஸ்ரீலஸ்ரீ முத்தானந்த சுவாமிகளுக்கு க்ஷேம சமாச்சாரங்களைக்குறித்து எழுதுங் கடிதந்தோறும் முதலிற்றிரு சிவையாகத் தலைப்பில் ஒவ்வொரு செய்யுள் வரைந்து பின்னர்க் குறித்த விஷயங்களை யெழுதுவது வழக்கம். அவற்றுள் ஒரு செய் யுள் வருமாறு "முன்னமே நம்மையாண்ட முத்தனுஞ் சுகனையன் றிப், பின்னை யாருள்ளா ரிந்தப்பெருங்கடற் புவியிற்கீழ்மே, லன்னவ னடியே தஞ்சமென்னயா மடைவேமானுன்' மன்னியவின்ப வீட் டில் வாழ்வது திண்ணர்தானே" எனவரும். மற்றும் பலவுள. இவை இம்மரபிலுள்ள சாதுக்களுக்கும் அன்பர்களுக்குந் தெரியாத தன்று. இவ்வனம் மேற்கூறிய சுவாமிகள் எழுதுதலை யறிந்து தாமும் ஸ்ரீமுத்தானந்த தேசிகர்மீது நிதிரூபமாக இந்நூலின் மூன்றுவது முதல் பன்னிரண்டாவது வரையுள்ள பத்துச் செய் யுட்கள் கூறினர். பின்னர் அதுகாரணமாக ஒவ்வொரு காலங்க ளில் தமக்குத் தோன்றிய வநுபவங்களை அப்போதப்போது கவி களாக்கிச் சுமார் ஐந்தாறு மாசங்களானபின் அவற்றைக் கூட்டிப் பார்க்குமிடத்து நூற்றைம்பது கவிகளுக்கு மேலாயின. அப்பால் அவற்றைக்கொண்டு சென்று தமது ஆசிரியராகிய ஸ்ரீமுத்தானந்த சுவாமிகளது திருவடியில் வைத்துவணங்க, அப்பாக்களின் கருத் துக்களைத் தம்மோடு சகவாசியாகிய ஸ்ரீலஸ்ரீ அண்ணாமலைச் சுவா

மிகளும் தாமும் உய்த்துணர்ந்து அவ்வொவ்வொரு பாக்களும் ரோகவாவது பரம்பரையாகவாவது ஆனந்த சொரூபமாகிய ஆத்துமாவையே விளக்குந் தன்மையையறிந்து இப்பாக்களை ஓர் நூலாக்கி அதற்கு ஆத்துமானந்தவிளக்கமெனக் காரணப்பெயரிட்டுக்கொண்டு வருகவென்று ஆஞ்ஞாபிக்க, அவ்வாறே இவ்வாசிரியர் அப்பாக்களின் பொருளுணக்கங்களை ஒருவாறநுசரித்துப் பிரிக்குமிடத்து ஒன்பது வகையாகப் பிரிவுபட்டமையால் அவ்வொன்பதிற்கும் மேற்கூறிய முறையே ஞானசாதனமுதல் உறுவதுகூறல் வரையுள்ள பெயர்களைக் கற்பித்துச் சாதனவியலிற் குறைவுபட்டிருக்கின்ற உறுப்புகளைச் சில கவிகள் சொல்லி நிரப்பி இக்குருமூர்த்தியைத் துரியவாச்சிரமத்தின்பொருட்டு அடைதற்கு முன்னரே வாக்கியோபதேசத்தாலும், சாஸ்திரசிரவணத்தாலும் முறையேயடையப்பட்ட திருப்போரூர் ஸ்ரீசிதம்பரதேசிகர், சோழவந்தான் ஸ்ரீசிவப்பிரகாசதேசிகர் ஆகிய இவர்களின் தோத்திரப் பாக்களை யியற்றி முறையே முன்வைத்து நூலின் ஈற்றில் வாழ்த்துக்கவியொன்றமைத்து நூற்றெழுபது பாக்களாற் பூர்த்திசெய்து ஆத்துமானந்த விளக்கம் எனப் பெயர்வரைந்தனர். அக்காலத்தில் இவற்றையெல்லாம் இவ்வாசிரியரால் அறிந்த எனது பிரேரணையால் முத்துக்குமாரபுரம் மகா-ா-ா-ஸ்ரீ மு. சு. சி. ஆ. சுப்பாரெட்டியாரவர்கள்செய்த பொருளுதவியைக்கொண்டு இந்நூல்மூலம் 1910வது வருஷத்தில் அச்சிட்டு கொல்லம் 1086-ம்ளு சித்திரைமீ சிவகிரி பட்டிமடத்தில் நடந்த ஸ்ரீமத்சங்கராசாரிய சுவாமிகள் ஜயந்திமகோற்சவத்தில் ஸ்ரீமத்முத்தானந்த சுவாமிகள், ஸ்ரீமத் அண்ணாமலைச் சுவாமிகள் முன்னிலையில் சாதுக்களும் அன்பர்களும் நிறைந்த சபையில் பொன்மயபுரம் மகா-ா-ா-ஸ்ரீ இலக்கணமுத்துக்கவிராயரவர்கள், சேற்றூர் கணபதிக் கவிராயரவர்கள் ஆகிய இருவர்களாலும் அரங்கேற்றி வெளியிடப்பட்டது.

அப்பால் நூலாசிரியர் திருப்புடைமருதூரில் வசிக்குங்கால் தெக்ஷிணயாத்திரைபண்ணி அவ்விடத்திற்கு வந்த வடமதுரை ஸ்ரீ கள்ளியடிச்சுவாமிகள் இந்நூற்கருத்தை முற்றுஞ் சிரவணஞ்செய்து மிகுந்த வியப்படைந்து இக்காலத்திலேயே (சுவாமிகள் காலத்திலேயே) இதற்கு உரையெழுதி முடித்துவிடவேண்டும். இல்லையானல் பொருள்கள் மாறுபட்டுப் போமென்று பலகாற் கேட்டுக்கொண்டதற்கிணங்கி 1095-ம்ளு தமது மாணுக்கராகிய முள்ளூர் சென்மல்லுக்கவுண்டரவர்களால் அக்கள்ளியடிச்சுவாமிகள் கேட்டுக்கொண்டபடியே பதமும், பொழிப்பும், கருத்தும் என்று கூறுகின்ற மூவகைபுரையுஞ் செய்வித்துத் தாமே பரிசோதித்துச் சிற்சில பாக்களுககு உதாரணத்தோடு விசேடவுரையுமெழுதி அவ்வாத்துமானந்த விளக்கவுரையைப் பிரஹ்மநிஷ்டபண்டித பிரஹ்மஸ்ரீ சிவானந்த சுவாமிகளிடங்காட்ட அவர்கள் இவ்வாசிரியரையுங் கூடவைத்துக்கொண்டு முற்றும் பரிசோதித்துச் சிறப்புக்கவியுங் கொடுத்துக் காண்டிகையுரையென்று சிறப்புப் பெயரிட்டு வழங்கச் செய்தார்கள். முற்றும் பரிசோதித்திருக்கிருர்களென்பது அவர்கள் கூறிய உரைச்சிறப்பு மூன்ருவது கவியால் நன்குவிளங்கும்.

அப்பால்நூலாசிரியர் அரிகேசநல்லூரில் வசிக்குங்கால் 1098ம்ளு பங்குனி மாசத்தில் அரிகேசநல்லூர் இயலிசை உபயபாரதிமுத்துச்சுப்பையரவர்கள், பிரஹ்மஸ்ரீ ஹரிஹர ஐயரவர்கள், மஹா-ா-ாஸ்ரீ பிரமநாயகம்பிள்ளையவர்கள, வீரவநல்லூர் மஹா-ா-ஸ்ரீ வை. சு. ந. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் ஆகிய இவ்வுத்தமர்களுக்கு இந்நூலை அச்சிட்டு முடிக்கவேண்டுமென்று மிகுந்த விருப்பமுளதாய்த் தாங்களே பொருள் யாசிக்கத்துணிந்து நூலாசிரியரைச் சாக்ஷிமாத்திரமாகச் சகாயத்திற்கு வரவேண்டுமென்று உடம்படுத்திக்கொண்டு அவ்விடங்களில் யாசித்தது சுமார் ரூபா ஒநூறும்,

நூலாசிரியரவர்கள் உத்திரவின்படியானும் முன்ஞூர் செணமல்லுக் கவுண்டரவர்களுமாகத் தூற்றுக்குடி, முதலிய இடங்களில் யாசித்தது சுமார் ரூபா இருநூறும் ஆக ரூபா நானூற்றால் இந்நூல் பாளையங்கோட்டை பிரிண்டிங்காபீசில் என்னால் புரூப்பார்த்து அச்சிடப்பட்டது.

இந்நூலின் விஷயமாக ஓர் வியப்புத்தோன்றுகின்றது. அஃதியாதெனில் இந்நூலுக் குரையெழுதி சுமார் நாலைந்து வருடங்களாயின. இதுவரையும் இந்நூலிலுள்ள இரண்டொரு செய்யுட்களைத் தவிர மற்றவைகளுக்கு மேற்கோள் காட்டவில்லை. இந்நூல் அச்சாகுங்காலமாகிய 1099-ஞு ஐப்பசிமீ முதல் நூலாசிரியர் பஞ்சதசி யென்னும் வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சி பண்ணியதன் மேல் மேற்கூறிய கவிகளுககு உதாரணங்களை மேற்படி பஞ்சதசி முதலிய சிற்சில சாஸ்திரங்களிலிருந்து எடுத்துக் காட்டியிருககின்றனர் ஆகவே அவ்வுதாரணங்கள் முன் பார்க்காததாக இருந்து சற்காலப் பார்வையால் விளங்கினதாகத் தோற்றுகிறது. அவ்வாறின்றி முன்னமே தெரிந்திருக்குமானல் உரையெழுதிய முதற்காலத்திலேயே எடுத்துக்காட்டியிருக்கக்கூடும். அங்ஙனமில்லாமையால் தற்காலமே தெரிந்திருக்கிறது. பெரும்பாலும் பஞ்சதசியே உதாரணமாக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு நூல் பார்க்காதிருக்கவும் அந்நூலிலுள்ள அருமையான அருத்தங்களெல்லாம் அக்கவிகளில் பெரும்பாலும் நிறைந்திருக்கின்றன. இதுவே இங்கு எனது மனத்திற்றோன்றிய வியப்புக்குக் காரணமாம்.

பொருளுதவி பண்ணினோர் பெயரும் தொகையும் இதை யடுத்துச் சேர்க்கப்பட்ட தனோபகார பத்திரத்தாலறியப்படும்.

இங்ஙனம்,
வீ. வீரவாகுபிள்ளை,
வீரபாண்டியபுரம்,

உ

சிவமயம்

## நூற்சிறப்புக்கவி

அரிமழம் பிரஹ்ம ஸ்ரீ சிவானந்த சுவாமிகளியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியா சிரிய விருத்தம்

சொல்லாருஞ் சிருங்கைவளர் துறவியர்கோன் பதமலரே சூடுந்து யோ
னெல்லாருந் தனைப்போல வின்பமாக் கடலாட வினிய சொல்லாற்
கல்லாரு மனமுருகி கசிந்துருக வருள்புரிவோன் காம மாதிப்
பொல்லாத குணங்களை யடைந்தவர்பாற் புகாதுகொலை புரியும் வீரன் (க)

வந்தோரா மிவன்றிருமுன் மனமதைக்காண் கிலமின்ப வாரியானே
மந்தோவின் னாளளவு மண்ணிலிவன் றனையடையா தாயுணீத்தோஞ்
சிந்தோதா னிவன்கருணைக் குவமான மிலையினியாஞ் செய்வதென்னே

தங்தோமென் றேயிவன்ருள் பாடியா டிடுவமெனத் தக்கோ
ரெல்லாம் (உ)

சந்ததமும் புகழ்ந்தேபணி தன்மையினுன் சந்திரனேர் வத
னத்தோங் கு
மந்தநகை யான்மறையி ளெளிர்வசனம் வழங்கியன்பர்
மனத்துணின்ற
வந்தகா ரந்தொலேத்தவ் வானந்தப் பேரொளியே யாக்கி
யாள் வோ
னெந்தமா ருயிரானே னிலங்குமுத்தா னந்தனென்போ
னிணையில் வள்ளல் (௩)

அன்னவன்பொன் னடிசூடு மாத்துமா நந்தனெனு மற
வோன் யா ரு
மின்னலொழிந் தானந்த வீடெய்த நான்மறையி னீறு
சொன் ன
பன்னருநற் பொருளேயெலா நன்காய்ந்து பகர்ந்தனன்றன்
பெயாாலோர் நூல்
சொன்னலமும், பொருணலமுந் துலங்கவின்ஞோர் சிறந்
துளங்ககச் சுகமாய் மாதோ (௪)

## சிவஞானபுரம்

### மகா-ள-ள-ஸ்ரீ இலக்கணமுத்துக் கவிராயரவர்களியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

கடுமனவன் சுறவொன்றே பிறவுமுறைந் தருந்துயாம்
காட்டும் பொல்லாக்
கொடும்பவசா கரத்திடைவீழ்ந் தழுன்றுதுறை யறியாது
குலேவோர்க் கம்மா
நெடுங்கதியாங் கரைசேய்த்தன் றணித்தாமற் றதற்கேகு
நெறியீ தாமெ ன்
றடுமயற்கச் சளமொழிக்கு மொளியாநன் மொழியாங்காங்
கணிபெற் றேங்க (க)

புலமலியான் மாநந்த விளக்கமெனப் புகலுமியற் புணே
யொன் றிங் கத்
தலமலியச் செய்தளித்தான் விராகமுப ரதியிரண்டுந் தழுவ
வாய்ந் த
வலமலிஞா னம்படைத்துச் சிவவேடப் பொலிவுமுள மாறு
வுண் மை
நலமுமலி தவனுன்மா நந்தனெனப் புவிபுகழ்நன் னுமன்
மாதோ (உ)

## இராஜவல்லிபுரம் என்று வழங்கிவருஞ் செப்பறை மகா-ள-ள-ஸ்ரீ சங்காசுப்பிரமணியபிள்ளையவர்க ளியற்றிய

### நிலைமண்டில ஆசிரியப்பா

பூமக ளுதற்கொரு வாமநற் றிலகமா ய்
நாமகள் வளர்வுறு சேமநல் லாங்கா ய்
வாதவூரடிகளி னீதமெய் வாக்கா ற்
பழம்பதி யென்ன விளம்பிடப் பெற்றதாய் ப்
பொலிதரு பாண்டிப் புண்ணிய நாட்டினி ன்
மலிவள நெல்லையின் வடகீழ் பாலி ற்
காவத மைந்தினின் மேவுறு மகஷ ய
பட்டினத் தின்கட் பட்டினத் தடி க
ளெனத்துற வியல்பு மனத்தினு முடைத்தா ய்
வதிதரு முத்தானந்தனவண் சீட்டரு ட்
கதிதரு ஞான கனநூ லிறுதியா ப்
பலபல வுணர்ந்த வுலகிலாப் புகழோ ன்
ஆததுமாநாதன் ஆத்துமாநந் த
விளக்கமென் றொருநூ லுளக்கஞ்ச மத னி
லேற்றியிவ் வுலகி னூற்றிசை யிருளு ம்
நீக்கின னம்ம நிகழ்ச்சியீ தோர்ந் து
பாக்கிய மனைத்தும் பயிலுமெட் டயபுர ங்
குலாவிய முத்துக் குமார புரத்தி னி
னிலாவிய ரெட்டிமார் நிலைமா புதித் தி
ஆண்டிவே டனைய னீண்டதொல் விசை ய

னற்குண மோருரு ணண்ணியிவ் வுலகி     ற்
புக்கது போன்றவோர் புருடனே யாத     வி
னெப்பய லெவருமில் சுப்பய வாண்ட     கை
தவறிலி் னூலின் புவரிசூ ழுல     கு
புகாதொன் றின்றி நுகர்வுறக் கரு     தி
எழுதா வெழுத்தினில் விழுமிதா வெழு     தி
யுதவினன் கைம்மா றெதுவிதற் குள     தே

---

## வண்ணார்பேட்டை

### வெள்ளைக்கோவில் கர்ணம் மகா-ஈ-ஈ-ஸ்ரீ சோணாசலம் பிள்ளை யவர்களியற்றிய

### நிலைமண்டில ஆசிரியப்பா

திருந்திய வேதச் சிரப்பொரு ளதனை     ப்
பொருந்தியின் புறமுயல் புண்ணியர்க் குதவி     யா
யமைத்த விவேக மாதிய வுறுப்பு     ள
சாதன நிலைபய னடைந்தார் தன்மையு     ம்
பொய்வே டமுமடம் பெய்யவி வேகமு     ம்
இறந்த தெய்துவ தற்கொவ் வியலு     ந்
துறவுறு வார்க்குத் தூய்மை பொருந்     த
வுற்ற துரைத்தலு முறுவது கூற     லு
மென்பா னியலா வுவமத் துட     னே
செந்தமிழ்ச் செய்யுளிற் சீர்பெறத் தெரிந்தி     ன்

கந்தமி லாத்துமா நந்த விளக் க
மெனப்பெய ரீந்துமுத் தானந்த னிரு தா
ளகத்தினி லமைத்துவா மூத்துமா நந்த ன்
கூறிய நூலினைக் குறைவற வோர்ந் து
தேறிய சாதன சிலரெங் நாளு ம்
அத்து விதமா மமலவா னந் த
சித்தின் மயமாத் திதியுற றிண்ண மே

மகா-ள-ள-ஸ்ரீ நே. வேலாயுதம் பிள்ளையவர்களியற்றிய

பதினுன்சு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

உலகமெலாந் தானு யோங்கிய வாத்து மாநந்த விளக்க நல்
லறிஞ
ருளங்களில் விளங்கி யவர்களுந் தன்போ லுயர்பத மடைகு
வான் கருணை
இலகவே யாத்து மாநந்த விளக்க மென்னவோர் நூலியற்
றினனு
வீசனே யுருமூன் றுய்க்குரு வடிவா யெழுந்தருள் சிதம்பர
சுவாமி
விலகலி லருள்கூர் சிவப்பிரகாச வித்தகன் விமலதே சிக
னாய்
மேம்படு முத்தா னந்தனின் னவர்கண்மெய்மையை விளக்
கிட வுணர்ந் து

லைமார் கருவிப் பகையெலாங் கடந்து காவிரீ றக்கமர்
மணிமேற்
கவிறுற விளங்கு மாத்துமா னந்த னென்னுமோர் கருணை
மாதவனே

உ

சிவமயம்

## உரைச்சிறப்புக்கவி

அரிமழம் பிரஹ்மஸ்ரீ சிவானந்த சுவாமிகளியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

சீரருஞ் சிருங்கைவளர் தேசிகமா மணிபதமே சென்னி
சூடும்
பேரருண் மூர்த்தினர் தக்கருணைப் பெருங்கடலிற் பிறங்குவான்
காரருமெய்ஞ்ஞானி யாத்துமா னந்தனவி னல்ல நூற்குக்
காரரும் பொழின் முள்ளூர்ச் சென்மல்லுக் கவிஞனுரை
கழறினனே (க)

கழறியதன் காரணந்தர்க் காதிகற்றுத் தனைமதிக்கக் களன்க
டோறு
மூழுறி யுண்மை யறியாது விடயமதி லுளம்வீழ்த்தி யுழலி
லென்றுஞ்

சூழுமன மடக்கியுண்மைச் சகமுட்லே நலமென்று சொரு
பர்தோ யு
மழகுறுங் வடமதுரைக் கள்ளியடி யடிகள் செய்த வாணே
தா னே (உ)

நாலுமுறை யுந்தாமே நுவன்றவர்தம் பெருமையினை நோக்
குவோர்க் கு
மேலுமேலும் வியக்க விளக்குமெனில் யாமுரைத்தன் மிகை
யே யன் றோ
ஆலுமா னவாரத்து மாநந்த னூலொடுரை யமைந்து நிற்
ற ல்
பாலுடன்றேன் கலந்துநிற்கும் பண்பாகும் பண்டிதர்தேர்
பண்பு மா மே (ரு)

அரிகேச நல்லூர்

பிரஹ்மஸ்ரீ பு. வ. முத்துச்சுப்பபாரதி யவர்களியற்றிய

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

உளக்கசடு களைகிக்கி முத்தானந்த னுபதேச வமுதருத்தி
யொளிர்ஞா னத் தை
முளைக்கவைத்த பெருமையியர் தான்மா னந்தன் முமுக்ஷுக
ளைப் பியசிக்க முத்தர் மோனி

துளக்கியுவப் புறத்தமிழின் செய்யுளாகச் சொல்லியவான்
மாநந்த விளக்க நூற்குக்
களக்கமற வியூரக்கியான முறைத்தான் முள்ளூர்க் கலே
ஞானி செனமல்லுக் கவிஞன் மாதோ

மகா-ா-ா-ஸ்ரீ கந்தசாமியாரவர்களியற்றிய

நிலமண்டில ஆசிரியப்பா

பைங்காற் கொன்றையுஞ் செங்கால் வெட்சியு ஞ்
சேடலுஞ் செருந்தியுங் கோடலும் பகன்றையு ம்
பாசிலைக் குளவியு மாசில்செவ் வந்தியு ம்
மயிலையு மௌவலும் பயில்பூந் தாழையு ம்
குரவமு மரவமுங் குராவுடை யதிரலு ம்
நந்தியுஞ் செயலையுஞ் சந்துமல் லிகையு ம்
சித்திரக் கைவினை வித்தகர் தமது ன்
மெய்த்திறம் விளக்கிய வுய்த்துணர் வோ டு
நன்னிறக் கிழியிற் பன்னிறக் குழம்பி ன்
பொறித்த வெழினியை நெறிப்பட விரித்தெ ன
பன்மலர் துறுத்த நன்மலர்த் துடவைசூ ழ்
பூவிற் பொலிமகண் மேவித் திகழு ங்
கோவிற் பதியுறு சேவற் கொடியு டை
புண்ணியன் றந்தையாங் கண்ணுதற் பானெ ன
மண்ணுள மாந்தர் கண்ணு முயர்வு று
முத்தா னந்தன் கொத்தார் யலர்பு னை

சேவடி படருந் தாவரு முளத்த ன்
உலகு மதனிடை நிலவிய பொருளு ங்
கான்முயற் கொம்பும் வான்முக முளரியு ங்
கயிற்றிடை யரவு மயிற்றலை யுறீஇ ய
கட்டையிற் கள்வனும் வட்டைசெல் லுநரு க்
கூசாபூமியின் மாசறத் தோன் று
முரத்துனைத் தேருங் காரத்தறு மலைசே ர்
முரளிடை யுற்றுத் திரளொளி வீசு ம்
வெண்பொனும் போலப் பண்பில்பொய் யா மென
னுனெறி யானு மோனமா ருருவ ர்
திருந்திய நுனித்துணர் பொருந்துமாற் றானு ங்
கண்ணிக் கண்ணி நண்ணுமெய்த் துறவி ற்
சென்றவன் புலனை வென்றவன கந்த ழி
யுற்றவ னதனைப் பற்றெனப் பற்றி ய
வேதுவி னாலே கோதிலா வுருவ ர்
ஆத்துமா நந்தனென் றேத்திய பெயரா ன்
என்னையு நண்பனு முன்னிய புனித ன்
இம்பரின் மேவுஞ் செம்பொருட் செல்வ ன்
ஆதவி னாற்றான் காதலி னால டை
செப்புதற் கரிய வப்பிரதி பந்த
சமாசத் துடன்வரு மபரோக்ஷ சாக்ஷா த்
காரஞா னத்தினை வாரமுற் றடைந் த
மக்களு மடைந்து தக்கவின் புற வே

சீர்த்தியுற் றிலகு மாத்துமா நந்த
விளக்கமென் றோருநூ றுளக்கறச் செய்தான்
அன்னவன் கண்ட நன்னர்மெய் யிழைக்கு
தெளிவுரை யொன்று வெளிவர வேண்டுமென்
றுள்ளுநர்க் குதவு நள்ளியேய் கொடையுடை
கள்ளி யடியுறாஉந் தெள்ளிய முனிவன
ஆணைதந் தருளத் தாணுவினடி தொழூஉம்
மனநல னுடைய செனமனுக் கௌடன
காண்டிகை யுறுப்பின் மாண்புரை யியற்றினன்
இந்நிலம் புகழவஃ தென்றும்வா ழியவெனன

சேற்றூர்

மஹா-ா-ாஸ்ரீ அபிஷேகசுந்தரத்தேவரவர்க ளியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

முத்தாநந் தப்பெருமான் றனைப்பரிவாற் பூசித்து முதல்வா சீவன்
முத்தாநந் தற்கரிய மூர்த்தியே மெய்ப்பொருளே மூவாக்கண்ணி
யத்தாநந்தப்பிரஹ்ம நீயென்னவுபதேசித் தாளாக்கொண்ட
வத்தாநந் தாவொளியே யென்றுதினந் தோத்திரஞ்செய்யமல ஞானி (க)

ஆத்துமா நந்தனென்பான் றன்பெயரா னூலியற்றி யனுக்
கட் கேநீங்
காத் * துமா நந்தவளித் தானதனு ளோர்கவிகற் றறிந்
தோர் பந்த
நீத்துமா நந்தமுரு வின்படமெனத் தேர்ந்திடுவார் நிலத்தோ
ரெல்லா
மேத்துமா நந்தவடி விவ்விறைவ னுற்செய்த விந்த நூற்கு
(உ)

சிறப்புறுமுள் ளூர்வளருஞ் செனமல்லுக் கவிஞனெனத்
திகழுஞ் செம்மல்
மறப்பறவே யிலக்கணமு மிலக்கியமுந் தருக்கமுதல் வயங்
கக் கற்ற
திறப்படுவித் துவத்தனத்தான் மேற்கோள்கள் பலகாட்டிச்
சிறிதுஞ் சங்கை
யறப்புரையி லுரைவிரித்தா னதன்பெருமை யுரையறுத்
திங் கறையப் பாற்றே (ங)

* து - வருத்தத்தைத்தருகின்ற வெனப் பொருள்படும்

## நூல் உரைச்சிறப்புப் பாயிரம்

இந்நூலாசிரியர் மாணாக்கர் அரிகேசனல்லூர் பிரஹ்மஸ்ரீ
M. ஹரிஹர ஐயரவர்கள் இயற்றிய
கொச்சகக் கலிப்பா.

சீராரு நான்மறையுஞ் செம்முளரி யுறைபவனு ம்
காராருந் திருமேனிக் கடவுளும்போற் றெடுப்பநித ம

வாாரு நகிற்கயற்கண் மங்கையிரு விழிகளிப் ப
வாாரு மிாசதத்தா லியன்றசபை யினினடிப்போ ன் (க)

எட்டெட்டு விளையாட லினிதுமகிழ்ந் தியற்றிய தை
னெட்டுற்ற வரைகளுநன் னீர்களுநின் றறிவிக்ு ம்
மட்டுற்ற மலர்ப்பொழிலின் வளம்வயலின் வளமலியு ம்
முட்டற்ற மொழிப்புலவர் முத்தமிழ்ச்சங் கம்முழங்கும்
(உ)

பாண்டியனுட் டினிலரிகைப் பதியதனி லொளிர்மடத் தே
காண்டகைய கருணையொாா காாமுற்ற தெனக்கதிப்போ
ன்
சேண்டருநாட் டினர்பதமுஞ் சீரியதன் றெனமதித்து ப்
பூண்டதுற வினன்பூதி பொலிதிரிபுண் டாறுதலான் (ங)

கண்பெற்ற நெற்றியினன் கறைபெற்ற கண்டத்த ன்
பெண்பெற்ற பாகத்தன் பிறைபெற்ற செஞ்சடில ன்
வெண்பெற்ற வூர்தியினன் விரைபெற்ற கொன்றையின ன்
மண்பெற்ற புன்சமய மருணீக்க மனங்கொண்டு (ச)

சங்கரன்கங் காளன்றூர்ச் சடிதானே மானிடனாய் ச்
சங்காப்பேர்ப் புங்கவனாய்த் தாணிதனிற் சன்மித்து ப்
பொங்கியபுன் சமயவிருள் போகவறு சமயவொ ளி
யெங்கும்வியா பித்துநிலத் திலகவெழு ஞானவெல்லோ ன்
(ரு)

காதார்ந்த கருவிழியார் காமமெனுங்கண்ணிப டா
வேதாந்தி வேதாவும் வெள்ளைநிறத் தியுமாகு ம்
போதார்ந்த மின்னைவினை போற்றுமண்ட னமிசர னை
வாதால்வென் றுயர்சிருங்கை வண் பதியிற் சாரதைக்கு (சு)

பீடமொன்று நிறுவியிந்தப் பேருலகிற் சகற்குருவாம்
பீடுகெழு பெயர்பெற்ற பேருளா ளன்பத மே
சூடுமுடி யினன்றேற்றங் துடைக்குமுயர் வேதாந்த
வீடில்கடற் குளித்தழியா வின்பமுத்தங் கண்டெடுத்
தோன் (எ)

தான்கண்ட வின்புலகந் தான்காணக் கருணையொடு
வான்கொண்ட லெனப்பொழிவோன் வாகுணன்முத் தா
னந்தன்
தேன்கொண்ட தாமரையின் செவ்வியநன் மலரடிகள்
ஊன்கொண்ட வுயிர்க்கமுதா வுளங்கொண்டு *சாணடைந்து
(அ)

தினம்போற்றி வேதத்தின் சிரப்பொருளைச் சிரவணித் தே
அனம்போன்மற் றதன்பொருளை யாசகற்றிச் சிந்தித் து
மனம்போலும் புலன்வசமா வாத்தெளிந்து புதைத்துளதன்
றனம் போற்றேன்றிய மின்ப சாகரத்தின் மூழ்கினேன்(கூ)

ஆத்துமா னந்தன்றற் கத்துவிதப் பொருளுரைத் த
சாத்துவிகன் றேத்திரமாய்ச் சாற்றவிரைம் பாவத னு

* சாண் - புகலிடம்

லாத்துமவி சாமிணையி னன்றெழுந்த வறிபூ                    தி
பூத்த தமிழ்ப் பாக்கள் பல புகன்றுசான் பாற்காட்ட          கo

கண்டனைத்தும் பாக்களினுட் கருத்தனைத்து நுனித்து
ணர்ந்து
உண்டுகொண்மற் றிவைக்குமைப்ய வுவமையென வுண்
மகிழ்ந்து
கண்டுமொழிக் குருவிவற்றைக் காரணப்பேர் நூலாக்கி   க்
கொண்டுவா வென்றுரை கொடுக்கமறை மொழியாக (கக)

அந்தமொழி யகங்கொண்டாங் காரொடுமூன் றியலாக்கி ச்
செந்தமிழ்ப்பா சிலசேர்த்துச் சிவபாச் சேர்க்கையினை
மந்தமுமு [illegible]க்களுமுண் மகிழ்ந்தறியச் சாதனமாய்ச்
சந்தமறை யீறறிந்தோர் தங்களுள மின்புறவே          (கஉ)

இயற்றியவர் நூலறிவோர்க் கீறிவின்ப மீவதுவாய்
மயற்றிமிர மகற்றுவதாய் மணிவிளக்கின் வயங்குதலா
லியற்றிருப்பே ரிட்டனனுன் மாநந்த விளக்கமென
வயற்றனடி யவர்களுள்ளத் தார்த்தியும்பூர்த் தியையுறவே
[கங]

அந்நூலை யவனியுளா ரனைவோரு மறிந்தவித்          தை
துன்னுமற் கடத்தேறத் தோற்றஞ்செய் திடவெண்ணி
பொன்னேரும் பூமபொழில்கள் பொலியுமூர்துக் குமரபுர
மன்னுஞ்சுப் பையமேலோன் மகிழ்ந்தச்சிற் பதிப்பித்தான் கச

தனக்குவமை யிற்சாந்தற் சார்ந்துதமிழ் பயின்றேமு
ளனக்கினிய நண்பன்முள்ளூர் எழிற்கவுண்டர் குலதிலகன்
கனக்குழலார் முதன்மூன்று காமமுங்கண் காணாதான்
மனக்குவகை யுறக்கற்ற மாண்வேதாந் தக்கலைஞன் [கடு]

தனமல்ல தனமுலகிற் றவம் போலத் தக்கதெனு
முனநல்ல குரவனுரை யுயர்தமிழ்நூ லுட்கருத்தைக்
கனமுள்ள மூன்றுறுப்பிற் காண்டிகையு ரையின்விளக்கிச்
செனமல்லு சகமுழுதுஞ் செறிபுகழ்பெற் றனன்மன்னே
[கசு]

# ஆத்துமாநந்த விளக்கம்

## விஷய அட்டவணை

சிவமயம்

# ஆத்துமாநந்த விளக்கம்

## மூலமும் உரையும்

[மங்கலம்]

[கலிவிருத்தம்]

யாவுந் தோன்றி யிருந்தழி வுற்றி டு
மேவன் பாலவ் விணையில்க ணேசனு ந்
தேவ தேவ னென்சிற்றறி வுள்ள மு
மேவி நின்று விளம்புவன் மெய்மை யே

இதன் பதப்பொருள். யாவும் - [சராசரப்பிரபஞ்சங்கள்] எல்லாம், எவன்பால் - எவனிடத்தில், தோன்றிஇருந்து அழிவு உற்றிடும் - உண்டாகி நிலைபெற்று நாசத்தை யடையுமோ, அ இணையில் - அந்த வொப்பற்ற, கணேசன் ஆம் - விநாயகக் கடவுளாகிய, தேவ தேவன் - தேவர்களுக்கெல்லாந் தேவனானவன், என் சிற்றறிவு உள்ளமும் - எனது சிஞ்சிஞ்ஞ அந்தக் கரணத்திலும், மேவிநின்று -[பெருங் கருணையினால்] விருப்பமுற்றிருந்து, மெய்மை விளம்புவன் - ஆன்ம சொரூபத்தின் உண்மையை அறிவிப்பன். என்றவாறு,

பொழிப்புரை. சராசரப் பிரபஞ்சகளெல்லாம் எவனிடத்தில் உண்டாகி நிலைபெற்று நாசத்தை யடையுமோ அந்த வொப்பற்ற விநாயகக் கடவுளாகிய தேவர்களுக்கெல்லாந் தேவனானவன் எனது சிஞ்

சின்ரு அந்தக்காணத்திலும் பெருங் கருணையால் விருப்பமுற்றிருந்து ஆன்ம சொரூபத்தின் உண்மையை அறிவிப்பன். எ—று.

கருத்துரை. விநாயகப் பெருமான் என்னுடைய இருதயத்தில் விளங்கிநின்று உண்மை ஞானத்தை அறிவிப்பன். என்பதாம்.

## [குரு வணக்கம்]

### [ சிதம்பர சுவாமிகள் ]

விருத்தம்

க. மனம்வேறு வத்துவினு மென்ப ரறியா ரதன்று வாகி
யத்து ந்
துனுமொலி யாதியி னென்றுந் தோயாத வதன்வடிவந்
தோடமின் றி
யனுபவமா மெனிலதுவத் தனுபவமா மதனுலென் றறைந்
தான் ஞா ன
தினகாரு யமரபுரி விளங்கு சிதம் பாகுருவென் சிந்தை
யானே (க)

இ-ள். அறியார் - [சுருதிகுரு சுவானுபவங்களால்] உணராதவர் கள், மனம் - அந்தக்காணத்தை, வத்துவினும் - பிரஹ்மத்தினும், வேறு என்பவர் - அந்நியமென்று சொல்லுவார்கள், அது அன்று - அப்படி யல்ல [எதனுலெனின்], வாகியத்தும் - [உள்ளிலும்]? வெளியிலும், துனும் ஒலியாதியின் - பொருந்துகின்ற சத்தாதி விஷயங்களில், ஒன்றும் தோயாத - ஒன்றையுமடையாத. அதன் வடிவம் - அவ்வந்தக் காணத்தின் சொரூபமானது, தோடமின்றி-சந்தேகமில்லாமல், அனு பவம் ஆம் எனில் - [ஒருவனுக்கு] அநுபவமாகுமானுல், அது - அவ் வநுபவம், வத்து அநுபவம்[ஏ]ஆம் - பிரஹ்மாநுபவமேயாம், அதனுல்

என்று - அக்காரணத்தினல், [பிரஹ்மத்தினும் அந்த மனத்தை அந்நிய மென்று சொல்வது உண்மையல்ல] என்று, அறைந்தான் – [எனக்கு] உபதேசித்தவராகிய, ஞானதினகரனைய் – ஞானசூரியனுகி, அமரபுரி விளங்கு - திருப்போரூரின்கண்ணே பிரகாசிக்கின்ற, சிதம்பரகுரு – சிதம்பரதேசிகர், என் சிந்தையான் - என்னுடைய இருதயமே கோவி லாக வாழ்வாராக. எ–று.

பொ-ா. சுருதிகுருசுவாநுபவங்களா லுணராதவர்கள் அந்தக் காரணத்தைப் பிரஹ்மத்தினும் அந்நியமென்று சொல்வார்கள் அப்படி யல்ல எதனலெனில் உள்ளிலும் வெளியிலும் பொருந்துகின்ற சத் தாதி விஷயங்களில் ஒன்றையுமடையாத அவ்வந்தக்காரணத்தின் சொரூபமானது சந்தேகமில்லாமல் ஒருவனுக்கு அநுபவமாகுமானல் அவ்வநுபவம் பிரஹ்மாநுபவமேயாம் அக்காரணத்தினல் பிரஹ்மத்தி னும் அவ்வந்தக்காரணத்தை அந்நியமென்று சொல்வது உண்மையல்ல வென்று எனக்குபதேசித்தவராகிய ஞானசூரியனுகித் திருப்போரூ ரின் கண்ணே பிரகாசிக்கின்ற சிதம்பர தேசிகர் என்னுடைய இருத யமே கோவிலாக வாழ்வாராக. எ-று.

அநுபவமே என்பதின் ஏகாரம் விகாரத்தாற் ருெக்கது அறைந்தான் என்பது வினையாலணையும் பெயர் உபதேசித்தவராகிய என்னும் குறிப்புப் பெயரெச்சம் சிதம்பர தேசிகர் என்னும் பெயர் கொண்டது ஞானத்துக்குச் சாதனமாகிய குணங்களை ஞானமென்றாற் போல பிரஹ்மானுபவத்திற்குச் சாதனமாகிய அருவமனத்தின் அநுப வத்தைப் பிரஹ்மாநுபவம் என்றார்.

க-ா. சிதம்பர தேசிகர் என் சிந்தையே கோவிலாக வாழ்வா ராக, எ-ம். (௧)

[வெண்பா]

2. இன்னங் கருவா யிடாவழிபோ ரூரிறைவா
முன்னங் கருவாய் மொழிந்தனையே—என்னுழையும்
பள்ளத்து நீர்போலப் பாய்ந்த கருணைநல ம்
விள்ளுந் தாத்ததல வே.

இ-ள். போரூர் இறைவா-திருப்போரூரின்கண் ணெழுந்தருளிய எனது முதல்வராகிய சிதம்பரதேசிகரே, இன்னம்-இனிமேல், கருவாய்இடாவழி-பிறப்படையாத மார்க்கத்தை, முன்—முன்னொரு நாளில், அங்கு-அத்திருப்போரூரின்கண்ணே, அருவாய்—அருவாய், மொழிந்தனை-[சொப்பனத்தில் எனக்கு] உபதேசித்தருளினீர், என்னுழையும்-[எளியேனுடைய] என்னிடத்திலும், பள்ளத்துப்பாய்ந்த-தாழ்ந்த நிலத்தினிடத்து [விரைவிற] செல்லுகின்ற, நீர்போல-ஜலத்தையொப்பாக, கருணைநலம்-[விரைவிற்]செய்தகிருபையாகியஅற்நன்றியானது, விள்ளும் தாத்தது அல்-[என்னுற்] சொல்லுந் தாத்தையுடையதல்ல. எ-று.

பொ—ரை. திருப்போரூரின்கண்ணெழுந்தருளிய எனது முதல்வாகிய சிதமபரதேசிகரே இனிமேற் பிறப்படையாத மார்க்கத்தை முன்னொருநாளில் அத்திருப்போரூரின்கண்ணே அருவாய்ச் சொப்பனத்தில் எனக்குபதேசித்தருளினீர் எளியேனுடைய என்னிடத்திலும் தாழ்ந்த நிலத்தினிடத்து விரைவிற் செல்லுகின்ற ஜலத்தையொப்பாக விரைவிற் செய்த கிருபையாகிய அற்நன்றியானது என்னுற் சொல்லுந்தாத்தையுடையதல்ல. எ-று.

க—ரை. திருப்போரூரின்கண் சிதம்பர தேசிகர் சொப்பனத்தில் விளங்கித் தனக்கு ஞானுபதேசஞ் செய்த பெருங் கருணையை வியந்தது. எ-ம். (2)

[சிவப்பிரகாச சுவாமிகள்]

[விருத்தம்]

௯ தவப்பிரகா சகருனத்துந் தவமுயல்வா ருளத்துமொன்
[றூச் சாக்ஷி யாகி
யெவெப்பிரகா சங்களையு மிலகுவிக்குங் காரணமா
[யெண்முன் னுமர்
நவப்பிரகா சங்களுமாய் நாமடையும் புகலிடமாய் நன்
[ணு நின்ற
சிவப்பிரகா சன்சரண சிந்தனைவந் தனைகடினஞ் செய்
[கு வாமே. (௯)

இ-ள். தவம்-[இந்திரிய நிக்கிரக முதலிய] தபஸையுடைய, பிரகாசகர் உளத்தும்-சுயம்பிரகாச சொரூபராகிய ஜீவன் முத்தர்களுடைய அந்தக்கரணத்திலும், தவம் முயல்வார் உளத்தும்-[இந்திரிய நிக்கிரக முதலிய] தபசில் முயற்சி செய்பவர்களாகிய முமுக்ஷுக்களுடைய அந்தக்கரணத்திலும் [இவ்விருவகையினருமல்லாத பாமரர் முதலிய சர்வப் பிராணிகளுடைய அந்தக்கரணத்திலும்], ஒன்றுச்சாக்ஷியாகி-பொருந்தாமல் [எல்லாவற்றையும் ஏற்றத்தாழ்வின்றி] அறிபவராகியும், எ-எப்பிரகாசங்களையும்-[சூரியன் முதலாகிய] எந்த எந்த ஒளிப்பொருள்களையும், இலகுவிக்கும் காரணமாய் - பிரகாசிப்பிக்கும் அவற்றின் காரண வஸ்துவாயும், எல்முன் ஆம்-சூரியன் முதலாகிய, நவப்பிரகாசங்களும் ஆய்-அந்தப்புறம்மையாகிய பிரகாச வஸ்துக்களுந்தானேயாகியும், நாம் அடையும்-[சமுசார துக்கத்துக்குப் பயந்த] நாமனைவருஞ் சாருதற்குரிய, புகல்இடம் ஆய்-அடைக்கல ஸ்தானமாகியும், நன்னுநின்ற-கிடைத்திருக்கின்ற, சிவப்பிரகாசன்-சிவப்பிரகாச தேசிகருடைய, சரண சிந்தனை வந்தனைகள்-திருவடிகளைத் தியானித்தலும் நமஸ்கரித்தலும், தினம் செய்குவாம்-அனுதினமுஞ்செய்வாம் எ-று.

பொ-ரை. இந்திரிய நிக்கிரக முதலிய தபசையுடைய சயம்பிரகாச சொரூபராகிய ஜீவன் முத்தர்களுடைய அந்தக்கரணத்திலும் இந்திரிய நிக்கிரக முதலிய தபசில் முயற்சிசெய்பவர்களாகிய முமுக்ஷுக்களுடைய அந்தக்கரணத்திலும் இவ்விருவகையினருமல்லாதவராகிய பாமரர் முதலிய சர்வப்பிராணிகளுடைய அந்தக்கரணத்திலும் பொருந்தாமல் எல்லாவற்றையும் ஏற்றத் தாழ்வின்றி அறிபவராகியும் சூரியன் முதலாகிய எந்தவெந்த ஒளிப்பொருள்களையும் பிரகாசிப்பிக்கும் அவற்றின் காரண வஸ்துவாகியும் சூரியன் முதலாகிய அந்தப்புறமையாகிய பிரகாச வஸ்துக்களுந் தானேயாகியும் சமுசார துக்கத்துக்குப் பயந்த யாமனைவருஞ் சாருதற்குரிய அடைக்கல ஸ்தானமாகியும் கிடைத்திருக்கின்ற சிவப்பிரகாச தேசிகருடைய திருவடிகளை அனுதினமுந் தியானித்தலும் நமஸ்கரித்தலுஞ் செய்வாம். எ-று.

பிரகாசங்கள் என்பன ஆகுபெயர். எச்சவும்மையால் பாமரர் முதலியன வருவிக்கப்பட்டன.

க-ரை. சிவப்பிரகாச தேசிகருடைய திருவடிகளை அனுதினமுந் தியானித்து வணங்குவாம். எ-ம். [௩]

[முத்தானந்த சுவாமிகள்]

௪ குளிரகற்று டையிற்றோன்று சித்திரப்பே தையினின் [பங் குறித்தத் தூசால்
வளநளிரை யொழிக்காது மறுக்கமுற்றான் போன்மரு [ளேன் மருளாற் றோன்றி
யுளசகமின் றகம்புறமுன் னுருவேகா ணெனவென்னை [யுதியா வின்ப
விளைவருளி யாண்டமுத்தா னந்தகுரு வடிமுடியின் [மிலைச்சி வாழ்வாம் (௪)

இ-ள். குளிர் அகற்று ஆடையில் - [தேகத்துக்குண்டாகும்] குளிரை நீக்குகின்ற [சித்திர] வஸ்திரத்தில், தோன்று சித்திரப்பேதை யின் - [எழுதப்பட்டு] விளங்காநின்ற சித்திரப்பெண்ணினிடத்து, இன்பம்குறித்து - சுகத்தை விரும்பி, அத்துசால் - அச்சித்திரவஸ்திரத்தினால், வளநளிரை - [தேகத்துக்குண்டாகும்] மிகுந்தகுளிரை, ஒழிக்காது [போர்த்துப்] போக்கிக்கொள்ளாமல், மருக்கமுற்றான்போல் - [அச்சித்திரப் பெண்ணைப் பார்த்துப்பார்த்துக்) காமமயக்கமடைந்தவனை யொப்பாக, மருளேல் [ஆனந்தவடிப்பிரஹ்மத்தின் கண் கற்பிதமாகத்தோன்றியுள்ள சத்தாதி விஷயங்களின் விருப்பத்தால் ஆன்ம வடிவப் பிரஹ்மமேதானென் றறிந்து பிறவித்துன்பத்தைப் போக்கிக் கொள்ளாமல் அவ்விஷயங்களையே தேடித்தேடி] நீமயங்காதே, மருளால் — அஞ்ஞானமயக்கத்தால், தோன்றி உளசகம் — உண்டாகியிருக்கப்பட்ட பிரபஞ்சமானது, இன்று - [ இரச்சுவிற் சர்ப்பம்போல உண்மையில் ] இல்லாததாம், அகம்புறம் - உள்ளிலும் வெளியிலும், உன் உருவே - [பரிபூரணசச்சிதானந்தகனப்பிரஹ்ம மாகிய] உனது எதார்த்த சொருபத்தையே காண் என - தரிசிப்பாயென்று, உதியாஇன்ப விளைவு அருளி - அநாதியிலே [சித்தித்துள்ள துக்கநிவிருத்தி] சுகப்பிராப்திவடிவ மோக்ஷமாகிய பயனைகொடுத்து, என்னை ஆண்ட - என்னை இரக்ஷித்த, முத்தானந்த குரு அடி - முத்தானந்த தேசிகருடைய திருவடியை, முடியின்மிலைச்சி வாழ்வாம் - சிரசின்மீது சூடிவாழ்வாம் யாம், எ-று.

பொ-ரை, தேகத்துக்குண்டாகும் குளிரைநீக்குகின்ற சித்திரவஸ்திரத்தில் எழுதப்பட்டு விளங்காநின்ற சித்திரப்பெண்ணினிடத்துச்சுகத்தைவிரும்பி அச்சித்திரவஸ்திரத்தினால் தேகத்துக்குண்டாகும் மிகுந்த குளிரைப் போக்கிக்கொள்ளாமல் அச்சித்திரப் பெண்ணைப் பார்த்துப் பார்த்துக் காம மயக்கமடைந்தவனை யொப்பாக ஆனந்தவடிவப் பிரஹ்மத்தின்கண்கற்பிதமாகத் தோன்றியுள்ள சத்தாதி விஷயங்களின் விருப்

பத்தால் ஆன்ம வடிவப் பிரஹ்ம மேதானென்றறிந்து பிறவித்துன்பத்தைப் போக்கிக்கொள்ளாமல் அவ்விஷயங்களையே தேடித்தேடி நீ மயங்காதே அஞ்ஞான மயக்கத்தா லுண்டாயிருக்கப்பட்ட பிரபஞ்சமானது இரச்சுவிற் சர்ப்பம்போல உண்மையில் இல்லாததாம் உள்ளிலும் வெளியிலும் பரிபூரண சச்சிதானந்த கனப் பிரஹ்மமாகிய உனது எதார்த்த சொரூபத்தையே தரிசிப்பாயென்று அநாதியிலே சித்தித்துள்ள துக்க நிவிருத்தி சுகப்பிராப்தி வடிவ மோக்ஷமாகிய பயனைக் கொடுத்து என்னை இரக்ஷித்த முத்தானந்த தேசிகருடைய திருவடியைச் சிரசின்மீது சூடி வாழ்வாம் யாம், எ—று

க-ரை, எதார்த்த ஞானத்தையும் வீட்டின்பத்தையுந் தந்தருளிய முத்தானந்த தேசிகருடைய திருவடியைச் சிரசினமீது சூடி வாழ்வாம் யாம் எ-ம். [ச]

ரு. ஊரினையும் பேரினையு மபிமானித் திறந்துபிறந் தோயா [திந்தி ப்
பாரினையு மெனையுமொரு பாலனென வருளுணோக்காற் பார் [த்து மாவி ன்
வேரினையு மறக்களைந்து பரிபூரணனந்த விமல ஞான ச்
சீரினையும் பேறினையுந் தந்தமுத்தா னந்தகுரு தேவே [போற்றி (ரு)

இ—ள் ஊரினையும் - [சரீரம் வாசஞ்செய்யும்] நகரத்தையும், பேரினையும்-[சரீரத்திற்கிட்டிருக்கும்] நாமத்தையும், அபிமானித்து-[எனது நகரம் எனது நாமம் என்று அவற்றிற்] பற்றுவைத்து, இறந்து பிறந்து—[அவ்வபிமானத்தால்] மரித்தும் ஜனித்தும், ஓயாது-நீங்காமல், இந்தப் பாரில்-இப்பூமியின்கண்ணே, வையும் எனையும்-வருந்துகின்ற எனனை, யும்ஒருபாலன என-[தமது சிஷ்யவர்க்கத்தவருள்ளே] ஒருமாணாக்கனென்று [மதித்து] அருள நோக்கால் பார்த்து— கிருபைக்கண்ணால் ரக்ஷி

த்த, [அப்பரிபூரணதிருஷ்டியால்], மாலின்வேரினையும் - மயக்கத்து க்குக் காரணமாகிய அஞ்ஞானத்தையும் [அதன் காரியமாகிய ஜகத்தின் சத்தியத்துவ புத்தியையும்], அறக்களைந்து - சேஷமறக்கெடுத்து, பரி பூரண ஆனந்தவிமல - அபரிச்சின்னமாயும் சுகமயமாயும் பரிசுத்தமாயு மிருக்கும், ஞானச் சீரினையும் - ஞானச் செல்வத்தையும் பேறினையும் - அதனாலுளதாகும் மோக்ஷலாபத்தையும், தந்த - கொடுத்த, முத்தானந் தகுருதேவே - முத்தானந்த தேசிகராகிய தெய்வமே, போற்றி-[உமக்கு] நமஸ்காரம்: எ—று.

பெ-ரை, சரீரம் வாசஞ்செய்யும் நகரத்தையும் சரீரத்திற்கிட்டிரு க்கும் நாமத்தையும் எனது நகரம் எனது நாமம் என்று அவற்றிற் பற்று வைத்து அவ்வபிமானத்தால் மரித்தும் ஜனித்தும் நீங்காமல் இப்பூமி யின் கண்ணே வருந்துகின்ற என்னையும் தமது சிஷ்யவர்க்கத்தவரு ள்ளே ஒரு மாணாக்கனென்று மதித்துக் கிருபைக்கண்ணால் ஈக்ஷித்த அப்பரிபூரணதிருஷ்டியால் மயக்கத்துக்குக் காரணமாகிய அஞ்ஞானத் தையும் அதன் காரியமாகிய ஜகத்தின் சத்தியத்துவ புத்தியையும் சே ஷமறக்கெடுத்து அபரிச்சின்னமாயும் சுகமயமாயும் பரிசுத்தமாயு மிருக் கும்ஞானச்செல்வத்தையும் அதனாலுளதாகும் மோக்ஷலாபத்தையும் கொடுத்த முத்தானந்த தேசிகராகிய தெய்வமே உமக்கு நமஸ்காரம் எ—று.

வேரினையும் என்ற எச்சவும்மையால் அதன் காரியம் வருவிக்கப் பட்டது. [௩]

க—ரை. தனது அஞ்ஞானத்தைக் கெடுத்து மெய்ஞ்ஞானத்தைக் கொடுத்த முத்தானந்த தேசிகரை நமஸ்கரித்தது.

௪ கண்ணாலு நடையாலு முடையாலு மைந்தருளங் (கவற்று நின் று

பெண்ணாலு மண்ணாலும் பிடியுண்டு வருந்தியவப்பெற்றி (மாற் றி

யெண்ணாலுங் கணிப்பரிய ஞானசுக கனவடி வாவெமை
(யுமாக்கு ந்
தண்ணாலும் பொலிசுக முத்தந்தனையா மகப்பேழை சார்
விப்பாமே. (சு)

இ—ள். கண்ணாலும் – பார்வையினாலும், நடையாலும் - நடையினாலும், உடையாலும் - சேலையுடையினாலும், மைந்தர் உளம் – புருஷர்களுடைய அந்தக் கரணத்தை, கவற்றா நின்ற - [மயக்கி] வருத்துகின்ற, பெண்ணாலும் – மங்கையராலும், மண்ணாலும் – [காணிமுதலிய பூமியினாலும், பிடியுண்டு - பந்தத்தையடைந்து, வருந்திய அப்பெற்றி மாற்றி-வருந்திய அவ்வருத்தத்தையொழித்து, எண்ணாலும்-மனத்தினாலும்[வாக்கினாலும்], கணிப்பு அரிய - அளவிடமுடியாத, ஞானசுக கன வடிவா - ஞானானந்தகனப் [பிரஹ்ம] சொரூபமாக, எமையும் ஆக்கும் - [மந்தர்களாகிய] எம்போலிகளையுஞ் செய்யா நின்ற, தண்ணாலும்பொலி- [விஷயவைராக்கிய முதலிய பெருமையினாலும்] சாந்த குணத்தினாலுஞ்சிறந்து விளங்கா நின்ற, சுகமுத்தந்தனை – ஆனந்தமுத்தை, யாம் அகப்பேழை சார்விப்பாம் - நாம் இருதயமாகிய பெட்டகத்திற் சேர்ப்பிப்பாம் எ—று

பொ-ரை. பார்வையினாலும் நடையினாலும் சேலையுடையினாலும் புருஷர்களுடைய அந்தக் காரணத்தை மயக்கி வருத்துகின்ற மங்கையராலும் காணி முதலிய பூமியினாலும் பந்தத்தையடைந்து வருந்திய அவ்வருத்தத்தை யொழித்து மனத்தினாலும் வாக்கினாலும் அளவிட முடியாத ஞானானந்த கனப்பிரஹ்ம சொரூபமாக மந்தர்களாகிய எம்போலிகளையுஞ் செய்யாநின்ற விஷய வைராக்கிய முதலிய பெருமையினாலுஞ் சாந்தத்தினாலுஞ் சிறந்து விளங்குகின்ற சுகமுத்தை நாம் இருதயமாகிய பெட்டகத்திற் சேர்ப்பிப்பாம். எ-று

கண் ஆகுபெயர்

தண்ணுலும் என்பதற்குப் பிரஹ்மானுபவத்தட்ப நிறைந்த எனப் பொருள் கோடலுமாம்.

க-ரை, எம்மைப் பந்தத்தின் நீக்கிப் பரமானந்தமாக்கிய முத்தானந்த தேசிகரைச் சிந்திப்பாம். எ-ம், (கூ)

[கட்டளைக்கலித்துறை]

எ பொன்னே நிறையின்பப் பொக்கிச மேமெய்ப் பொருளளித்த
மன்னேகுன் ருத மணிவிளக் கேசான் மன்னினர்க்குப்
பின்னேயென் ருமலருளரு ளேயுரு வாய்ப் பிறங்கு
மன்னேமுத் தானந்தவப்பா வெனேயுமற் ருண்டருளே (எ)

இ-ள். பொன்னே - பொன் போன்றவரே, நிறை இன்பப் பொக்கிசமே - பூரணனந்தப் பொக்கிசமே, மெய்ப்பொருள் அளித்த - எனது எதார்த்த சொரூபத்தை எனக்குக் கொடுத்தருளிய, மன்னே - யதிராஜரே, குன்ருத மணி விளக்கே - கெடாத பிரகாசத்தையுடைய இரத்தின தீபமே, சான்மன்னினர்க்கு-தமது திருவடியைச் சார்ந்த அன்பருக்கு, பின்னென்னுமல் - நாளைக்கென்று சொல்லாமல், அருள்-அக்கணமேகருணைபுரிகின்ற, அருளே உருவாய்ப்பிறங்கும்-கருணையேவடிவமாய்ப்பிரகாசிக்கும், அன்னே - தாய்போல்பவரே, முத்தானந்த அப்பா - முத்தானந்தரென்னுந்திரு நாமத்தையுடைய தந்தையே, எனேயும் ஆண்டருள் - [கடையேனுகிய] என்னையும் இரக்ஷித்தருள்வீராக. எ-று.

பொ - ரை. பொன் போன்றவரே பூரணனந்தப் பொக்கிசமே எனது எதார்த்த சொரூபத்தை எனக்குக் கொடுத்தருளிய யதிராஜரே

கெடாத பிரகாசத்தையுடைய இரத்தினதீபமே தமது திருவடியைச் சார்ந்த அன்பர்களுக்கு நாளைக்கென்று சொல்லாமல் அக்கணமே கருணை புரிகின்ற கருணையே வடிவமாய்ப் பிரகாசிக்குந் தாய்போல்பவரே முத்தானந்தரென்னுந்திருநாமத்தையுடைய தந்தையே கடையேனுகிய என்னையும் இரக்ஷித்தருள்வீராக. எ-று.

அன்னே என்பது அன்னையென்னும் பொதுப்பெயரின் திரிபாதலால் "அன்னேயுன்னையல்லாலினியாரை நினைக்கேனே" என்பது போல அதன் இறுதிஐகாரம் ஏகாரமாகத்திரிந்த விளியுருபு.

க-ரை. தன்னை இரக்ஷிக்கும்படி முத்தானந்த தேசிகரைப் பல விசேடணங்களாற் றுதித்தது. எ-ம். (எ)

விருத்தம்

அ சொத்துடையார்தம்மை யடைந் தவரையுமவ் வாறு
செய்வர் சொத்தி லாத
பித்துடையா ரடைந்தார்க்கென் புரிந்திடுவா ரவை
போலப் பேரு மின்ப
முத்தரென்பா ரடைந்தவர்க்கு முத்தியருளுவரன்றி
முனியஞ் ஞானப்
பெத்தர்தமை யடைந்தார்க்கென் பேறளிப்பாரஃதீண்
டுப் பேசற் பாற்றோ (அ)

இ-ள். சொத்துடையார் - சம்பத்துடையவர்கள், தம்மையடைந்தவரையும் - தம்மை [நேசித்து]ச் சேர்ந்தவர்களையும், அவ்வாறு செய்வர் - அச்சம்பத்துடையவராக்குவார்கள், சொத்து இலாதபித்துடையார் - தரித்திரத்தோடு வைபத்தியமும் பிடித்தவர்கள். அடைந்தார்க்கு [தம்மை நேசித்துச்] சேர்ந்தவர்களுக்கு, என் புரிந்திடுவர் - என்ன பிரயோசனத்தைச் செய்வர் [யாதொரு பிரயோசனமுஞ் செய்யார்],

அவைபோல - அவற்றைப்போல, பெரும் இன்ப முத்தர் என்பார் - [அநுபவத்தாலும்] பெயராலும் முத்தானந்தரென்று சொல்லப்படுபவர் தமை அடைந்தவர்க்கு - தம்மைச் சரணடைந்த முமுக்ஷுக்களுக்கு, முத்தி அருளுவர் அன்றி - மோக்ஷத்தைத்தந்தருள்வாரேயல்லாமல், முனி - [விவேகிகளால்] வெறுக்கத்தக்க, அஞ்ஞானப்பெத்தர் - அஞ்ஞானத்தையும் அதனாலாகிய பந்தத்தையுமுடையவர்கள், தமை அடைந்தார்க்கு - தங்களைச் சரணடைந்தவருக்கு என்பேறு அளிப்பார் - என்ன இலாபத்தைக்கொடுப்பார் [ஓர் இலாபமுங் கொடார்] அஃது ஈண்டு பேசற்பாற்றோ - அஃது இவ்விடத்துப் பேசுந்தன்மைத்தோ [பேசுந்தன்மைத்தல்ல] எ-று.

பொ-ள். சம்பத்துடையவர்கள் தங்களை நேசித்துச் சேர்ந்தவர்களையும் அச்சம்பத்துடையவராக்குவார்கள் தரித்திரத்தோடு பைத்தியமும் பிடித்தவர்கள் தங்களை நேசித்துச் சேர்ந்தவர்களுக்கு என்னபிரயோசனத்தைச் செய்வார் யாதொரு பிரயோசனமுஞ் செய்யார் அவற்றைப்போல் அநுபவத்தாலும் பெயராலும் முத்தானந்தரென்று சொல்லப்படுபவர் தம்மைச் சரணமடைந்த முமுக்ஷுக்களுக்கு மோக்ஷத்தைத் தந்தருள்வாரோ யல்லாமல் விவேகிகளால் வெறுக்கத்தக்க அஞ்ஞானத்தையும் அதனாலாகிய பந்தத்தையுமுடையவர்கள் தங்களைச் சரணமடைந்தவருக்கு என்ன இலாபத்தைக் கொடுப்பார் ஓரிலாபமுங்கொடார் அது இவ்விடத்துப் பேசுந்தன்மைத்தோ பேசுந்தன்மைத்தல்ல. எ-று.

தாற்பரியம். வறுமையும் பைத்தியமுமுடையோர் தம்மையடைந்தவர்க்குத் துன்பத்தைத் தருவதல்லது பசிப்பிணி தவிர்த்தல் முதலிய யாதொரு நன்மையுஞ் செய்யாரென்பார் 'சொத்தில்லாத பித்துடையார் அடைந்தார்க்கு என் புரிந்திடுவோர்' என்றும் அஞ்ஞானத்

தாற் பொருளல்லவற்றைப் பொருளாகக் கூறிச் சனனமரண வியாதி யையும் மனைவி முதலிய பந்தங்களைத்தாம் மெய்யென நம்பியவாறு அவ ருக்கும் நம்பிக்கையுண்டாக்குதலால் சமுசார துக்கத்தையுங் கொடுப்ப தல்லது முத்திகொடாரென்பார் "முனியஞ்ஞானப் பெத்தர்தமை யடைந்தார்க்கென் பேறளிப்பார்" என்றும் கொடேக்கும் அவை மங்கல மல்லாமை பற்றி "அஃதீண்டுப் பேசற்பாற்றே" என்றும் கூறினர்.

சஃ. முத்தானந்தனாச்சாரனை அடைந்தவர்மோக்ஷமடைவர்.எ-ம்(அ)

வேண்பா

க. பெண்ணினையா ணாக்கவல்ல பேருளா ராலுமெங்க ள்
புண் ணியமுத் தானந்தன் போலவே—மண்ணினிடை ச்
சீவன் றனைப்பிரஹ்ம சேதனமே யாக்கவல் லா
ரேவருளார் கூறுமி நாள் (க)

இ-ள் பெண்ணினை - பெண்வடிவத்தை, ஆண் ஆக்கவல்ல பேர் - ஆண்வடிவமாக்கும் [ மாயவித்தையிற் ] சமர்த்துள்ளோர், உளர் ஆனாலும் - [இவ்வுலகில்] இருந்தாராயினும், எங்கள் — எங்களுடைய, புண்ணிய முத்தானந்தன் போல - [முந்தியபிறவிகளிற் செய்யப் பட்டிருந்த] புண்ணியமே மானிடவடிவமாக மூர்த்திகரித்தெழுந்தரு ளிய முத்தானந்த தேசிகரைப்போல, மண்ணின் இடை - இவ்வுல கத்தில், சீவன்தனை - தேகாபிமானியாகிய ஜீவனை, பிரஹ்மசேதனம் ஆக்க வல்லார் - பிரஹ்மசை தன்னியமாகச் செய்யும் [பிரஹ்ம வித்தையில்] சமர்த்தர், இநாள் — இக்காலத்தில், எவர்உளார்-யாவரிருக் கின்றார், கூறும் [விவேகிகளே] சொல்லுங்கள் எ—று.

பொ-ரை' பெண்வடிவத்தை ஆண்வடிவமாக்கும் மாயவித்தை யிற் சமர்த்துள்ளோர் இவ்வுலகில் இருந்தாராயினும் எங்களுடைய முந்தியபிறவிகளிற் செய்யப்பட்டிருந்த புண்ணியமே மானுடவடிவமாக

மூர்த்திகரித் தெழுந் ருளிய முத்தானந்த தேசிகனைப்போல இவ்வு லகத்தில்தேகாபிமானிய ஜீவனைப்பிரஹ்மசை தன்னியமாகச்செய்யும் பிரஹ்மவித்தையிற்சமர்த்தர் இக்காலத்தில் யாவரிருக்கின்றார் விவேகிக ளே சொல்லு ங்கள், எ—று,

க - ரை, இக்காலத்தில் முத்தானந்த தேசிகரோ பிரஹ்மவித்தை யில் வல்லவர், எ—ம். (க)

ய. கங்குலெல்லோ னாதி கனைவிளக்கு வானல்லான்
மங்கியவற் றால்விளங்கு வானல்ல—னெங்கட மை
யெத்தானுங்காக்க வியைந்த வருண்மே னி
முத்தானந் தப்பேர் முனி. [ய]

இ - ள், எங்கள் தமை - எங்களை, எத்தானும்காக்க - எவ்விதத் தாலுங்காப்பதற்கு, அருள் மேனி இயைந்த - கிருபையினால் மானு டவுருக்கொண்—, முத்தானந்தப் பேர் முனி - முத்தானந்த னென்னு ந்திரு நாமத்தையுடைய மாதவத்தினர், கங்குல் — இருளையும், எல் லோன்ஆதிகளை - சூரியன் முதலாகிய பிரகாசவஸ்துக்களையும், விளக் குவான் அல்லால் - தோற்றுவிக்குஞ் சயஞ்சோதியேயல்லாமல், அவ ற்றால் மங்கிவிளங்குவான் அல்லன் - அவ்விருளினால் மறைந்து அச் சூரியன் முதலாகிய பிரகாசவஸ்துக் களால், தோன்றுகின்ற சடப் பொருளல்லர், எ—று.

பொ-ரை, எங்களை எவ்விதத்தாலுங் காப்பதற்குக் கிருபையி னால் மானுடவுருக் கொண்ட முத்தானந்த னென்னுந்திரு நாமத்தையு டைய மாதவத்தினர் இருளையும் சூரியன் முதலாகிய பிரகாச வஸ்துக் களையும் தோற்று விக்குஞ் சயஞ்சோதியேயல்லாமல் அவ்விருளினால் மறைந்து அசசூரியன் முதலாகிய பிரகாசவஸ்துக் களால்தோன்று கின்ற சடப் பொருளல்லர், எ—று.

௧-வை. முத்தானந்த தேசிகர் சச்சிதானந்த சயஞ்சோதி சொரூபர். எ-ம். [௰]

[கட்டளைக் கலித்துறை]

௰௧. பொய்யான மெய்யினை மெய்யெனக் கொண்ட துர்ப்புத்தியி னா
லையோ விறந்து பிறந்தலுத் தேனை யருகழைத் தே
யுய்வாய் வருகியென் றோருரை கூறியுலப்பி லின் ப
மெய்யாறு காட்டிப் புரந்தான் முத் தானந்த வித்தக னே [௰௧]

இ-ள், பொய்யான மெய்யினை - அநித்தியமாகிய இத்தேகத்தினை, மெய் எனக்கொண்ட - நித்திய மென்றுகருதும், துர்ப்புத்தியினால்-கெடுமதியினாலே, ஐயோ-அந்தோ, இறந்து பிறந்து - மரித்தும் ஜனித்தும், அலுத்தேனை - வருந்திய வென்னை, உய்வாய் வருகி யென்று - நீபிழைத்துக் கொள்வதற்கு வருகவென்று, அருகு அழைத்து - சமீபத்தில் வரச்செய்து, ஓர் உரை கூறி - ஒப்பற்ற மஹா வாக்கியத்தை யுபதேசித்தருளி, உலப்பில் - அழிதலில்லாத, இன்பமெய் ஆறுகாட்டி - பேரானந்தத்தைத் தருகின்ற உண்மையாகிய அத்துவித மார்க்கத்தைக் காண்பித்து, முத்தானந்த வித்தகன் - முத்தானந்த ரென்னுந் திரு நாம முடையஞான தேசிகர், புரந்தான்- [என்னை] இரக்ஷித்தருளினர், எ-று.

பொ-ரை, அநித்தியமாகிய இத்தேகத்தை நித்திய மென்று கருதும் கெடுமதியினாலே அந்தோமரித்தும் ஜனித்தும் வருந்திய வென்னை நீ பிழைத்துக் கொள்வதற்கு வருகவென்று சமீபத்தில் வரச்செய்து ஒப்பற்ற மஹா வாக்கியத்தை யுபதேசித்தருளி அழிதலில்லாத பேரின் பத்தைத்தைத் தருகின்ற? உண்மையாகிய அத்துவிதமார்க்

கத்தைக் காண்பித்த முத்தானந்த ரென்னும் திரு நாமமுடைய ஞான தேசிகர் என்னைக்காப்பாற்றிய ருளினார் எ—ற,

உய்வாய் என்பது முற்றெச்சம்,

க-ரை, மூத்தானந்த ஞானதேசிகர் என்னிடத்துள்ள அஞ்ஞானம் நீங்குமாறு ஞானோபதேசஞ் செய்து இரக்ஷித்தார், எ—ம். (௧௧)

௧௨. மண்ணாதி யாமைந்து பூதம் பிடிக்கமெய்ம் மன்னுருநீத்
தெண்ணா வவற்றின் செய லுரு வங் கொண் டிளைத்த [வெலாம்
விண்ணோர்க் கருமொரு சொன்மந் திரத்தின் விலக்கி [யின் ப
வண்ணாக்கி னானென்னை யன் பான் முத் தானந்த மெய்த் தவனே, [௧௨]

இ-ள் மண் ஆதியாம் ஐந்து பூதம் — பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும், பிடிக்க-சரீர வடிவமாகி என்னைப் பற்றிக்கொள்ள, மெய்மன்உரு நீத்து - [அவ்வேதுவால்] உண்மையாக நிலைத்துள்ள என்து ஆன்ம சொருபத்தை விட்டு, எண்ணா - தானென்றுவது தானென்றுவது மதிக்கத்தகாத, அவற்றின் - அப்பஞ்ச பூதங்களின், செயல் உருவங்கொண்டு—காரியதே கேந்திரியாதிகளின் செய்கையைத்தன் செய்கை யென்றும் அத்தே கேந்திரியாதிகளை யேதானென்றும் அபிமானித்து, இளைத்த எலாம் - தளர்ச்சியனைத்தையும், விண்ணோர்க்கு அரும் - தேவர்களுக்குங்கிடைத்தற் கருமையான, ஒரு சொல் மந்திரத்தின் - ஒப்பற்ற மஹாவாக்கிய மந்திரோபதேசத்தினாலே, விலக்கி - ஒழித்து, அன்பால் -[என்மீது வைத்திருக்கின்ற] தயையினாலே, முத்தானந்த மெய்த்தவன் - முத்தானந்தரென்னுந்திரு நாமத்தையும் உண்மையாகிய தவத்தையு முடையவர்,

எனை இன்பவின் ஆக்கினன் - என்னை ஆனந்தாகாய மென்னும் பிரஹ்ம சொரூபமாக்கினர். எ—று.

பொ—ரை பிருதிவி அப்புதேயுவாயு ஆகாயமென்னும் பஞ்சபூதங்களும் சரீரவடிவமாகி என்னைப்பற்றிக் கொள்ள அவ்வேதுவால் உண்மையாக நிலைத்துள்ள எனது ஆன்ம சொரூபத்தை விட்டுத் தன தென்றுவது நானென்றுவது மதிக்கத்தகாத அப்பஞ்ச பூதங்களின் காரியமாகிய தேகேந்திரியாதிகளின் செய்கையைத் தனது செய்கை யென்றும் அத்தே தேகேந்திரியாதிகளையேதா னென்றும் அபிமானித்துத் தளர்ந்த தளர்ச்சியினைத்தையும் தேவர்களுக்கும் கிடைத்தற் கருமையான ஒப்பற்ற மஹாவாக்கிய மாகிய மந்திரோப தேசத்தினாலே ஒழித்து என்மீது வைத்திருக்கின்ற தயையினாலே முத்தானந்தர் என்னுந்திருநாமத்தையும் உண்மையாகிய தவத்தையுமுடையவர் எனனை ஆனந்தா காயமென்று பிரஹ்ம சொரூபமாக்கினர். எ—று.

நுலம் சூக்குமம் என்றது மண்ணாதி பூதம் எனப்பொதுப் படக்கூறியதனால் இருவகைப்பூதங்களுஞ் சொல்லப்பட்டன. இங்குப் பூதமென்றது காரியத்தை.

க-ரை, முத்தானந்த தேசிகர் தேகமேதானென்றிருந்த என்னைப் பிரஹ்ம சொரூபமாக்கினர். எ—ம். (கஉ)

[விருத்தம்]

கங ஒருபே ருருவங் குணங்குறிக ளொன்று மொன்று வொருவ னிங்கே]
யிருபே ருருவா சங்கையு ளார்க் கின்ப வடிவாந் தனை யளிக் க
வருமான் பிடிப்பா னொருமானின் மறைந்து வால்போ ல [ரு ளாலே

திருமா னிடனு யெழுந்தனன் முத் தா னந்தப் பேர் திக
ழுறவே] (காட)

இ-ள் ஒருபேர் உருவம் குணம் குறிகள்- ஓர்விதப்பெயர் ஓர் விதவுருவம் ஓர்விதக்குணம் ஓர்வித அடையாளம [ஆகியவிவற்றுள்] ஒன்றும் ஒன்று- ஒன்றையும் பொருந்தாத, ஒருவன்- அகண்டை கரச சொரூபராகிய ஆன்மதேவர், இங்கே- இவ்வுலகத்தினிடத்தே, பேர்உரு- [தம்மைப்பற்றிவழங்கும்] பெயரும் [தமது] சொரூபமு மாகிய [இரண்டையும் பற்றி இப்பெயருடையது தேகமாதேகியா வெனவும் சொரூபம் இந்திரியங்களா லறியத் தக்க தூலமா இந்திரி யங்களாலறிய முடியாத சூக்குமமா வெனவும் எழாநின்ற], இரு ஆசங்கை உளார்க்கு-இருவகைச் சந்தேக முடையவர்க்கு (முமுக்ஷுக் களுக்கு), இன்பவடிவு ஆம் தனை - ஆனந்த சொரூபமாகிய தன்னை அளிக்க - கொடுப் பதற்கு, வருமான் பிடிப்பான் - (தன்னை யின மென்று கருதியருகு) வருகின்ற மானைப் பிடிப்பவன், ஒருமானின் - ஒருமானை யொப்பாக, மறைந்து வரல்போல் - [மான்றோலினுள் ளே] ஒளித்து வருதல்போல, அருளாலே - பெருங்கருணையினாலே, திருமானிடனாய் - தாம் ஒரு தெய்வீக மமைந்த மானுடர் போல வுருவு கொண்டு, முத்தானந்தப் பேர் — முத்தானந்தர் என்னுந் திரு நாம மானது, திகழ் உற - [உலகத்தில்] விளங்கும்படி, எழுந்தனன்- எழுந்தருளினார். எ-று.

பொ-ரை, ஓர் விதப் பெயர் ஓர் விதவுருவம் ஓர் விதக்குணம் ஓர் வித அடையாளம் ஆகிய இவற்றுள் ஒன்றையு ம் பொருந்தாத அகண்டை கா ச சொரூபராகிய ஆன்மதேவர் இப்பூமியின கண்ணே தம்மைப்பற்றி வழங்கும் பெயரும் தமது சொரூபமுமாகிய இரண் டையும் பற்றி இப்பெயருடையது தேகமா தேகியா எனவும் சொரூ பம இந்திரியங்களா லறியத்தக்க தூலமா இந்திரியங்களாலறிய முடி

யாத ஞக்குமமா எனவும் எழாநின்ற இருவகைச் சந்தேகமுடைய முமுக்ஷுக்களுக்கு ஆனந்த சொரூபமாகிய தன்னைக் கொடுப்பதற்குத் தன்னையினமென்று கருதியருகில் வருகின்ற மானைப்பிடிப்பவன் ஒருமானை யொப்பாக மான்றோலினுள்ளே ஒளிந்து வருதல் போலப்பெருங்கருணையினாலே தாம் ஒரு தெய்வீகமமைந்த மானுடர்போலவுருவு கொண்டு முத்தானந்தர் என்னும் திருநாமமானது உலகத்தில் விளங்கும்படி எழுந்தருளினர் எ—று.

க-ளா, ஆன்மதேவரே முமுக்ஷுக்களுக்காக மானுடவுருவுகொண்டு முத்தானந்தரென்னும் பெயர் தரித்து விளங்கினர், எ—ம். (கக)

(குருவணக்கம் முற்றிற்று.)

# (அநுபந்தம்)

(வெண்பா)

கச. அன்னமே பாலருந்து மத்திலுள நீர் பிரித் து
மன்னிய நாற் சாதனமும் வாய்த்தவனே-பின்னுசட ம்
பொய்யென் றொழித்தான் மா பூரணமேயென் றுதெளிந்
துய்வான்மற் றேவ னுயும். (க)

இ-ன். பால்-பாலினை, அத்தில் உளநீர் பிரித்து-அப்பாலினிடத் தூக்கலந்திருக்கின்ற ஜலத்தை நீக்கி, அன்னமே அருந்தும்-அன்னப்பறவையே பருகும் [அதுபோல], மன்னிய-நிலைபெற்ற நாற்சாதனமும்—[விவேகம் விராகம் சமாதிஷட் சம்பத்தி முமுக்ஷுத்தவம் என்னும்] நான்கு சாதனங்களும், வாய்த்தவனே-உடையவனே, பின்னு சடம்-ஒன்றினொன்றாகக் கலந்திருக்கின்ற தூல முதலிய தேகங்களை, பொய் என்று ஒழித்து-மித்தையென்றறிந்து நீக்கி, ஆன்மா-(இத்திரிசியங்களையறியுஞ் சாக்ஷிவடிவ) ஆன்மாவா

னது, பூரணமே என்று தெளிந்து - பிரஹ்மமே யெனவறிந்து, உய்வான் - [அனர்த்த நிவிர்த்தி ஆனந்தப் பிராப்திரூப] மோக்ஷமடைவான், மற்று எவன் உயும் - வேறே எவனடைவான் (ஒருவனுமடையான்). எ—று.

பொ-ரை, பாலினை அப்பாலினிடத்துக் கலந்திருக்கின்ற ஜலத்தை நீக்கி அன்னப் பறவையே பருகும் அதுபோல நிலைபெற்ற விவேகம் விராகம் சமாதிஷட்சம்பத்தி முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களும் உடையவனே ஒன்றினுளொன்றாகக் கலந்திருக்கின்ற தூல முதலிய தேகங்களை மித்தை யென்றறிந்து நீக்கி இந்திரியங்களையறியும் சாக்ஷிவடிவ ஆன்மாவானது பிரஹ்மமே எனவறிந்து துக்க நிவிர்த்தி சுகப்பிராப்தி வடிவ மோக்ஷமடைவான் வேறே எவனடைவான் (ஒருவனுமடையான்) எ—று.

சடம் எனப் பொதுப்படக் கூறினமையால் மூன்று சரீரமுஞ் சொன்னப்பட்டன.

இதில் "நாற்சாதனமும் வாய்த்தவனே" என்றதால் அதிகாரியும் "பின்று சடம் பொய்யென் றொழித்தான் மாபூரணமே யென்று தெளிந்து" என்றதனால் விஷயமும் "உய்வான்" என்றதால் மோக்ஷமாகிய பிரயோசனமும் அவற்றிற்குத் தம்மிலுள்ள சம்பந்தமும் பெறப்பட்டமை காண்க.

அநுபந்த இலக்கணமாவது. எது தன்னையறிந்த பின்பு முமுக்ஷுவைக்கிரந்தத்திற் பிரவிர்த்திக்கச் செய்யுமோ அது அநுபந்த மெனப்படும்.

அவ்வநுபந்தம் அதிகாரி, விஷயம், பிரயோசனம், சம்பந்தம் என்னும் நான்குறுப்போடு கூடியது. அவற்றுள் அதிகாரியாவான் நான்கு சாதனங்களு முடையவன். விஷயமாவது ஜீவப்பிரஹ்மத்தின் ஐக்கியமாம். பிரயோசனமாவது சர்வ துக்க நிவிர்த்தி பரமா

னந்தப் பிராப்திவடிவ மோக்ஷமாம். சம்பந்தமாவன அதிகாரிக்கும் விஷயத்திற்கும் உள்ள கர்த்திரு கர்த்தவ்விய பாவசம்பந்தமும் அதிகாரிக்கும் பிரயோசனத்திற்குமுள்ள பிராப்பிய பிராபகபாவசம்பந்தமும் கிரந்தத்திற்கும் ஞானத்திற்குமுள்ள ஜன்னிய ஜனகபாவசம்பந்தமு முதலாயினவாம். இவற்றை விரிவா யறிய விரும்புவோர் விசாரசாகர முதலிய கிரந்தங்களிற் கண்டுகொள்க.

க—ரை. நான்கு சாதனங்களு முடையவனே ஞானவாயிலாக மோக்ஷமடைவான். எ—ம். (க)

அநுபந்தம் முற்றிற்று.

## [ க ] வது ஞான சாதனவியல்.

### [க. விவேகம்]

### ஆன்மாநான் மாக்களை விவேகித்தல்

[விருத்தம்]

கரு. அருக்கற் கொளியுட் டணஞ்சோண மம்மூன் [றியல் பாவனபோல,
வருத்தல் விளங்கல் பிரியமுற விவையாத் துமத்தன் [மையவெனவும்,
வருத்து மசத்துச் சடந்துயர மன்று வனுன்ம வியல் [பெனவு,
மொருத்த னறிந்து பிரிவானே லொழியா வீடே யெ [ளிதுறுமால் [க]

இ-ள், அருக்கற்கு - சூரியனுக்கு, ஒளி, உட்டணம், சோணம்-பிரகாசம், வெப்பம், செந்நிறம் [என்னும்], அம்மூன்று [உம்]-

அந்த மூன்று [விசேடணங்களு]ம், இயல்பு ஆவனபோல - சுபாவ மாயிருத்தலபோல, இருத்தல், விளங்கல் பிரியமுறல இவை-சத்து சித்து ஆநந்தம் என்னும் இம்மூன்று [விசேடணங்களு]ம், ஆத்தும தன்மைய எனவும் - ஆத்துமாவினுடைய சொரூப மென்றும், வருத்தும் அசத்து, சடம் துயரம் - துன்பஞ் செய்கின்ற அநித்தியம், அப்பிரகாசம், துக்கம் [என்னும் மூன்று விசேடணங்களும்], மன்னு - திருஷ்டநஷ்ட சுபாவமுடைய. அநான்ம இயல்பு எனவும்— நாமரூபான்மகமாகிய தேகாதிப் பிரபஞ்சங்களினுடைய சொரூப மெனவும், ஒருத்தன் அறிந்து - ஒருமுமுக்ஷு வானவன் [இவ்வாறு ஆன்மா நான் மாக்களின் சுபாவங்களை [விவேகித்துத் தெளிந்து, பிரிவானேல் - [அநான்மவர்க்கங்களினின்று] வேறு படுவானாயின் [அவன்], ஒழியா வீடு - நித்தியமாகிய மோக்ஷத்தை, எளிது உறும் —எளிதில் அடைவான். எ—று.

பொ - ள், சூரியனுக்குப் பிரகாசம் வெப்பம் செந்நிறம் என்னும் அந்த மூன்று விசேடணகளும் சொரூப மாயிருத்தல் போலச் சத்து, சித்து, ஆநந்த மென்னும் இம்மூன்று விசேடணங்களும் ஆத்துமாவினுடைய சொரூபமென்றும் துன்பஞ் செய்கின்ற அசத்து, சடதுக்கமென்னும் இம்மூன்று விசேடணங்களும் திருஷ்ட நஷ்ட சுபாவமுடைய நாமரூபான் மகமாகிய தேகாதிப் பிரபஞ்சங்களினுடைய சொரூப மென்றும் ஒருமுமுக்ஷு வானவன் இவ்வாறு ஆன்மா நான் மாக்களின் சுபாவங்களை விவேகித்துத் தெளிந்து அநான் மவர்க்கங்களினின்று வேறுபடுவானாயின் அவன் நித்திய மாகிய மோக்ஷத்தை எளிதில் அடைவான். எ—று.

அம்மூன்றும் என்பதின் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

௧ - ள், முமுக்ஷுவானவன ஆன்மவிசேடணமாகிய சச்சிதா நந்தங்களையும் அநான் மவிசேடணமாகிய அசத்து, சட, துக்கங்களை

யும் விவேகித்து (வேறு வேறு பிரித்து) அஞன் மலர்க்கங்களினி ன்று வேறு படவேண்டும். எ—ம். [க]

[தேகாபிமான துக்க விவேகம்]

கசூ. ஒருநா ழிகையு நிலைபுகல வொண்ணு மண்ணே ருட் [லிதனை ப்
பெருமால் கொடுயா னெனதென்னப் பேணி யதனுற் [பிறந்திறந்து
கருகா நின்றீர் துயரிடையக் கருத்து மறுத்தே யறிவு [ருவா ம்
பிரஹ்ம நாமென் றறிந்திந்தப் பேற்று லதனை யொழி [யுமி னே [உ]

இ-ள். ஒரு நாழிகையும் - ஒரு நாழிகைப்பொழுதும், நிலை புகல வொண்ணு - [ஜீவித்திருக்குமென்று] உறுதி சொல்லமுடியா தரும், மண் நேர் உடல் இதனை - மண்போன்ற [சடசுபாவமுடை யதுமாகிய] இத்தேகத்தினை, பெருமால்கொடு - மிகுந்தமயக்கத்தால் யான், எனது, என்னப்பேணி - யானென்றும் என்னுடைய தென்றும் கருதிப்பாதுகாத்து, அதனுல் பிறந்து இறந்து - அந்த அகந்தை மமதைகளிஞலே ஜனித்தும் மரித்தும், துயர் இடை - அப்பிறவித்துன்ப [மாகிய அக்கினி] யின் கட் [பட்டு], கருகாநின் றீர் - வேகின்றவர்களே, அக்கருத்து மறுத்து - [தேகத்தின் கண் ணுள்ள] அந்த அகந்தைமமதைகளைப் போக்கி, அறிவு உருவு ஆம் நாம் - ஞான சொரூப ஆன்மாவாகிய நாம், பிரஹ்மம் என்று - பரி பூரணமாயுள்ள பிரஹ்மமென, அறிந்து - விவேகித்துத் தெளிந்து இந்தப் பேற்றுல் - இந்த விவேகத்தாலுளதாகின்றஞான [மாகிய] ஜலத்தால், அதனை ஒழியுமின் - அப்பிறவித்துன்பமாகிய அக்கினி யைக் கெடுத்து விடுங்கள். எ-று.

பொ-ரை. ஒரு நாழிகைப்பொழுதும் ஜீவித்திருக்குமென்று உறுதி சொல்லமுடியாததும் மண்போன்ற சடசுபாவமுடையது மாகிய இத்தேகத்தினை யிருந்த மயக்கத்தால் யானென்றும் என்னுடைய தென்றுங் கருதிப்பாதுகாத்து அகந்தைமமதைகளினாலே ஜனித்தும் மரித்தும் அப்பிறவித்துன்பமாகிய அக்கினியின்கட் பட்டு வேகின்றவர்களே தேகத்தின் கண்ணுள்ள அந்த அகந்தை மமதைகளைப்போக்கி ஞான சொரூப ஆன்மாவாகிய நாம் பரிபூரணமாயுள்ள பிரஹ்மமென்று விவேகித்துத் தெளிந்து இந்தவிவேகத்தாலாகின்ற ஞானமாகிய ஜலத்தால் அப்பிறவித்துன்பமாகிய அக்கினியைக்கெடுத்துவிடுங்கள். எ-று.

கருகுதலென்னும் வினைக்கியையப் பிறவித்துன்பத்தை அக்கினியென்வும் அதைக்கெடுக்கின்ற ஞானத்தை ஜலமெனவும் வருவித்தாம். கருகாநின்றீர் என்னுந்தெரிநிலைவினையாலணையும் பெயர் அண்மை விளியாதலின் இயல்பாயிற்று.

க-ரை. சடசுபாவமாகிய தேகந்தானல்லவென்றும் ஞான சொரூபமாகிய பிரஹ்மந்தானென்றும் விவேகிக்கவேண்டும் எ-ம்.

[இந்திரியப் பிரத்தியக்ஷ விவேகம்] (உ)

கள எந்த விடய மெந்தவிந்தி ரியத்தா லறியப் பட்டது வோ
வந்த விடய மந்தவிந்தி ரியமே யறிந்த தெனுமறிவு
வந்த தெளிஞன் கட்டறுக்கு மற்றீ தறிந்தோ னேயென்
புந்தி யுடையான் பந்திதனுப் பூவுட் சாவுற் றுழலுமால் (௩)

இ-ள். எந்த விடயம் — [சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும்பஞ்சவிஷயங்களுள்]யாதொரு விஷயமானது எந்த இந்திரி

யத்தால் - [சுரோத்திரமே, துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம் என்னும பஞ்சேந்திரியங்களுள்] யாதோரிந்திரியத்தால், அறியப் பட்டதுவோ - உணரப்பட்டதுவோ, அந்தவிடயம் அந்த விஷயத்தை, அந்த இந்திரியமே - அவ்விந்திரியமே, அறிந்தது - உணர்ந்தது, [யான் அதன் சாக்ஷியாகலின் நிஷ்கிரியன்], எனும் அறிவு வந்த தெளிஞன் - என்றறியும் ஞானம் உதயமாகப் பெற்ற விவேகியானவன், கட்டு அறுக்கும் - [சமுசாரமாகிய] பந்தத்தை யொழிப்பான். ஈது அறிந்தோன் - (அங்ஙனமறியாமல்) இவ்விஷயத்தை யுணர்ந்தவன். நான் என் புந்தி உடையான் - நானென்னும புத்தியை யுடையவன், பந்திதன் ஆய் — [தனக்கந்நியமான இந்திரியத் தின்றொழிலைத் தனதாகக் கண்ட பிராந்தியாற்கரும] பந்தத்தை யுடையவனாய் பூவுள்சாவு உற்று [உம்] - பூமியின்கண் மரணத்தை யடைந்தும் [அக்கருமத்தின் பயனையநுபவிக்க மீளப்பிறந்தும்], உழலும்: [மாறிமாறிச்] சுழலுவான் எ-று

பொ-ரை. சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் பஞ்ச விஷயங்களுள் யாதொரு விஷயமானது சுரோத்திரம் துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம் என்னும் பஞ்சேந்திரியங்களுள் யாதோரிந்திரியத்தால் உணரப்பட்டதுவோ அந்த விஷயத்தை அவ்விந்திரியமே யுணர்ந்தது யான் அதன் சாக்ஷியாகலின் நிஷ்கிரியன் என்றறியும் ஞானம் உதயமாகப் பெற்ற விவேகியானவன் சமுசாரமாகிய பந்தத்தை யொழிப்பான் அங்ஙனமறியாமல் இவ்விஷயத்தை யுணர்ந்தவன் நான் என்னும் புத்தியை யுடையவன தனக்கந்நியமாகிய இந்திரியத் தின்றொழிலைத் தனதாகக் கண்ட பிராந்தியால் கருமபந்தத்தை யுடையவனாய்ப் பூமியின்கண் இறந்தும் அக்கருமத்தின் பயனையநுபவிக்க மீளப் பிறந்தும மாறி மாறிச் சுழலுவான், எ-று .

சாவுற்றும என்பதின் எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது

தொழில்களெல்லாம் இந்திரியங்களிடத்துள்ளன வென்றும் ஆன்மாவினிடத்தில்லை யென்றும் அறிந்த விவேகிசமுசார பந்தத்தை யொழிப்பான் என்பதற்குதாரணம்.

பகவற்கீதை

"செயன்மே னின்ற வறிவிடையே செயலின் மையு
மச் செயல்செய் யா
வியன்மே னின்ற புலன்களிலேயெல்லா வினையு மியல்
வது வு
மயன்மே லின்றி யறிந்தான்யா ரவனே யெல்லா
மறிந்தோ னு
முயன்மே னின்ற யோகியுநல் வினைகளெல்லா மொ
ழிந்தோனு ம்"

எனக் கூறியிருத்தல காண்க.

கஉ. விஷயப் பிரத்தியக்ஷமுண்டாகும் பொழுது கேட்டல் முதலியவற்றை இந்திரியங்களின் தொழிலெனவும் ஆன்மா யாதொரு தொழிலுமிலாதது எனவும் விவேகிக்கவேண்டும் எ-ம்

[தூலசரீரவிவேகம்]

கஅ தம்பவுடலைச் சடமென்று தானென்புத்தி யறவொ
ழித் தோ
னிம்பருலம் மாதியகற் பிதமாயிருத்தற் கிடமாய்ச்சி த்
தம்பாபரி பூரணமா மமல வடிவந்தானு மி
வெம்பு பிறவிப் பிணியொழித்து மேலா மின்ப
வீடுறுமா ல்(௪)

இ-ள். தம்பவுடலை - தூணைப்போலத் தூலமாயுள்ள இந்தேகத்தினை, சடம் என்று - [தன்னையறியாததும் பிறவற்றினையறியா

ததுமான] அசேதனமுந்திருசியமுமாகிய வஸ்துவென்று [அறிந்து] தான் என் புத்தி அறஒழித்தோன் - [அதனிடத்தில் இத்தேகமே] தானென்று முன்பு வைத்திருந்த நிச்சயத்தை முற்றிலும் விட்டவன் [இவ்வாறு மேலும் அதத்து வியாவிருத்தி வாயிலாக விசாரித்து], இம்பர் உலகம் ஆதிய - இவ்வுலக முதலாகிய எல்லாப் பிரபஞ்சங்களும்,கற்பிதமாய் இருத்தற்கு இடமாய் - அத்தியஸ்தமாய்த் தங்குதற்கு ஆதாரமாயும், சித்து . ஞானமயமாயும், அம்பரம் - நிரவயவமாயும், பரிபூரணம்ஆய் - அபரிச்சின்ன மாயுமிருக்கின்ற, அமல வடிவம் தான் ஆகி - மலமற்ற பிரஹ்ம சொரூபமே தானாகி வெய்பு பிறவிப்பிணி ஒழித்து - மனக்கலக்கத்தைத் தருகின்ற பிறவி நோயைத் தவிர்த்து. மேல் இன்பம் ஆம்வீடுஉறும் - நிரதி சயானந்த ரூபமாகிய மோக்ஷத்தையடைவன். எ-று

பொ-ரை தூணைப்போலத் தூலமாயுள்ள இத்தேகத்தினை அசேதனமுந்திரு சியமுமாகிய வஸ்து வென்றறிந்து அதனிடத்தில் இத்தேகமே தானென்று முன்பு வைத்திருந்த நிச்சயத்தை முற்றிலும் விட்டவன் இவ்வாறு மேலும் அதத்து வியாவிருத்தி வாயிலாக விசாரித்து இவ்வுலக முதலாகிய எல்லாப் பிரபஞ்சங்களும் அத்தியஸ்தமாய்த் தங்குதற்கு ஆதாரமாயும் ஞானமயமாயும் நிரவயவமாயும் அபரிச்சின்னமாயு மிருக்கின்ற நிர்மலப்பிரஹ்ம சொரூபமே தானாகி மனக்கலக்கத்தைத் தருகின்ற பிறவி நோயைத் தவிர்த்து நிரதிசயானந்த ரூபமாகிய மோக்ஷத்தையடைவன்- எ-று

இதனால் தூலசரீரஞ் சடமுந்திருசியமுமாயிருத்தலை யறிந்து அக்காரணத்தால் இச்சரீரந்தானல்ல வென்று நீங்கினவன்: கண்டேன் கேட்டேன் என்றும் சங்கற்பித்தேன் என்றும் நிச்சயித்தேன் என்றும் சிந்தித்தேன் என்றும் அபிமானித்தேன் என்றும் ஜீவழந்தும் அநுபவத்தால் இந்திரிய, மன, புத்தி, சித்த, அகங்காரம்

களில் உண்டாகுந்தா னென்னும் புத்தியை அவை தோழிற்படுந் தோறுங் கவனித்துப் பார்த்தால் சடமுந்திருசியமு மாயிருத்தல் அநுபவத்திற்கு வரும் வரவே இவைகளுள் ஒன்றுந்தானல்ல வென் றும் இவற்றை யெல்லாமறிந்த அறிவுதானேன்றும் விவேகிக்க வேண்டு மென்பது காண்க

௧ - வா. தூலசரீரத்தை விவேகித்துச் சடமுந்திரு சியமுமாயி ருத்தலால் தானல்ல வென்று நீக்கினவன் பிரஹ்ம சொரூப மாவன். எ—ம். [௪]

[அதிஷ்டான ஆரோபங்களின் விவேகம்]

௧௬ அரவவ் வறிவா மிரண்டுமயக் கவற்று தாரக் கயி
[ற்றுட னே
மருவவ் வறிவு மெய்யாமவ் வகைபோ லொலியா திய
[விட ய
முரிய செவியா தியவறிவு மொருங்கே மயக்கிங் குள
[பொரு ளா
மரிய பிரஹ்ம மொன்றுமத னறிவு மெய்யா வனவா
[மே (ரு)

இ—ள். அரவு, அவ்வறிவு இரண்டும் மயக்கு [உம் ஆம்] - இரச்சு விற்றோன்றுகின்ற சர்ப்பமும் சர்ப்பஞானமும் ஆகிய இரண்டும் [மித்தையும்] பிராந்தியுமாம், அவற்று ஆதாரகயிறு உடன் - அவை கட்கு அதிட்டானமாகிய இரச்சுவும், மருவு அவ்வறிவும் மெய் ஆம் - அதனோடு பொருந்த [இஃது இரச்சுவென்றறிந்த] அந்தஞானமும் சத்தியமாம், அவ்வகைபோல் -அவ்விதம்போல, ஒலி ஆதிய விடயம்- சத்தமுதலாகிய விஷயங்களும்,உரிய செவி ஆதிய அறிவும் - [அவ்வி ஷயங்களை அறிதற்கு] உரிமையாகிய சுரோத்திரமுதலிய இந்திரியங்

களின் ஞானமுமாகிய இவை, ஒருங்கே மயக்கு [உம் ஆம்] - முழு தும் [மித்தையும்] பிராந்தியுமாம், ஈங்கு - இவ்விடத்து, உளபொ ருள் ஆம் - பூதபவிஷியவர்த்தமான மென்ற முக்காலத்தும் முள்ள பொருளாகிய, அரிய பிரஹ்மம் ஒன்றும் - [அறிதற்கு] அருமையா கிய பிரஹ்மம் ஒன்றும், அதன் அறிவு [ஒன்றும்] - பிரஹ்மஞா னமொன்றும், மெய் ஆவன ஆம் - சத்தியமாவனவாம். எ—று.

பொ - ளா. இரச்சுவிற்றோன்றுகின்ற சர்ப்பமும் சர்ப்ப ஞான மும் ஆகிய இரண்டும் மித்தையும் பிராந்தியுமாம் அவைகட்கு அதிட் டானமாகிய இரச்சுவும் அதனோடு பொருந்த இஃது இரச்சு வென்றறி ந்த அந்த ஞானமும் சத்தியமாம். அவ்விதம் போலச் சத்தமுதலாகிய விஷயங்களும் அவ்விஷயங்களை யறிதற்கு உரிமையாகிய சுரோத்திர முதலிய இந்திரியங்களின் ஞானமுமாகிய இவை முழுதும் மித்தையும் பிராந்தியுமாம். இவ்விடத்துப் பூதபவிஷிய வர்த்தமான மென்ற முக் காலத்துமுள்ள பொருளாகிய அறிதற்கருமையாகிய பிரஹ்மம் ஒன்று ம்பிரஹ்மஞான மொன்றும் சத்தியமாவனவாம். எ—று.

ஆக்கச் சொல்பிரித்துக் கூட்டப்பட்டது, ஒன்றும் என்பது பின் னுங்கூட்டப்பட்டது. இரண்டு மயக்கும் ஒருங்கே மயக்கும் என்பவற் றின் எச்சவும்மைகள் விகாரத்தாற் றொக்கன.

க—ரை, சத்தமுதலாகிய விஷயங்களும் அவற்றையறியும் சுரோ த்திர முதலியவற்றின் ஞானமும் மித்தையும் பிராந்தியுமா மெனவும் பிரஹ்மமும் பிரஹ்ம ஞானமும் சத்தியமாமெனவும் விவேகிக்க வே ண்டும் எ—ம். [௧௯]

[விவர்த்த காரண காரிய விவேகம்]

20 நீரினிற்றோன் றிணுமாலங் கட்டிபல திறமாயர்
நீரே யாம்போ ற்

பாரினிற்றேன் றினுங்கலச மாதிபல திறமாயப் பாரோ
யாம் போ
லோரியல்பு மிலதாகி யுள ஞான சுககனமா யொளிரா
நின் ற
பேரியல்வத் துவிற்றேன்று சகமதுவே யயலாகிற்
பிறங்கி டா தே சு

இ-ள் ஆலகட்டி- நீர்க்கட்டியானது, நீரினில் - ஜலத்தினிடத்து, பலதிறமாய் – [சிறிது பெரிது முதலிய] நானாவடிவுகளாய், தோன்றினும் - [விவர்த்த காரிய மாகிய நாமரூபபேதங்களால்வேறு போலக்] காணப் பட்டாலும், அந்நீரே ஆம்போல – [உற்று நோக்குவோர்க்குக் காரணமாகிய] அந்த ஜலமாகவே யிருத்தல் போலவும், கலசம் ஆதி - குட முதலானவைகள், பாரினில் - மண்ணினிடத்து, பலதிறமாய் – பல விதவடிவங்களோடு கூடியதாய், தோன்றினும்- [விவர்த்த காரியமாகிய நாமரூப பேதங்களால் வேறு போற்] காணப் படினும், அப்பாரே ஆம்போல் - [உற்று நோக்குவோருக்குக் காரண மாகிய] அம்மண்ணாகவே யிருப்பது போலவும், ஓர் இயல்பும் இலது ஆகி- யாதொரு குணமுந் தன்னிடத்திலில்லாததாய், உள, ஞான, சுக, கனமாய் - சச்சிதானந்தக் கட்டியாய், ஒளிரா நின்ற - பிரகாசிக்கின்ற, பேர் இயல்வத்துவில்-ஒப்புயர் வில்லாத தன்மையினையுடைய பிரஹ்ம சொரூபத்தில், தோன்று சகம் - [விவர்த்த காரியமாகிய நாமரூப பேதங்களால் வேறுபோற்] காணப்படுகின்ற பிரபஞ்சமானது, அதுவே-காரணமாகிய அப்பிரஹ்ம சொரூபமேயாம், அயலாகில் -சச்சிதானந்தத்திற்கு அந்நியமாகுமானால், பிறங்கிடாது - [அந்நியமெல்லாஞ் சடமாதலின்] விளங்காது. எ-று.

பொ-ரை. நீர்க்கட்டியானது ஜலத்தினிடத்துச் சிறிது பெரிது முதலிய பலவிதவடிவங்களாய் விவர்த்த காரியமாகிய நாமரூப பேதங்

களால் வேறு போற் காணப்பட்டாலும் உற்று நோக்குவோருக்குக் காரணமாகிய அந்த ஜலமாகவே யிருத்தல் போலவும் குடமுதலியவை கள் மண்ணினிடத்துப் பலவிதவடிவங்களோடு கூடியதாய் விவர்த்த காரியமாகிய நாமரூபபேதங்களால் வேறுபோற் காணப்படினும் உற்று நோக்குவோருக்குக் காரணமாகிய அம்மண்ணாகவே இருப்பதுபோல வும்யாதொரு குணமுந்தன்னிடத்தி லில்லாததாய்ச் சச்சிதானந்தக் கட்டியாய்ப் பிரகாசிக்கின்ற ஒப்புயர் வில்லாத தன்மை யினையுடைய பிரஹ்ம சொரூபத்தில்

விவர்த்த காரியமாகிய நாமரூப பேதங்களால் வேறு போற்காணப்படுகின்ற பிரபஞ்சமானது காரணமாகிய அப்பி ரஹ்ம சொரூபமே யாம். சச்சிதானந்தத்திற்கு அந்நியமாகுமானால் அந் நிய மெல்லாஞ் சடமாதலின் விளங்காது. எ—று.

க—ரை. 'வஸ்து' வினிடத்தில் விவர்த்தமாகத் தோன்றுகின்ற பிரபஞ்சமானது அவ்வஸ்து வேயாமென்று விவேகிக்கவேண்டும். எ-ம் [௬]

## சிற்சடவிவேகம்

[வெண்பா]

௨௧. நிராகார மாகி நிறைந்தீரை யெத்தா ல்<br>ஓராகாரத் துள்ளே யுணர்ந்தீர்—பராகா ய<br>மில்லந் திருப்போ வியையாத வானினி டை<br>யில்லத் திருப்போ வியல்பு [எ]

இ-ள், நிராகாரம் ஆகி—யாதொரு வடிவுமில்லாமல், நிறைந்தீரை-[சேதன அசேதனமாகிய இருவகைப் பிரபஞ்சங்களிலும் வியாபித்து அப்பாலும்] பரிபூரிணராயிருக்கின்ற வுங்களை, எத்தால் - யாது கார ணத்தினால், ஒரு ஆகாரத்து உள்ளே-ஒருதேகத்தினுள்ளே [மட்டும்]

உணர்ந்தீர் - அறிந்தீர்கள், [நாங்கள் அறிவு சொரூப ராயினும் இவ்வொரு சரீரத்தைப்பற்றி யிருத்தலால் இச்சரீரத்தளவிலறிந்தோ மென்பீராயின்], பா ஆகாயம் - [நிராகாரமாயும் சூக்குமமாயும்] வியாபகமாயுமுள்ள ஆகாயமானது, இல் இருப்பு - [ஆகாரமாயும் தூலமாயும் பரிச்சின்னமாயு மிருக்கின்ற] வீட்டினுள்ளே தங்குதல், [இயல்பு ஓ] சுபாவமா, இயையாத - [யாதொன்றோடுஞ்] சம்பந்தியாத, வானின் இடை - [மேற்கூறிய இலக்கணங்களை யுடைய] ஆகாயத் தினிடத்து, இல் இருப்பு - [மேற்கூறிய இலக்கணங்களையுடைய] ஆகாயத்தினிடத்து, இல்இருப்பு - [மேற்கூறிய இலக்கணங்களையுடைய] வீடிருத்தல், இயல்பு (ஓ) - சுபாவமா [கூறுமின்]. எ—று.

பொ-ளா யாதொருவடிவமு மில்லாமல் சேதனு சேதனமாகிய இருவகைப் பிரபஞ்சங்களிலும் வியாபித்து அப்பாலும் பரிபூரணராயிருக்கின்ற வுங்களையாதுகாரணத்தால் ஒரு தேகத்தினுள்ளே மாத்திரம் அறிந்தீர், நாங்கள் அறிவு சொரூபராயினும் இவ்வொரு சரீரத்தைப்பற்றி யிருத்தலால் இச்சரீரத்தளவிலறிந்தோ மென்பீராயின் நிராகாரமாயும் சூக்குமமாயும் வியாபகமாயுமுள்ள ஆகாயமானது ஆகாரமாயுந் தூலமாயும் பரிச்சின்னமாயு மிருக்கின்ற வீட்டினுள்ளே தங்குதல் சுபாவமா அல்லதுயாதொன்றோடுஞ் சம்பந்தியாத மேற்கூறிய இலக்கணங்களையுடைய ஆகாயத்தினிடத்து மேற்கூறியஇலக்கணங்களையுடைய வீடிருத்தல் சுபாவமா கூறுமின். எ—று.

௦௦௦ ஓகாரங்கள் பிரித்துக் கூட்டப்பட்டன, இயல்பு என்பதை முன்னரும் கூட்டி வினவப் பட்டது.

இத்திருஷ்டாந்தம் போலச் சச்சிதானந்த மயமாயும் நிராகாரமாயும் சூக்குமமாயும் வியாபகமாயுமுள்ள நீவிர் அசித்த சடாக்காகாரமாயும் தூலமாயும் பரிச்சின்னமாயுமுள்ள சரீரத்தின்கண் இருக்கின்றீரா அல்லது மேற்கூறிய இலக்கணங்களையுடைய வும் மிடத்தில் மேற்கூறிய

இலக்கணங்களையுடைய சரீரம் இருக்கிறது இதனை நீவிரே உய்த்து ணர்ந்து சொல்லுமின் என்பது எஞ்சிநிற்கிறது.

க-ளா. சச்சிதானந்த பரிபூரணமாயுள்ள ஆத்துமாவினிடத்துச் சரீரம் அத்தியஸ்தமாய்த் தோன்றுகிற தல்லாமல் சரீரத்தினிடத்தில் ஆன்மாவில்லை யென்று விவேகிக்க வேண்டும். எ-ம். (எ)

[ ஞானவிவேகம் ]

உஉ. போக்குவர வற்றபரி பூரணனென் போதவங்க
மீக்கொள்வா னைக்கரைசேர் விக்குந்தா—னாக்கையே
யென்னும்போ தக்கல் லிவர்ந்தானை யேழ் பிறப்பாப்
பன்னுழி யாழ்த்தும் பகை [அ]

இ-ள், [தான்] - தன்னை, போக்கு வரவு அற்ற பரிபூரணன் என்-அசலமும அபரிச்சின்னமு மாயுள்ள பிரஹ்ம மென்றறிகின்ற, போதவங்கம் - ஞானக்கப்பலானது, மீக்கொள்வானை - தன்னிடத்து ஏறிச் செல்பவனை, கரை சேர்விக்கும்-[பிறவிச்சமுத்திரத்தின்] கரை யாகிய மோக்ஷத்தில் அடைவிக்கும் [உறவாம்], தான் ஆக்கை என் னும் - தன்னைத்தேக மென்றறிகின்ற, அபோதக்கல் - பிராந்தி ஞா னமாகியகற [புணையானது], இவர்ந்தானை - தன்மீதேறினவனை, ஏழ் பிறப்பாப் பன்னு ஆழி - [தேவர் மனிதர் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன தாவரம் என்று] எழுவகைப் பிறப்புக்களாகச் சொல்லப் படாநின்ற சமுத்திரத்தினுள்ளே, ஆழ்த்தும் - அமிழ்த்தும், பகை - வி ரோதியாம், எ—று.

பொ-ளா, தன்னை அசலமும் அபரிச்சின்னமு மாயுள்ள பிரஹ்ம மென்றறிகின்ற ஞானக்கப்பலானது தன்னிடத்தேறிச் செல்பவ னைப் பிறவிச் சமுத்திரத்தின் கரையாகிய மோக்ஷத்தில் அடைவிக்கும் உறவாம், தன்னைத் தேகமென்றறிகின்ற பிராந்தி ஞானமாகிய கற்பு

யைபானது தன் மீதேறினவனை எழுவகைப் பிறப்புகளாகச் சொல்லப்படாநின்ற சமுத்திரத்தினுடைய அமிழ்த்தும் விரோதியாம், எ-று

இஃது தாப்பிசைப் பொருள்கோள் பின்பகை என்றமையால் முன் உறவு வருவிக்கப்பட்டது.

க-ரை, தன்னைப் பிரஹ்மமென்றறிதல் உண்மை ஞானமும்; தேகமென்றறிதல் பிராந்தி ஞானமும் ஆம் என விவேகிக்க வேண்டும், எ-ம், [அ]

[இதுவுமது]

[கட்டளைக் கலித்துறை]

உ௩. விள்ளுள் ளமுமதன் வேறும் விடயமு மேவறிவு ந்
தள்ளுறு மித்தைய வேநா மறிதலிற் சாற்றுமிவ ற்
றுள்ளும் புறம்பு நிறையின்ப மாய வுளபொரு ளு
முள்ளுத லெங்ஙன்மற் றென்றுமுன் னுவிடத் தூற்றி
டுமே. (க)

இ-ள். வின்னு உள்ளமும் - சொல்லாநின்ற அந்தக்கரணமு (ஞாதிருவு)ம், அதன் வேறு ஆம் விடயமும் - அவ்வந்தக்கரணத்தின வேறுபிய சத்த முதலிய விஷய (ஞேய)மும், மேவு அறிவும் - [விஷயங்களிடத்துச்] செல்லுகின்ற அந்தககரண விருத்தியு (ஞானமும) ஆகிய மூன்றும், தள்ளுறும் மித்தையவே - [நமது சொரூபமல்ல] கழிக்கத்தக்க பிராந்தியேயாம், [அதற்கு ஏது கூறுகின்றார்] நாம் அறிதலின் — நம்மாலறியப்படுதலின், [ஆனால் நமது சொரூபம் எப்படிப் பட்டதெனின் அதற்குக் கூறுகின்றார்], சாற்றும் — திரிபுடியென்று சொல்லப்படுகின்ற, இவற்று - அந்தககரணம் இதன் விருத்தி விஷயம் ஆகிய இவைகளின், உள்ளும் புறம்பும் நிறை இன்பம் ஆய- உள்ளிலும் வெளியிலும் வியாபித்துப் பரிபூரணமாயிருக்கின்ற ஆனந்த

சொருபமாகிய, உளபொருள் நாம் - சத்தவஸ்துவே நாம், [ஆனல் விடயங்களைப்போல நம்மையு மறிதற்கு இம் மனம் வேண்டாவோ வெனின் அதற்குக் கூறுகின்றார்], உன்னுதல் எவன்—[இவ்வாறு எல்லாவிடத்தும் எல்லாக்காலத்தும் பரிபூரணமாயிருக்கின்ற நம்மை மித்தையும் பரிச்சின்னமுமாயுள்ள இம்மனத்தால்] நினைத்தறிதல் எப்படிக் கூடும் கூடாது, [ஆயின் நம்மையறிய முடியாதோ வெனின் அதற்குக் கூறுகின்றார்.], மற்று ஒன்றும் உன்னு இடத்து - பிறிதொன்றினையும் இம்மனம் நினையாதவிடத்தில், உற்றிடும் - [நமது சொரூபம் நம்மால்] அடையப்படும் எ—று.

பொ—ரை. சொல்லாநின்ற அந்தக் காணவடிவ ஞாதிருவும் அதற்கு வேறாகிய சப்த முதலிய விஷயவடிவ ஞேயமும் விஷயங்களிற் செல்லுகின்ற அந்தக் காணவிருத்திவடிவ ஞானமும் ஆகிய மூன்றும் நமது சொரூபமல்ல. கழிக்கத்தக்க பிராந்தியேயாம். அதற்கு எதுகூறினுர். நம்மாலறியப் படுதலின். ஆனல் நமது சொரூபம் எப்படிப் பட்டது? எனின், அதற்குக் கூறுகின்றார். திரிபுடியென்று சொல்லப் படுகின்ற அந்தக் காணம், இதன் விருத்தி. விடயம் ஆகிய இவைகளின் உள்ளிலும் வெளியிலும் வியாபித்துப் பரிபூரணமாயிருக்கின்ற ஆனந்த சொரூபமாகிய சத்து வஸ்துவே நாம். ஆனல் விடயங்களைப் போல நம்மனம் வேண்டாவோ? எனின், அதற்குக் கூறுகின்றார். இவ்வாறு எல்லாவிடத்தும் எல்லாக்காலத்தும் பரிபூரணமாயிருக்கின்ற நமது சொரூபத்தை மித்தையும் பரிச்சின்னமுமாயுள்ள இம்மனத்தினுல் நினைத்தறிதல் எப்படிக்கூடும்? கூடாது, ஆனல்நம்மையறியமுடியாதோ? எனின், அதற்குக் கூறுகின்றார். அந்நிய மொன்றையும் நினையாத விடத்து நமது சொரூபம் நம்மாலடையப்படும் எ—று.

க-ரை. திரிபுடிகள் ஆன்மாவல்லவென்றும், அவற்றின் உள்ளிலும் வெளியிலும் பரிபூரணமாய் வியாபித்திருக்கின்ற ஆனந்த சொரு

பமே ஆன்மாவென்றும், அது மனமிறந்தவிடத்துத் தானாக விளங்கு மென்றும், விவேகிக்க வேண்டும். எ-ம் [க]

[2. விராகம்]

[அது இத்தனை யென்பதும், அவை இத்தன்மையன வென்பதும் கூறுதல்]

[வெண்பா]

உச பகைமையவேண் டாமிப் பவத்தளவும் வேண்டா
மகிமைதரு மெவ்வுலக வாழ்வு—மிகைபடலால்
வேண்டாமென் றுள்ளே விராகமந்த மேமுத ல
வீண்டுதிக்கு மூவகையா யே (க0)

இ—ள் விராகம் - [விஷயங்களிலுண்டாகின்ற] வைராக்கியம், மந்தம் முதல – மந்த வைராக்கியம், தீவிர வைராக்கியம் [என்று மூன்றாகச் சொல்லப்படும் அவை முறையே], பகைமைய வேண்டாம் - [விஷயங்கள்] விரோதிகளாயிருக்குமவைவும் வேண்டாம் என்றும்], இப் பவத்தளவும் வேண்டாம் - இத்தேகஞ்சீவித்திருக்கும் வரையும் வேண்டாம்[என்றும்], மகிமைதரும் - மாட்சிமையைத் தருகின்ற, எவ்வுலக வாழ்வும் - [பிரமலோக முதலிய] எந்த வுலகத்திலுண்டாகின்ற வாழ்க்கையும், மிகைபடலால் - [பிறவித்] துக்கத்தைத் தருதலால். வேண்டாமென்றும், உள் – [மனிதர்களுடைய] அந்தக் கரணத்தில், ஈண்டு- இவ்வுலகத்தில், மூவகையாய் உதிக்கும் - மூன்று விதமாயுண்டாகும். எ-று

பொ-ரை. விஷயங்களிலுண்டாகின்ற வைராக்கியமானது மந்த வைராக்கியம், தீவிரவைராக்கியம், தீவிரதர வைராக்கியம் என்று மூன்றாகச் சொல்லப்படும். அம்மூன்றும் முறையே விஷ

யங்கள் விரோதிகளாயிருக்குமளவும் வேண்டாமென்றும், இத்தேகம் சீவித்திருக்குமளவும் வேண்டாமென்றும், மாட்சிமையைத் தருகின்ற பிரமலோக முதலிய எந்தவுலகத்திலுண்டாகின்ற வாழ்க்கையும் பிறவித் துக்கத்தைத் தருதலால் வேண்டாமென்றும், மனிதர்களுடைய அந்தக் காணத்தில் இவ்வுலகில் மூன்று விதமாயுண்டாகும், எ-று

என்றென்னும் இடைச்சொல் ஏனைய இடங்களிலுஞ் சென்றியைந்தது.

க-ரை வைராக்கியமானது மந்தம், தீவிரம், தீவிரதரம் என மூன்று விதமாய் மனிதர்களிடத்திலுண்டாகும். எ-ம் [கo]

[ங. சமாதிஷட் சம்பத்தி]

[ங. க. சமம்]

[சர்வமும் பிரஹ்ம மேன்றறிதலால் மனமடங்கும் எனல்]

[விருத்தம்]

உக. கோடுதொறுந் தாவுமொரு குரங்கிருந்த காவனைத்துங் குறைப்புண்டக்கா
னீடுதொழிலொழிந்துநிற்கு நெறிபோல மயக்கமதானில்லா வுள்ள
மோடிவிழும் விடயமெலா மொருபிரஹ்ம மெனுமறிவா லொழிப்பினேயு
நாடிடுமப் பரம்பொருளை நண்ணினும்விண் ணெண்ணுநலமா மென்றே (கக)

இ-ள். கோடுதொறும் - மரக்கொம்புகள் தோறும், தாவும் - தாண்டுகின்ற, ஒரு குரங்கு – ஒரு வானரமானது, இருந்தகா அனைத்தும் - [தான்] வசித்திருந்த சோலையெல்லாம், குறைப்பு உண்டக்கால் - வெட்டப்பட்டழிந்த விடத்து, நீடு தொழில்- [தாண்டுதல்]

முன் னெடுநாட் பழகிவந்த தொழிலானாலும், ஒழிந்து நிற்கும். [தாவு தற்கேதுவாகிய மரங்களில்லாமையால் அத்தொழிலை] விட்டிருக்கும், நெறிபோல - முறைமை யொப்ப, மயக்கமதால் - [விஷயங்கள் சத்தியமுஞ் சுகசாதனுமாமென்னும்] பிராந்தியால், நில்லாவுள்ளம் -[வேறு பல வுபாயங்களாலடக்கினும்] அடங்காதமனமானது, ஓடிவிழும் - தன்னுல் விரைந்து சென்று பற்றப்படுகின்ற; விடயம் எலாம் - விஷயங்களெல்லாவற்றையும்' ஒரு பிரஹ்மம் எனும் - [இவையனைத்தும்] அகண்டைகரசப்பரிபூரணப் பிரஹ்ம சொரூபமே என்னும், அறிவால் - ஞானத்தினுலே, ஒழிப்பின் - பாதம் பண்ணில், [மித்தையென்று பிச்சயித்து அவற்றின்கண்ணுள்ள சத்தியத்துவ புத்தியை விடுத்தால்] 'ஓயும் - [அம்மனத்திற்கு விஷயங்களைப்பற்றிச் செல்லுந் தொழில்] ஒழியும், [அத்தொழிலொழியவே] அப்பரம் பொருளை நாடிடும் - [மெய்யாகக்கண்ட] அந்தமேலாகிய பிரஹ்ம சொரூபத்தை விரும்பும்[சமாதியிலசைவற நிற்கும்], விண்ணண்ணினும் - [அப்பால்] சுவர்க்கபோகம் [வலிதின்வந்து தன்னைச்] சேரினும், நலம் ஆம் என்று எண்ணுது - அதனைச் சுகசாதனமென்று நினைக்காது, துச்சமென்று வெறுத்துவிடும், எ-று

பொ-ரை. மரக்கொம்புகள் தோறுந்தாண்டுகின்ற ஒரு வானரமானது தான் வசித்திருந்த சோலைகளெல்லாம் வெட்டுப்பட்டழிந்த விடத்துத் தாண்டுதல் முன் னெடுநாட் பழகிவந்த தொழிலானாலும் தாவுதற்கேதுவாகிய மரங்களில்லாமையால் அத்தொழிலை விட்டிருக்கும் முறைமையொப்ப விஷயங்கள் சத்தியமுஞ்சுகசாதனமுமாமென்னும் பிராந்தியால் வேறுபல வுபாயங்களாலடக்கினும் அடங்காத மனமானது தன்னுல் விரைந்துசென்று பற்றப்படுகின்ற விஷயங்களெல்லாவற்றையும் இவையனைத்தும் அகண்டைகரசப் பரிபூரணப் பிரஹ்ம சொரூபமே யென்னும் ஞானத்தினுலே மித்தையென்று

நிச்சயித்து அவற்றின் கண்ணுள்ள சத்தியத்துவ புத்தியை விடுத்தால் விஷயங்களைப்பற்றிச் செல்லுந்தொழில் அம்மனத்திற்கு ஒழியும் அத்தொழிலொழியவே மெய்யாகக்கண்ட அந்த மேலாகிய பிரஹ்ம சொரூபத்தை விரும்பும் அதாவது சமாதியிலசைவற நிற்கும் அப்பாற் சுவர்க்க போகம் வலிதின் வந்து தன்னைச் சாரினும் அதனைச் சுகசாதனமென்று நினைக்காது அச்சமென்று வெறுத்துவிடும் எ-று

விண் ஆகுபெயர்

மன வடக்கத்திற்கு இங்கே கூறியதுபோல "ஊக நன்மையாலல்லது வெலப்படா துள்ளம், வேகமத்த மாவங்கு சத்தலால் வெலப்படுமோ, ஏகபோதத்தை யறிதனல்ல வருடனெய்தல், சோகவாதனை விடலுயிர் தோன்றுரு தொடுக்கல்" என வாசிட்டத்துங் கூறியிருத்தல் காண்க.

க—ஊ மன வடக்கம் சர்வமும் பிரஹ்மம் நிச்சயத்தாலுளதாம். எ—ம். (கக)

[இதுவும் அது]

உசு. ஓயாதோடு தொழிலே மன மொழிய வேண்டின் விடயமெலா
மாயவேண்டாமவ்விடய மன்னும் பிரஹ்ம வடிவமென்று
நீயங்கண்டப் பொருள்காணினிகழ்த்து மந்தப்போக் கொழிந்து
நேய வெனுவன் போலவது நின்றுநந்த நிலைதருமால். [கஉ]

இ—ன். மனம் - மனமானது, ஓயாது ஓடுதொழிலே - தளர்ச்சியின்றி [விஷயங்களில்] ஓடுகின்ற முயற்சியை, ஒழியவேண்டின்-நீங்கவேண்டுமாயின், விடயம்எலாம் - விஷயங்களனைத்தும், மாயவேண்

டாம் - நசிக்க[வேண்டுமென்று நினைக்க] வேண்டாம், [ஏனெனின் சொப்பனத்தும் மனோராச்சியத்தும் விடயங்களில்லாதிருந்தும் மனந் தொழிலற்றிருந்ததில்லையே ஆதலால் மனவடக்கத்திற்கு அஃது உபாயமன்று. மற்றியாது உபாயமெனிற்கேள்] அவ்விடயம்-காணப்ப டும் அவ்விஷயங்களனைத்தும், மன்னும் பிரஹ்மவடிவமென்று-[கற்பி தசர்ப்பம் எங்ஙனம் அதிஷ்டான ரச்சுவடிவமோ அங்ஙனம் பிரஹ்மத் திற் கற்பிதமாகலின் அவ்விடயங்களை உள்ளிலும் வெளியிலும் வியா பித்து அவற்றிற்கு அதிஷ்டானமாய்] நித்தியமாயிருக்கின்ற பிரஹ்ம சொரூபமென்று நிச்சயித்து, நீ அங்கு - நீ விடயங்களெதிர்ப்பட்டவி டத்து, அகண்டப்பொருள் காணில்- [பரிபூரணமாயுள்ள அந்த] ஒரே பொருளைத் தரிசிப்பாயாயின், கிழத்தும் - சொல்லாநின்ற, அந்தப் போக்கு ஒழிந்து-முன் விஷயங்களிலோடிய தொழில் நீங்கி, நேயம் எனுவன்போல - பிரியத்தையுடைய தோழனை யொப்ப, அதுநின்று- அம்மனம் அசைவற நின்று, ஆனந்த நிலைதரும் - பிரஹ்மாநந்தாநுபவ முண்டாகச்செய்யும் எ—று.

பொ—ள். மனமானது தளர்ச்சியின்றி விஷயங்களிலோடுகின்ற முயற்சியை நீக்கவேண்டுமாயின் விஷயங்களனைத்தும் நசிக்கவேண்டு மென்று நினைக்கவேண்டாம். ஏனெனின், சொப்பனத்தும், மனோ ராச்சியத்தும் விடயங்களில்லாதிருந்தும் மனந்தொழிலற்றிருந்ததில் லையே ஆதலால் அஃது உபாயமன்று. மற்றியாது உபாயமெனிற் கேள். காணப்படும் அவ்விடயங்களனைத்தும் கற்பிதசர்ப்பம் எங்ஙனம் அதிஷ்டானரச்சுவடிவமோ அங்ஙனம் பிரஹ்மத்திற் கற்பிதமாகலின் அவ்விடயங்களை உள்ளிலும் வெளியிலும் வியாபித்து அவற்றிற்கு அதிஷ்டானமாய் நித்தியமாயிருக்கின்ற பிரஹ்ம சொரூபமென்று நிச்சயித்து நீ விடயங்களெதிர்ப்பட்டவிடத்துப் பரிபூரணமாயுள்ள அந்த ஒரே பொருளைத் தரிசிப்பாயாயின் சொல்லாநின்ற முன் விஷ

யங்களிலோடிய தொழில் நீங்கிப் பிரியத்தையுடைய தோழனை யொப்ப அம்மனம் அசைவறநின்ற பிரஹ்மமார்க்கமாயவ முண்டா கச்செய்யும். எ—று.

பிரஹ்மதரிசனத்தால் மனமடங்கு மென்பதற்கு உதாரணம்

(வாசிட்டம்.)

"எங்கே யெங்கே மனமோடி யிளையோ ரென்ன வீழ்ந்த
மூலது.
மங்கே யங்கே நின்றெழுப்பி யகண்ட வறிவி லடைவி
ப்பாய்
சங்கே தமதாயிவ்வாறு சாதித் துளமா மதகரியை
வெங்கே தமறத் தளைத்தெல்லா விசாரத் தாலும் வீட
ணைவரம்" என்று கூறியிருப்பது காண்க.

க-ரை மனமடங்குதற்கு விடயங்கள் நாசமாகவேண்டாம் அவற் றிற் கதிஷ்டானமாகிய பிரஹ்ம சொரூபத்தை எவ்விடங்களிலும் பரி பூரணமாகத் தரிசித்தாலடங்கும். எ—ம். [௩௨]

இவ்விரண்டு செய்யுட்களாலுங்கூறிய பிரஹ்ம தரிசனம் பரோ க்ஷமாம். அதாவது சாஸ்திர நிச்சயத்தாலுளதாவதாம்.

[மனமடங்குவதற்கு ஆசை நசிக்கவேண்டுமெனல்]

௨௪. ஆசை யளவே மனத்துருவா மதுமாய் வுறின்மற் றிதுகெடுமம்
மாசா ருளமே பிறப்பிறப்பாம் வருத்த முதவு பெரும்பகையம்
மாசற் றிடுமே லருவமன மறுவிலின்பந் தருதுணையா
னேசித் திடுவான் மனமாய்வை நிகழ்கச் சொழிப்பா லடைகுவனே. [௩௩]

இ-ள் ஆசையளவே - [விஷய] இச்சை எவ்வளவோ அவ்வளவே, மனத்தினுருவாம் - மனத்தினது உருவத்தளவாம், அதுமாய்வுறின் - அவ்விச்சை நசிக்குமாயின்: இதுகெடும் - இம்மனத்தினுருவம் நசிக்கும்; அம்மாசு ஆர் உளமே - அந்த விஷய இச்சை பொருந்திய மனமே, பிறப்பு இறப்பு ஆம் - சனனமரணங்களாலுண்டாகும், வருத்தம் உதவு பெரும்பகை - துக்கத்தைக் கொடுக்கின்ற கொடிய விரோதியாம், அம்மாசு அற்றிடின்மேல் - அந்த விஷய இச்சையாகிய குற்றம் நீங்குமாயின்; அருவமனம் - அருவமனமென்று சொல்லப்படும், மறு இல் இன்பந்தரு துணையாம் - [அவ்வருவமனம்] குற்றமில்லாத பேரின்பத்தைக் கொடுக்கின்ற தோழனாகும், மனமாய்வை நேசித்திடுவான் - மனநாசத்தை விரும்புபவன், நிகழ் நச்சொழிப்பால்-சொல்லாநின்ற இச்சையை நீக்குதலால், அடைகுவன்-பெறுவான். எ-று

பொ-ரை. விஷய இச்சை எவ்வளவோ அவ்வளவே மனத்தினது உருவத்தளவாம். அவ்விச்சை நசிக்குமாயின் இம்மனத்தினுருவம் நசிக்கும். அந்த விஷய இச்சை பொருந்திய மனமே சனனமரணங்களாலுண்டாகும் துக்கத்தைக் கொடுக்கின்ற கொடியவிரோதியாம். அந்த விஷய இச்சையாகிய குற்றம் நீங்குமாயின் அருவமனமென்று சொல்லப்படும். அவ்வருவமனம் குற்றமில்லாத பேரின்பத்தைக் கொடுக்கின்ற தோழனாகும் மனநாசத்தை விரும்புபவன் சொல்லாநின்ற இச்சையை நீக்குதலாற் பெறுவான். எ-று.

க-ரை. மனமடங்குதற்கு விஷயஇச்சையொழியவேண்டும்.எ-ம். [௧௬]

மனம் ஒடுங்குதற்குக் காரணமாகிய அவ்விச்சையொழி
தற் குபாயங் கூறுதல்]

[வெண்பா]

௨அ. அல்லும் பகலு மளவிறுக்க சாதனத் தே
செல்லு மனத்தைத் திருப்பியுய்பி—னல் ல

லொழிந்தா ரெனவிரீ ரோவோ நமனு ர்
எழுந்துவரும் போதிலென் செய் வீர் ௧௪.

இ-ள். அல்லும் பகலும் - இரவும் பகலும், அளவில்துக்க சாதனத்து - அளவில்லாத துன்பத்துக்குக் காரணமாகிய விஷயங்களிடத்து, செல்லும் மனத்தை - [சுகசாதனமென நினைத்து] ஓடுகின்ற மனத்தினை, திருப்பி - அவற்றிலுள்ள தோஷங்களைக் காட்டுதல் வாயிலாக அவற்றிற் [ செல்லாது] மீட்டி, உய்மின் - [தன்னையறிந்து] பிழையுங்கள், அல்லல் ஒழிந்தார் என - [பிறவித்] துக்கம் நீங்கியவர் கள்போல, இரீர்-இராதேயுங்கள், ஓ ஓ - [நீவிரிங்ஙனமிருத்தல் மகா] ஆச்சரியம் ஆச்சரியம், நமனர் எழுந்துவரும்போதில் - இயமதரும ரானவர் எழுந்தருளி வருங்காலத்தில், என் செய்வீர் - யாது செய் வீர்கள். எ—று.

பொ—ரை. இரவும் பகலும் அளவில்லாத துன்பத்திற்குக் காரண மாகிய விஷயங்களினிடத்துச் சுகசாதனமென நினைத்து ஓடுகின்ற மனத்தினை அவற்றிலுள்ள தோஷங்களைக் காட்டுதல் வாயிலாக அவற் றிற் செல்லாது மீட்டித் தன்னையறிந்து பிழையுங்கள். பிறவித்துக்கம் நீங்கியவர்கள்போல் இராதேயுங்கள். நீவிரிங்ஙனமிருத்தல் மகா ஆச் சரியம்! ஆச்சரியம்! இயமதருமரானவர் எழுந்தருளி வருங்காலத் தில் யாது செய்வீர்கள். எ—று.

விடயமானது அநுபவகாலத்திற்கு முன்னும் பின்னும் முறையே கிடைக்கவில்லையே என்றும் நீங்கிவிட்டதே யென்றும் துக்கத்தைத் தருதலால் துக்கசாதனமென்பது பிரசித்தம். அநுப வகாலத்தில் சுகத்துக்குச் சாதனமன்று- விடயவிச்சை யுடையவ னுக்கு அவ்விச்சை மறைதல் மாத்திரத்திற்குச் சாதனமாம், ஆனால் சுகத்திற்குச் சாதனம் யாதெனின். இச்சை நீங்கிய நிச்சல அந்தக் கரணமேயாம். அதனிடத்தில் ஆன்மாவின் சொரூபானந்தம் பிரதிவிம்

பிக்கின்றது. அந்த ஆன்மாவின் பிரதி பிம்பானந்தத்தை விடயவிச்சையுடையவன் விடயத்திலுள்ளதாகப் பிராந்தியடைகின்றான். இவ்வாறன்றி விடயத்திலிருந்தே ஆநந்தம் அநுபவிக்கப்படுமானால் ஒருவனுக்கு ஆநந்தத்திற்கேதுவாகிய பிரியவிடயம் நீங்காது தன்னிடத்திருக்குமளவும் ஆனந்தமும் நீங்காதிருக்க வேண்டும் அங்ஙனமாயின் ஒருவனுக்குப் பிரியமாகிய புத்திரன் தேசாந்தரத்துக்குப் போய்ச் சில நாட் சென்று வரப்பார்த்தவுடன் அவன் மிகுந்த ஆனந்தத்தை யடைகின்றான். மேற்கூறியவாறு விஷயத்திலேயே ஆநந்த மிருக்குமாயின் புத்திரன் தன்னிடத்து நீங்காதிருத்தலால் அவ்வானந்தமும் நீங்காதிருக்கவேண்டும். அநுபவத்தில் அவ்வாறு காணப்படவில்லை. பின்னையோ புத்திரனைக் கண்டமாத்திரத்தி லுண்டாகிய ஆநந்தம் சற்று நேரத்தில் மாறிவிடுகிறது. ஆதலால் விடயத்தில் ஆனந்தமில்லை மேலும் விடயத்திலேயே ஆநந்தம் இருக்குமானால் யாதொரு விடயமுமில்லாத சுழுத்தியில் ஆனந்தாநுபவம் உண்டாகலாகாது. சுழுத்தியில் ஆனந்தம் அநுபவிக்கப்படுதேலோ எல்லோருக்கும் அநுபவசித்தம் ஆதலால் விடயந் துக்கசாதன மெனப்பட்டது.

இவ்வாறே "மேவுதற் கரிதாய்க்கேசம்புகையதாய் விழிக்கு நன்காய்த், தீவினைச்சிகை சேர்மாதரெனுங் கனற்றிரளம்போல, யாவரைச் சுடாது தூரத்தெறிகின்ற நரகத்தீக்குப், பாவையர் குளிர்ந்த மேனி பசையிலாவிறகதாமே" எனவும்.

"மாமடஞ் செறிந்த நெஞ்சின் மனிதராம் புட்பிடிக்கா, காமனும் வேடன் வீசும் வலை யொப்பார் கருங்கண்மாதர், நீமனச் சேறூர் சன்மச்சிறு குழிமீனுமாந்தர்க், கேமவாதனைக் கயிற்றுத் தூண்டிலுக்கிரையுமொப்பார்" எனவும் வாசிட்டத்திற் கூறியிருத்தல் காண்க.

க-ரை விடயங்களிற் செல்லுகின்ற மனத்தை அவற்றின் தோஷதிருஷ்டி வாயிலாக அடக்க வேண்டும். எ-ம். [௧௪]

[மனதோடு கூடாமற் பிரிந்து நின்றால் அது நசிக்கும் என மற்றேருபாயங் கூறுதல்]

உகூ. தினைத்தனையு முள்ளத்தைச் சேரி னது வே
யனர்த்தமெனக் கண்டகன்றார் தாமே—சினத்து டனே
கொன்றவரா வாரவர்பாற் குற்றேவல் செய்திருக்கு
மென்றுஞ் சுகமுதவி யே (க )

இ-ள், தினைத்தனை - ஓர்தினையளவு [பொழுது], உள்ளத்தைச் சேரின் – மனத்தைச் சேர்ந்தால், அது [உம்] – [கூடிய] அத்தினையளவு பொழுதும், அனர்த்தம் [ஏ] எனக்கண்டு - துக்கமே [யொழிய சுகமின்று] எனவறிந்து, அகன்றார் தாமே – நீங்கினவரே, சினத்துடன் - கோபத்துடன், கொன்றவர் ஆவார் - [அதனுருவத்தை] நாசம் செய்தவராவார், அவர் பால் - அவரிடத்தில் [உருவங்கெட்ட அம்மனம்], என்றும் சுகம் உதவி - எந்நாளுஞ் சுகத்தைத் தந்து, குற்றேவல் செய்திருக்கும் - நிறுத்தினவிடத்தில் நிற்கும். எ-று

பொ-ரை. ஓர் தினையளவு பொழுது மனத்தைச் சேர்ந்தால் கூடிய அத்தினையளவு பொழுதும் துக்கமே யொழியச் சுகமின்றென வறிந்து நீங்கினவரே கோபத்துடன் அதன் உருவத்தை நாசஞ் செய்தவராவார் அவரிடத்தில் உருவங்கெட்ட அம்மனம் எந்நாளுஞ் சுகத்தைத் தந்து நிறுத்தினவிடத்தில் நிற்கும். எ-று

தினைத்தனையும் என்றதன் உம்மையும் அதுவே என்றதின் ஏகாரமும் பிரித்துக்கூட்டப்பட்டன.

இங்கே உள்ளம் என்றது விடயக்கவர்ச்சியுடைய நிலைமனத்தை

மனத்தினின்றும நீங்குதலாவது அது தொழிற்படுந் தோறும அதன் வசப்படாமல் அதை விஷயமாக்கியறிதலாம்.

க-ரை. மனத்தோடு கூடாமல் தான் வேருனல் அம்மனத்தின் மலத்தன்மை கெடும், எ-ம். [சஜ]

### ௩. உ. தமம்
### (விருத்தம்)

௩0. மண்டூகச் செயல்போலிந் தியம்விடயந் தொறும்
வீழ்த்திவருந்தி மீட்டித்
திண்டாடி யுழல்வீரிச் செயலொழிமி னூல்பயிலுந்திற
த்தாற் றீர்க்கி
லுண்டாகா திலங்கியெங்கு முள்ளதொரு பொருள
தனை யுள்ள வாறே
கண்டோயுந் திறமடைவீர் கட்டொழியும் விட்டொ
ளிமுன் கங்குல் போலே (சகூ)

இ-ள் மண்டூகச் செயல்போல் — தவளையினது [தாவும்] தொழில்போல, இந்தியம் - இந்திரியங்களை, விடயந்தொறும் - [எதிர்ப்பட்ட] விஷயங்களிலெல்லாம், வீழ்த்தி - [தாவி] விழும்படி விடுத்து, வருந்தி மீட்டி — பின் மிகு முயற்சியாற் றிருப்பி, திண்டாடி உழல்வீர் — [இச்செயலால் மனம] கலங்கிச் சுழல்கின்றவர்களே, நூல் பயிலும் திறத்தால் - சாஸ்திர ஆராய்ச்சி செய்யும்வலியால்; இச் செயல் ஒழிமின் - [இந்திரியங்களை விடயங்களில் தாவி விழுமாறு செலுத்துகின்ற] இத்தொழிலை விடுங்கள், [இந்திரியங்களிற் செல்லவொட்டாது அடக்குங்கள்], தீர்க்கில் - அவ்வாறு செல்லவொட்டாது அடக்கு வீராயின், உண்டாகாது இலங்கி - நித்தியமாய்ப் பிரகாசித்துக்கொண்டு, ஒரு பொருள் எங்கும் உள்ளது — ஒரு வஸ்துவானது எங்கும் வியாபகமாயிருக்கின்றது, அதனை உள்ளவாறு கண்டு - அவ்வஸ்துவை இருந்த வண்ணம் தரிசித்து, ஓயு

திறம் அடைவீர் - உபசாந்தத் தன்மையுடையவராவீர், [ அதனாலே ], ஒளி முன் கங்குல்போல் - சூரியனுக்கெதிரே நில்லாத இருளைப் போல, கட்டுவிட்டு ஒழியும் - [ உம்மைப்பற்றிய சமுசார ] பந்தஞ் சேஷமறக் கெடும். எ-று

பொ-ரை. தவளையினது தாவும் தொழில்போல இந்திரியங்களை எதிர்ப்பட்ட விஷயங்களிலெல்லாம் தாவி விழும்படி விடுத்துப் பின்பு மிகு முயற்சியாற்றிருப்பி இச்செயலால் மனங்கலங்கிச் சுழல்கின்றவர்களே சாஸ்திர ஆராய்ச்சி செய்யும் வலியால் இந்திரியங்களை விடயங்களில் செல்லவொட்டா தடக்குங்கள். அவ்வாறு செல்லவொட்டாதடக்குவீராயின் நித்தியமாய்ப் பிரகாசித்துக்கொண்டு ஒரு வஸ்துவானது எங்கும் வியாபகமாயிருக்கின்றது அவ்வஸ்துவை இருந்த வண்ணம் தரிசித்து உபசாந்தியுடையவராவீர், அதனால் சூரியனுக்கெதிரே நில்லாத இருளைப்போல உம்மைப்பற்றிய சமுசாரபந்தம் சேஷமறக்கெடும். எ-ம்

க-ரை. விடயங்களில் இந்திரியங்களைச் செல்லவொட்டா தடக்கினால் ஞானம் எளிதிலடையப்படும். எ-ம் (கசு)

[இதுவுமது]

கஎ. செல்லுமிடந் தொறுமெதிரா னமம்வடி விரண்டினை
யுந் தீண்டி டாமன்
மெல்ல மெல்ல விந்தியமெவ்வ் வளவுநிற்கு மந்நிலையை
விலகா துள்ளம்
புல்லுமஃதா லகண்டபரி பூரணமெய்ஞ் ஞானநிலை
பொலியு மஃதா
லல்லலெலா மல்லனவா பத்தமியா வின்பநிலை யமை
யுந் தானே (கஎ)

இ-ள். செல்லும் இடந்தோறும் - [ஒருவனுக்குச்] சஞ்சரிக்கும் இடங்களெங்கும், எதிர் ஆம் நாமம் வடிவு - நேர்படுகின்ற பெயர் உருவம் என்னும், இரண்டனேயும் - இரண்டையும், தீண்டிடாமல் - பொருந்தாமல், மெல்ல மெல்ல - பையப்பைய, இந்தியம் எவ்வளவு நிற்கும் - இந்திரியங்கள் எம்மாத்திரம் நிற்குமோ, அந்நிலையை - அம்மாத்திரத்திற்கு [அசைவற்று] நிற்கும் தன்மையை, உள்ளம் விலகாது புல்லும் - மனமானது நீங்காமற் பொருந்தும், அஃதால் - [மனத்தினது] அந்த நிச்சலத்தன்மையால், அகண்ட பரிபூரண மெய்ஞ்ஞான நிலை பொலியும் - ஏகமாயும் பரிபூரணமாயுமிருக்கின்ற பிரஹ்ம ஞானநிலை [நாள்தோறும்] வளரும், அஃதால் - அதன் வளர்ச்சியால், அல்லல் எலாம் அல்லனவாய் - சர்வ துக்கங்களும் இல்லாதனவாய், அத்தமியா இன்பநிலை அமையும் - அழியாத ஆனந்தமயமாகிய மோக்ஷம் பொருந்தும், எ-று

பொ-ை ஒருவனுக்குச் சஞ்சரிக்கு மிடங்களெங்கும் நேர்படுகின்ற நாமம் உருவம் என்னும் இரண்டனேயும் பொருந்தாமல் பையப்பைய இந்திரியங்கள் எம்மாத்திரம் நிற்குமோ அம்மாத்திரத்திற்கு அசைவற்று நிற்குந் தன்மையை மனமானது நீங்காமற் பொருந்தும் மனத்தினது அந்த நிச்சலத் தன்மையால் ஏகமாயும் பரிபூரணமாயுமிருக்கின்ற பிரஹ்ம ஞானநிலை நாள்தோறும் வளரும் அதன் வளர்ச்சியால் சர்வ துக்கங்களுமில்லா தனவாய் அழியாத ஆனந்த மயமாகிய மோக்ஷம் பொருந்தும். எ-று,

க-ை. இந்திரிய நிக்கிரகத்தால் மனோநிக்கிரகமும், மனோநிக்கிரகத்தால் ஞானமும்ஞானத்தால் மோக்ஷமும் உண்டாம் எ-ம்[௧௭]

[இதுவுமது]

௩௨. ஒட்டிருப்ப தறியாம லுண்விருப்ப விருப்பாலவ்
வொட்டிற் பட்டுக்

கட்டமுறு ககங்கண்டு மொழியாதி விருப்படைந்து
கருமவொட்டிற்
பட்டுழல்வீ ரஃதொழிமி னரிதெனிலங் காதியயற்
பரநா மென்று
கட்டழிக்கு மறிவுதகங் குளித்துணுமினக்கருமங் கழி
யுமாறே (௧௮)

இ-ள், ஊண்விருப்ப இருப்பால் – [வேடனால் ஒட்டுப்பூசிய கழிகளிலொட்டி வைக்கப்பட்டிருக்கின்ற] உணவிடத்தாசையுடைமையால், ஒட்டு இருப்பது அறியாமல் – [அவ்வுணவு தம்மைப்பற்றிக்கொள்ளும் வலியுடைய] ஒட்டின்கண்ணிருக்குந் தன்மையைத் தெரியாமல், அவ்வொட்டில்பட்டு - [அந்த இரையைத் தின்னமுயன்று] அவ்வொட்டினாற் பற்றப்பட்டு, கட்டம் உறு - [பிராண] ஆபத்தையடையும், ககம்கண்டும் - பறவைகளைப் பார்த்திருந்தும், ஒழி ஆதி விருப்பு அடைந்து - [நாம் இவ்விஷய சுகங்களை அநுபவிக்கும் போக்தாவென்னும் புத்தியால்] சத்த முதலிய விஷயங்களை இச்சித்து, [அவற்றில் சுரோத்திராதி இந்திரியங்களை விடுத்து], கரும ஒட்டில் - கருமாசங்கத்தால், [இத்தொழிலுக்கு நாம் கர்த்தாவென்றுண்டாகும் கர்த்திருத்துவ அபிமானத்தால்), பட்டு உழல்வீர் - பந்தப்பட்டு [பிறப்பிறப்புக்களிற்]. சுழல்கின்றவர்களே, அஃது ஒழிமின் - இந்திரியங்களை விடயங்களிற் செலுத்துகின்ற அத்தொழிலை ஒழியுங்கள், (இந்திரிய நிக்கிரகம் பண்ணுங்கள்), அரிது எனில் - [அடக்குதல்] அருமையாயிருக்குமாயின், அங்கஆதி- [கன்ம காரணங்களாயுள்ள] தேக முதலாகிய ஐந்தினுக்கும், அயல் - வேறாகிய, பரம் நாம் என்று - அசங்க உதாசின ஆன்மாவே நாமென்றுண்டாய், கட்டு அழிக்கும் - பந்தத்தை நாசஞ்செய்வதாகிய, அறிவு உதகம் குளித்து உணுமின் – ஞான

தீர்த்தத்தில் மூழ்கிப் புசியுங்கள், அக்கருமம் கழியும் = அக்கருமபந்தம் ஒழிந்துவிடும். எ-று

பொ-ள. வேடனால் ஒட்டப்பூசிய கழிகளிலொட்டி வைக்கப்பட்டிருக்கின்ற உணவினிடத்தாசை யுடைமையால் அவ்வுணவு தம்மைப் பற்றிக் கொள்ளும் வலியுடைய ஒட்டின் கணிருக்குந் தன்மையைத் தெரியாமல் அந்த இரையைத் தின்ன முயன்று அவ்வொட்டினாற் பற்றப் பட்டுப் பிராணபத்தை யடையும் பறவைகளைப் பார்த்திருந்தும் நாம் இவ்விஷய சுகங்களை யநுபவித்தும் போக்தா (புசிப்பவன்) என்னும் புத்தியால் சத்தமுதலாகிய விடயங்களை விச்சித்து அவற்றில் சுரோத்திராதி இந்திரியங்களை விடுத்து கருமா சங்கத்தால் (இத்தொழிலுக்கு நாம் கர்த்தாவென் றுண்டாகும் கர்த்திருத்வ அபிமானத்தால்) பந்தப் பட்டுப் பிறப்பிறப்புக் களித சுழல்கின்றவர்களே இந்திரியங்களை விடயங்களிற் செலுத்துகின்ற அத்தொழிலை ஒழியுங்கள் (இந்திரிய நிக்கிரகம் பண்ணுங்கள்) அஃது அருமையா யிருக்குமாலால் கன்ம காரணங்களாயுள்ள தேக முதலாகிய ஐந்தினுக்கும் வேறாகிய அசங்க உதாசின ஆன்மாவே நாமென்றுண்டாய்ப் பந்தத்தை நாசஞ் செய்வதாகிய ஞான தீர்த்தத்தில் முழுகிப் புசியுங்கள். அக்கரும பந்தம் ஒழிந்து விடும். எ-று

தா-ம். கருமாசங்கமாவது கருமங்களினிடத்து இத்தொழிலுக்கு நான் கர்த்தாவென்றுண்டாகும் அபிமானமாம். அக் கர்த்திருத்துவ அபிமானந் தான் யாதெனின், சத்தாதி விஷயங்கள் எதிர்ப்பட்ட பொழுது ஞானேந்திரி யங்களால் முறையே உளவாகா நின்ற கேட்டல், பரிசித்தல், காண்டல், உருசித்தல், மோத்தல்களாகிய அச்சுரோத்திராதி இந்திரியங்களின் தொழில்களை, நான் கேட்டேன், நான் பரிசித்தேன், நான் கண்டேன், நான் உருசித்தேன், நான் மோந்தேனென்று தன் [ஆன்மாவின்] தொழில்களாக அபிமானித்தலாம். இவ்

வபிமானத்தால். பந்தப் பட்டுப் பிறப்பிறப்புக்களிற் சுழல்கின்றவர் களே என்பார் 'கரும வொட்டிற் பட்டுழல்வீர்' என்றும் அவ் விந்திரி யங்களை விடயத்திற் செல்ல வொட்டாமல் அடக்குதலே சிறந்ததென் பார் 'அஃதொழியின்' என்றும் அஃது 'முடியாதாயின் இக்கரும ங்கள் தேக முதலிய ஐந்தினாலும் உளவாவன, நான் இவ்வைந்தினுக் கும் வேறாகிய அசங்க பரிபூரண சச்சிதானந்த கனமாயிருக்கின்றே னென்று தன்னை வேறாகக்காணின் அக்கேட்டல் முதலிய தொழில் களாற் பந்தமுளதாகா தென்பார் 'அரிதெனி லங்காதியயற்பானா மென்று, கட்டழிக்கு மறிவுதங் குளித்துணு மினக்கருமங் கழியும்' என்றுங் கூறினார். இதனை ஒட்டானது ஜலசம்பந்தமுடைய சரீ ரத்தைப் பற்றாதது போல, அக்கேட்டலாதி கரும பந்தங்கள் ஞான சம்பந்தமுடைய புருஷனைப் பற்றாதென்பதை இவ்வுபமானத்தா லுய்த்துணர்ந்து கொள்க.

கன்ம காரணங்கள் ஐந்தாவன:— (௧) தூலசரீரமும், (௨) கர் தாவடிவ அகங்காரமும், (௩) ஞானகன்மேந்திரியங்கள் பத்தும் மனம்புத்தி இரண்டும் ஆகியபன்னிரண்டு கரணங்களும், (௪) சேஷ் டைவடிவ பிராணாதி வாயுக்களும், (௫) இந்நான்கிற்கும் முறையே அநுக்கிரகம் பண்ணுகின்ற (௧) பிருதிவியும், (௨) உருத்திரனும் (௩) திக்கு, வாயு, சூரியன், வருணன் அசுவினி, அக்கினி 'இந்திரன் உபேந்திரன. மித்திரன், பிரஜாபதி, சந்திரன், பிருகஸ்பதி, ஆகிய பன்னிருவரும, (௪) பிராணனுக்குச் சத்தியோஜாதன். அபானனுக்கு வாமதேவன், வியானனுக்கு அகோரன், உதானனுக்குத்தற் புரு ஷன், சமானனுக்கு ஈசானன என்னுந் தேவதைகளும் ஆமென்க.

இதற்குப் பிரமாணம்-பகவற்கீதை

"இருப்பிடமாமுடம் பியற்று மாருயிர், கருத்தினை முதலிய காணங் காற்றினால், விருப்பொடு வருந்தொழிலிவற்றின் மேலரு, வருத்த மாந்தெய்வமொன்றாக வைந்தரோ" என்று கூறியிருத்தல் காண்க.

க-ரை. இந்திரியங்களை விடயங்களிற் செல்லவொட்டா தடக்கவேண்டும். முடியாதாயின் அவ்விந்திரியங்களுக்குத் தான் வேருதல் வேண்டும். எ-ம் (௬௪)

[௩. ௩. விடல்]

[வெண்பா]

௩௩. இச்சையொழி வால்விடயத் தின்புவர்ப்பே நேரு மஃதாற்
பொய்ச்சலனம் போகுமறு போகவே—சொச்சொரு பர்
தோன்ருமற் றோன்றுஞ் சுகமயமா யஃதன்றோ
தான்ருனாய் நிற்குந் தலம் (௬௫)

இ'ள். இன்பு விடயத்து [உம்] - [முற்காலத்து] இன்பமாகக் காணப்பட்ட விடயத்தின் கண்ணும், இச்சை ஒழிவால் - வைராக்கிய பலத்தால், உவர்ப்பே நேரும் - [பின் அடையப்படினும் வாந்தியிற்போல] வெறுப்பே யுளதாம், அஃதால் - அந்த வைராக்கியத்தின் பலமாகிய உபாதியால், பொய்ச்சலனம் - பொய்யாகிய மனத்தின் அசைவு அறும், அதுபோகவே - அம்மனத்தின் அசை வறவே, சொச் சொருப ம் - தனது உண்மை வடிவம (ஆகிய பிரஹ்மம்), சுகமயமாய் - பேரின்பமயமாய், தோன்ருமல் தோன்றும் - தனக்கந்நியமாகத் தோன்ருமல் தானுகத் தோன்றம், அஃது அன்றோ - அஃதல்லவா, தான் தானாய் நிற்குந்தலம் - ஆன்மாவே பிரஹ்மமாய் நிற்குந்தானமாம். எ-று

பொ—ரை. முற்காலத்து இன்பமாகத் தோன்றிய விடயத்தின் கண்ணும் வைராக்கிய பலத்தால் மீள அடையப்படினும் வாந்தியிற் போல வெறுப்பே யுளதாம். அந்த வைராக்கியத்தின் பலமாகிய உபாதியால் பொய்யாகிய மனத்தின் சலனம் அறும். அம்

மனத்தின் அசைவறவே தனது உண்மை வடிவமாகிய பிரஹ்மம் பேரின்ப மயமாய்த்தனக்கந்நியமாகத் தோன்றாமல் தானாகவே தோன்றும். அஃதல்லவா ஆன்மாவே பிரஹ்மமாய் நிற்குந்தான மாம். எ-று.

விடயத்தும் என்பதின் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

க-ளா. உபாதியுண்டானால் பிரஹ்மான்மஐக்கிய நிலை சித்திக்கும். எ-ம். (கக)

[க. ச. சகித்தல்]

௩௪. உட்டணந் தட்பாதியுறுகண் பொறுப்பவனை
இட்டமுறு மெய்ப்பொருளை யெய்துமமர்—கிட்டி
யெறிவேல் புறம்வாங்கா வேனுடையா னின்ப
முறலொழி யாவாறுபோ லும் (௨0)

இ-ள். உட்டணம் தட்ப ஆதி - வெப்பம் குளிர் முதலிய இருமைத்தருமங்களினால், உறுகண் பொறுப்பவனே - [சிரவணாதிகட்குத் தடையாயுண்டாகின்ற] துக்கங்களைச் சகிப்பவனே, இட்டம் உறும் மெய்ப்பொருளை எய்தும் - விரும்புகின்ற! உண்மை வஸ்துவை அடைவான், அமர்கிட்டி - போர்க்களத்தின்கட் சென்று, எறிவேல்புறம் வாங்கா - [பகைவனால்] எறியப்பட்ட வேலாயுதத்தை முதுகின்கண் வாங்காது [எதிர்த்து யுத்தஞ் செய்கின்ற,] ஏனுடையான் - [மிகுந்த] வலிமையையுடைய [மகாயுத்த வீரனானவன், இன்பம் உறல் - [தான் விரும்பிய] சுகம் பெறுதலை, ஒழியா ஆறுபோலும் - நீங்காத தன்மை ஒக்கும். எ-று.

பொ-ளா. வெப்பங் குளிர் முதலிய இருமைத்தருமங்களினால் சிரவணாதிகட்குத் தடையாயுண்டாகின்ற துக்கங்களைச் சகிப்பவனே விரும்புகின்ற உண்மை வஸ்துவை அடைவான். போர்க்-

களத்தின்கட் சென்று பகைவனலெறியப்பட்ட வேலாயுதத்தை முதுகின்கண் வாங்காது எதிர்த்து யுத்தஞ்செய்கின்ற மிகுந்த வலிமையையுடைய மகாயுத்த வீரனனவன் விரும்பிய சுகம் பெறுதலை நீங்காத தன்மையொக்கும். எ-று.

பகைவனுடைய ஆயுதங்கட்கஞ்சாது அவனேடு யுத்தஞ்செய்பவன் பகைவனை வெல்லுதல் அல்லது அவனல் தன்னுயிர் விடுதல் ஆகிய இருவகையாலும் முறையே இவ்வுலகவின்பம் அல்லது மேலுலகவின்பங்களை யடைதல் எங்ஙனந்தவருதோ அங்ஙனங்குளிர் வெப்ப முதலியவற்றல் வரும் துக்கங்களைச் சகித்துக்கொண்டு ஞானசிரியரிடஞ் சிரவணுதிகளைத் தளர்வின்றிச் செய்பவன் வைராக்கியம் அல்லது ஞானம் ஆகிய இருவகையாலும் முறையே பிரஹ்ம லோகவின்பத்தை அல்லது மோக்ஷ வின்பத்தையடைதல் தவருதென்பது கண்டுகொள்க.

க-ளர். சீதோஷ்ணுதிகளாலுண்டாகின்ற துக்கங்களைச் சகிப்பவன் உண்மை வஸ்துவை அடைவான். எ-ம். ௨௭

[௬. ௫. சமாதானம்]

௩௫. எப்பொழுது மெவ்விடத்து மெப்பொருளுங் காணது
மெய்ப்பொருளே கண்டார் வினையண்டார்—பொய்ப்பிலதா
மின்புருவா வார்க ளிறப்பும் பிறப்புமெனுந்
துன்பிலராய் வேதத் துணிவு ௨௮

இ-ள் எப்பொழுதும் - எந்தவேளையிலும், எவ்விடத்தும் - எந்தவிடத்திலும், எப்பொருளும் - [நாம ரூபமயமாகிய] எந்தப்பொருளையும், காணது - [கற்பிதமென்னும் நிச்சயத்தாற் பொருளாக] நோக்காமல் விடுத்து (அவற்றின் உயர்வு தாழ்வு சுத்தா சுத்தங்களை நோக்காமல்), மெய்ப்பொருளே கண்டார் - [அவற்றின்கண்] அவற்

திற்கதிட்டானமாயுள்ள உண்மைப் பொருளாகிய தம்மையே தரி சித்தவர்கள், வினை அண்டார் - நல்வினை தீவினைகளாற் கட் டுப்படார் [அசனுல்], இறப்பு பிறப்பு எனும் துன்பு இலராய்-சனன மரணமென்னும் துக்கமில்லாதவர்களாய், பொய்ப்பு இலது ஆம - உண்மையாகிய, இன்பு உருவாவார்கள் - ஆனந்த சொரூபமாவார் கள், வேதத்துணிவு - [இது] வேத சம்மதமாம். எ-று.

பொ-ள, எந்த வேளையிலும் எந்தவிடத்திலும் நாமரூப மயமாகிய எந்தப்பொருளையும் கற்பிதமென்னும் நிச்சயத்தாற்பொரு ளாக நோக்காமல் விடுத்து அவற்றின்கண் அவற்றிற் கதிட்டான மாயுள்ள மெய்ப்பொருளாகிய தம்மையே தரிசித்தவர்கள் நல்வினை தீவினைகளாற் கட்டுப்படார். அக்காரணத்தாற் சனனமரண மென்னுந் துக்கமில்லாதவர்களாய் உண்மையாகிய ஆனந்த சொரூப மாவாரகள் இது வேதசம்மதமாம். எ. று.

க - ள. எக்கால தேசங்களிலும் உண்மை வஸ்துவைக் கண்ட வர்கள் முத்தராவர். எ - ம். (உக)

[இதுவு மது]

[விருத்தம்]

உக. பொல்லா மனத்தி னொழிவுமிது பொருந்தும் விடய வொழிவுமிவை *
யெல்லா நாமென் றறி திடமா யிருத முணர்வா லுளவாகும் *
கல்லா ரெனினு மிந்நெறி கைவர் தவரே முத்தரிலை*
வல்லா ரல்லா ரெவ்விதத்து மருவிப் பிறவி யுழலு வரோ உஉ

இ-ள. பொல்லாமனத்தின் ஒழிவும் - கொடிய மனத்தினு டைய உருவாசமும், இதுபொருந்தும் - இம்மனத்தால் [இந்திரி

யங்களின் வாயிலாகப்புறம் போந்து] அடையப்படுகின்ற, விடய ஒழிவும் - விஷயங்களினுடைய நாசமும், இவை எல்லாம் -[பிரஹ்மத்திற்கற்பிதமாகிய] இப்பிரபஞ்சமனைத்தும், நாம் [ஏ] என்று – [கற்பித வஸ்து அதிஷ்டான வடிமேயாமென்னும் நியாயத்தால் பிரஹ்மமாகிய] நமது அகண்டபரிபூரண சொரூபமேயன்றி அந்நிய மில்லை யென்று, அதிதிடமாய் - மிக்க உறுதியாய், இறுகும் - அழுந்தியிருக்கும், உணர்வால் உளவாகும் - அறிவால் உண்டாகும், கல்லார் எனினும் - கல்விகற்காத வராளுைம், நூந்தநெறிகை வந்தவர் – இந்த ஞானப்பியாசமுடையவர், முத்திநிலை வல்லார் - மோக்ஷநிலையை [அடையும்] சமர்த்தராவர், அல்லார் – மற்றவர், எவ்விதத்தும் –எந்தவிதத்தானும், பிறவி மருவிஉழலுவர் பிறப்பிறப்புக்களையடைந்து சுழலுவார் எ–று

பொ-ரை. கொடிய மனத்தினுடைய உருவாசமும் இம்மனத்தால் இந்திரியங்களின் வழியாகப் புறத்திற் சென்றடையப் படுகின்ற விஷயங்களினுடைய நாசமும் பிரஹ்மத்திற் கற்பிதமாகிய இப்பிரபஞ்சமனைத்தும் கற்பிதவஸ்து அதிஷ்டான வடிவமே யாம் என்னும் நியாயத்தாற் பிரஹ்மமாகிய நமது அகண்ட பரிபூரண சொரூபமேயன்றி அந்நியமில்லை யென்று மிக்க உறுதியாய் அழுந்தியிருக்கும் அறிவினாலே யுண்டாகும். கல்விகற்காதவராளுைம் இந்த ஞானப்பியாசமுடையவர் மோக்ஷநிலையையடையுஞ் சமர்த்தராவார் மற்றவர் எந்தவிதத்தானும் பிறப்பிறப்புக் களையடைந்து சுழலுவார். எ–று.

நாமே என்பதின் தேற்றே காரம் விகாரத்தாற் றெக்கது,

க–ரை. பிரபஞ்ச மெல்லாம் பிரஹ்மமாகிய நமது சொரூபமே என்னுந்திட ஞானமுடையவர் மோக்ஷமடைவர். எ–ம். [உஉ

[இதுவுமது]

[வெண்பா]

௬௭. உன்னாடு வாரிடத்தெம் முத்தமமுத் தானந்த *
விண்ணாடு மவ்வவரின் வேறின்றிப்—பெண்ணாதி *
யிச்சையி னார்கண்ணே யியைந்தியையா போலொளிக்கு
மச்சோவீ தார்செய்கை யே. [௬௮]

இ-ள். உன் - [தமது] புத்தியால், நாடுவார் இடத்து - [நான் யார். பிராஹ்மமென்பது யாது, பிரபஞ்சமென்பது யாது, என்று] விசாரணை செய்கின்றவை ராக்கியமுடைய முமுக்ஷுக்களிடத்து, அவ்வவரின் வேறு இன்றி - அவரவரின் அந்நியமாகாமல், எம்உத்தம - எங்களுடைய மேலாகிய, முத்தானந்த விண் — முத்தானந்த [மென்னும் பெயரால் விளங்குகின்ற] சிதாகாயமானது, ஆடும் - அவரவர் சொரூபமாகவே கலந்து விளங்கும், பெண் ஆதி - மனைவி முதலிய விடயங்களில், இச்சையினார் கண்ணே - ஆசையுடைய வரிடத்தே, இயைந்து இயையாபோல் - கலந்து நின்றுங் கலவாதது போல, ஒளிக்கும் - மறைந்து கொள்ளும், அச்சோ - ஐயோ, ஈது ஆர் செய்கை - இஃது யாவருடைய செயல், எ-று.

பொ ரு. தமது புத்தியால் நான்யார். பிராஹ்மமென்பதுயாது பிரபஞ்சமென்பது யாது, என்று விசாரணை செய்கின்ற வைராக்கியமுடைய முமுக்ஷுக்களிடத்தில் அவரவரின் அந்நியமாகாமல் எங்களுடைய மேலாகிய முத்தானந்த மென்னும் பெயரால் விளங்குகின்ற சிதாகாயமானது அவரவர் சொரூபமாகமே கலந்து விளங்கும் மனைவிமுதலிய விடயங்களில் ஆசையுடைய வரிடத்தே கலந்து நின்றுங்கலவாதது போல் ஒளித்துக்கொள்ளும் ஐயோ இஃது யாவருடைய செயல், எ-று.

முத்தானந்தவின்முமுக்ஷுக்களிடத்துக் கலந்தும் இச்சையுடையவரிடத்து மறைந்தும் நிற்குமென்று செய்யுளுக்காற் கூறினாரேனும் முத்தானந்த விண்ணை முமுக்ஷுக்களுடைய புத்தி கலந்து நிற்கும். விடயவிச்சையுடையவர் புத்தி மறந்து சுழலுமென்பது கருத்தாகக்கொள்க.

கலந்தும் கலவாதது போல் ஒளித்துக் கொள்ளுதல் விடயவிச்சையால் அவ்விடயங்களையே சிந்தித்துச் சுழன்று அதனால் மெய்ப்பொருளை மறத்தலாகிய இவ்வறிவிலிகளின் றொழிலேயன்றி நிஷ்கிரியமாகிய அவ்வஸ்துவின் தொழில் அன்றென்பார் "இஃதியார் செய்கை" என்றார், அச்சோ வென்றது இங்ஙனம் மெய்ப்பொருளை மறந்து பிறவித்துன் பத்தில் வருந்துகின்றனரோ என்று அவரிடத்துண்டாகிய இரக்கக் குறிப்பு.

க-ளா, முத்தானந்த விண்ணனது முமுக்ஷுக் களிடத்தில் ஐக்கியமாகியும் விடயவிச்சையுடைய வரிடத்தில் மறைந்து நிற்கும் எ—ம். [உக]

(இதுவுமது)

௬அ. எங்கு பரமொன் றிலகுமஃதே பார்ப்பவர்க்குக்
கங்குலெல்லில் லாத கதியுதிக்கு—மங்கதனு *
னீக்கமிலா வானந்த நேருமது வேமுத்தி *
பாக்கியமே யாமென்பரே [உச]

இ-ள, எங்கும் = எல்லாவிடங்களிலும், பரம் ஒன்று இலகும்-- சச்சிதானந்த பரிபூரணமாகிய ஒருவஸ்து வானது பிரகாசித்துக் கொண்டிருக்கும், அஃதேபார்ப்பவர்க்கு - அச்சொரூபத்தையே [அகமும்புறமுமாகிய எல்லாவிடங்களிலும்] தரிசிப்பவர்களுக்கு, கங்குல் எல் இல்லாத = கேவல சகலங்களற்ற, கதி உதிக்கும் - பிரஹ்

மானுபூதியுண்டாகும், அங்கு — அவ்வனுபூதியுண்டாயவிடத்து, அதனால் - அவ்வநுபூதியினாலே, நீக்கம் இலா ஆனந்தம் சேரும் - விட்டு நியாத பிரஹ்மானந்தஞ்சித்திக்கும், அதுவே — அப்பிரஹ்மானந்தசித்தியே, முத்திப்பாக்கியம் ஆம் - மோக்ஷலாபமாகும், என்பர் - என்று கூறுவர் பெரியோர். எ-று.

பொ- ளை எல்லாவிடங்களிலும் சச்சிதானந்த பரிபூரணமாகிய ஒரு வஸ்துவானது பிரகாசித்துக்கொண்டிருக்கும் அச்சொரூபத்தையே அகமும் புறமுமாகிய எல்லாவிடங்களிலுந்தரிசிப்பவர்களுக்குக் கேவல சகலங்களற்ற பிரஹ்மாநுபூதியுண்டாகும். அவ்வநுபூதியுண்டாய விடத்து அவ்வநுபூதியினாலே விட்டுநியாத பிரஹ்மானந்தஞ் சித்திக்கும். அப்பிரஹ்மானந்த சித்தியே மோக்ஷலாப மாகுமென்று கூறுவர் பெரியோர். எ-று.

ஈண்டுமோக்ஷமென்பது விதேகமுத்தியை.

க-ளை எல்லா விடங்களிலு முண்மை வஸ்துவைத்தரிசித்தவர்கள் பிரஹ்மாநுபூதியையும் அதினாலே மோக்ஷலாபத்தையுமடைவார் எ-ம் (உச)

[ரு. கூ. சிரத்தை]

[கட்டளைக் கலித்துறை]

ருஎகூ. கண்ணுஞ் செவியுந் தளருமு னேதண் கருணையுரு *
நண்ணுங் குருபான் றுணா லடைந்துநல் லீசனென*
வெண்ணி மொழிவழி நின்றுகுற் றேவ லியற்றினன்
றே
வெண்ணுந்த னெண்ண நிறைவேறு மின்புற் றிருப்
பதற்கே(உரு)

இ-ள். கண்ணுஞ்செவியும் - சக்ஷு இந்திரியமுஞ் சுரோத்திர இந்திரியமும் ஆகிய இரண்டும், தளரும்முனே - [தங்களுக்குரிய

விடயங்களாகிய உருவத்தையுஞ் சத்தத்தையும் அறியுந்தெளிவுத் தன்மை] குறையுமுன்னமே (இளமைக் காலத்திலேயே), தண் கருணை உருநண்ணும் - தண்ணிய கருணை வடிவங்கொண்ட, குருபரன் - மேலாகிய ஞாநாசிரியருடைய, தாள் நூல் அடைந்து - திருவடிகளையும் வேதாந்த சாஸ்திரத்தையும் தமக்குப் புகலிடமாக நம்பிச் சேர்ந்து, நல் ஈசன் என எண்ணி - [அவரை] இன்பத்தைக் கொடுக்க வல்லபரமே ஸ்வரமூர்த்தியே எனவும் [சாஸ்திரத்தை அவராலாக்கிய வேதமே யெனவும்] நிச்சயித்து, மொழிவழி நின்று - குருவுஞ் சாஸ்திரமுங் கூறிய நெறியிலொழுகி, குற்றேவல் - [அவ் விரண்டிடத்தும்] திருவடித்தொண்டு, இயற்றின் அன்றோ - செய் தாலல்லவா, இன்பு உற்று இருப்பதற்கு - [ஒருவன்] பிரஹ்மானந்தத்தை யடைந்திருத்தற்கு, எண்ணும் தன் எண்ணம் - நினைக்கின்ற தனது நினைப்பானது, நிறைவேறும் - பூரணமாகும். எ-று.

பொ-ரை. சக்ஷு இந்திரியமும் சுரோத்திர இந்திரியமும் ஆகிய இரண்டும் தங்களுக்குரிய விடயங்களாகிய உருவத்தையுஞ் சத்தத்தையும் அறியுந்தெளிவுத்தன்மை குறையுமுன்னமே (இளமைக் காலத்திலேயே) தண்ணிய கருணை வடிவங்கொண்ட மேலாகிய ஞாநாசிரியருடைய திருவடிகளையும் வேதாந்த சாஸ்திரத்தையும் தமக்குப் புகலிடமாக நம்பிச்சேர்ந்து அவரை இன்பத்தைக் கொடுக்கத்தக்க பரமேஸ்வர மூர்த்தி யெனவும், சாஸ்திரத்தை அவராலாக்கிய வேதமே யெனவும் நிச்சயித்து அக்குருவுஞ் சாஸ்திரமுங் கூறிய நெறியிலொழுகி அவ்விரண்டிடத்தும் திருவடித் தொண்டு செய்தாலல்லவா ஒருவன் பிரஹ்மானந்தத்தை யடைந்திருத்தற்கு நினைக்கின்ற தனது நினைப்புப் பூரணமாகும். எ-று.

க-ரை. பிரஹ்மானந்தமடைய விரும்பினவன் குருசாஸ்திரங்களை நம்பி வழிபட்டொழுக வேண்டும். எ-று. (உ௫)

(௪. முமுக்ஷுத்துவம்)

[வெண்பா]

௪0. வெய்யிற் புழுவலையின் மீண்டோடு மானெனமுப்
பையுட் பொருமலில்லப் பற்றுமுற்றும்—வெய்தின்
விடுத்தின்ப நல்குமொரு மெய்க்குருவைத் தேடி
யடுத்திடுதன் முத்திவிருப் பாம் (உ௬)

இ-ள். வெய்யிற்புழு [என] - வெய்யிலில் [அகப்பட்டு வெப்பஞ் சகிக்கமுடியாமல் அவ்வெய்யிலினின்றும் நீங்கி நிழலையடைய முயற்சிக்கின்ற] புழுவைப் போலவும், வலையின் மீண்டு ஓடும் - [வேடனுற்கட்டப்பட்ட வலையிலகப்பட்டுத் தெய்வகதியால் அவ்] வலையை அறுத்துக்கொண்டு அதினின்றும் வெளிப்பட்டு ஓடுகின்ற, மான் என — மானைப்போலவும், முப்பையுள் பொருமல் - அத்தியாத்துமம், அதி தெய்வம், அதி பூதம் என்னும் மூவகைத் துக்கங்களையுஞ் சகிக்கமாட்டாமல், இல்லப்பற்று முற்றும் - மனைவி மக்கள் முதலியோரிடத்துள்ள ஆசைகளனைத்தையும், வெய்தின் விடுத்து - அதிசீக்கிரத்தில் வெறுத்துவிட்டு, இன்பம் நல்கும் - மோக்ஷானந்தத்தைத் தருகின்ற, ஒருமெய்க்குருவை - ஒப்பற்றஞானசிரியனை, தேடி அடுத்திடுதல் - தேடிச் சரணடைதல், முத்தி விருப்பு ஆம் - மோக்ஷ விச்சையாம். எ-று.

பொ-ரை. வெய்யிலிலகப்பட்டு வெப்பஞ்சகிக்க முடியாமல் அவ்வெய்யிலினின்றும் நீங்கி நிழலையடைய முயற்சிக்கின்ற புழுவைப் போலவும், வேடனுற் கட்டப்பட்ட வலையிலகப்பட்டுத் தெய்வகதியால் அவ்வலையை அறுத்துக்கொண்டு அதினின்றும் வெளிப்பட்டும் ஓடுகின்ற மானைப்போலவும் அத்தியாத்துமம், அதிதெய்வம், அதி பூதம் என்னும் மூவகைத் துக்கங்களையும் சகிக்கமாட்டாமல்

மனைவி மக்கள் முதலியோர்களிடத்துள்ள ஆசைகளனைத்தையும் அதி சீக்கிரத்தில் வெறுத்துவிட்டு மோக்ஷானந்தத்தைக் கொடுக்கின்ற ஒப்பற்ற ஞானாசிரியனைத் தேடிச் சரணடைதல் மோக்ஷேச்சையாம். எ-று.

க-ரை குடும்பப்பற்றுக்களை யொழித்துக் குருவைச் சரணடைதல் மோக்ஷ விருப்பாகும். எ-ம். (உசு)

[சிரவணம்]

[விருத்தம்]

உஎ. தத்துவ மசிமுன் பதங்கள்சீ வேச சக்கியார்த் தங்க
ளப் பேத *
சித்திரீக் குவதற் கியையிலக் கணையே தீர்ந்தபின் மல
மில்கூ டத்த *
சுத்தமாம் பிரஹ்ம வைக்கிய மிவையாஞ் சுருதியாய்
வருளுடைப் பிரஹ்ம
வித்தினம் புயச்செஞ்சீரடி முறையின் மேவினேன்
றன்வினு வுவவே (உஎ)

இ-ள். சுருதி ஆய்வு அருள் உடை - வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சியும் பெருங்கருணையு முடைய, பிரஹ்மவித்தின் - பிரஹ்மவித்தாகிய ஞானியினது, அம்புயச்செஞ்சீரடி - தாமரை மலர் போலச் சிவந்த திருவடிகளில், முறையின் மேவினேன் - விதிப்படி [பூசனை முதலிய வற்றைச்செய்து அவரைச்] சரணாகவடைந்தவன், வினுவுவ - அவரிடத்திற் கேட்பவை யாவையெனின், சீவேசர் - [நான்கு மகாவாக்கியங்களிலும்] ஜீவேசரைக் குறித்தாயுள்ள தத்துவம் அசிமுன்பதங்கள் — துவம் தத்தவசி பிரஞ்ஞானம் பிரஹ்மம் அகம்பிரஹ்மாஸ்மி அயமாத்துமாப் பிரஹ்மம் என்னும் பதங்களின் [வகையும்], சக்கியார்தங்கள் - [அப்பதங்களுக்குச் சொல்லப்

பட்ட] வாச்சியார்த்தங்களும், அப்பேதசித்தி நீக்குவதற்கு - வாச்சியர் களாகிய அச்சிவஈஸ்வரர்களுக்குண்டாகிய பேதங்களைப் போக்கு வதற்கு • இயை இலக்கணை - பொருத்தமான இலக்கணையும், தீர்ந்த பின் — [அவ்விலக்கணையால் ஜீவேஸ்வரர்க்குள்ள] பேதம் நீங்கின பின்பு, மலம்இல் கூடத்த - அவித்தியோபாதி நீங்கிய கூடஸ்த னுக்கும், சுத்தம்ஆம் பிரஹ்ம ஐக்கியம் - மாயோபாதி நீங்கிய சுத்த சைதன்ய சொரூபமாகிய பிரஹ்மத்திற்குமுள்ள ஏகத்துவமும், இவை ஆம் - [ஆகிய] இவைகளாம் [என்று கூறுவர் அறிந்தோர்]. எ-று

பொ-ரை. வேதாந்த சாஸ்திராராய்ச்சியும் பெருங்கருணையு முடைய பிரஹ்ம வித்தாகிய ஞானியினது தாமரை மலர் போலச் சிவந்த திருவடிகளில் விதிப்படி பூசனை முதலியவற்றைச் செய்து அவரைச் சரணகவடைந்தவன் அவரிடத்திற் கேட்பவை யாவை யெனின் நான்கு மஹா வாக்கியங்களிலும் ஜீவேஸ்வரருக் குரித் தாயுள்ள துவம் தத்தவஸி பிரஞ்ஞானம் பிரஹ்மம் அகம்பிரஹ்மாஸ் மிஅயமாத்து மாப்பிரஹ்மம் என்னும் பதங்களின் வகையும் அப்பதங்களுக்குச் சொல்லப்பட்ட வாச்சியார்த்தங்களும் வாச்சி யர்களாகிய அச்சீவேஸ்வருக் குண்டாகிய பேதகைளப்போககு வதற்குப் பொருத்தமான இலக்கணையும் அவ்விலக்கணையால் ஜீவேஸ்வாருக்குள்ள பேதம் நீங்கியபின்பு அவித்தியோ பாதி நீங்கிய கூடஸ்தனுக்கும்மாயோ பாதி நீங்கிய சுத்தசை தன்னிய சொருபமாகிய பிரஹ்மத்திற்குமுள்ள ஏகத்துவமுமாகியஇவை களா மென்று கூறுவர் அறிந்தோர், எ-று.

இருக்கு எசுர்சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களி லும் முறையே பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம் பிரஹ்ம அஸ்மி தது துவம் (துவம்தது) அஸி, அயமாத்துமா பிரஹ்மம் என நான்கு

மஹா வாக்கியங்கள் உண்டு அவற்றுள் முதல் வாக்கியத்தில் பிரஞ்ஞானம் பிரஹ்மம் என இரண்டு பதங்களும் இரண்டாவது வாக்கியத்தில் அகம் பிரஹ்மம் அஸ்மி என மூன்று பதங்களும் மூன்றாவது வாக்கியத்தில் தவம்தது அஸி என மூன்று பதங்களும் நான்காவது வாக்கியத்தில் அயமாத்துமா பிரஹ்மம் என இரண்டு பதங்களும் உள்ளன இவையே அப்பதங்களின் வகையாம் அந்நான்கு வாக்கியங்களிலும் முதலிலுள்ள பிரஞ்ஞானம் அகம் தவம் அயமாத்துமா என்னும் நான்கு பதங்களும் ஜீவவாசகங்களாம் அவ்வாக்கியங்களில் இரண்டாவதாயுள்ள அஸ்மி அஸி என்னும் பதங்களும் ஈசுரவாசகங்களாம அவ்வாக்கியங்களுள் இரண்டாவது வாக்கியத்திலும் மூன்றாவது வாக்கியத்திலும மூன்றாவதாயுள்ள அஸ்மி அஸி என்னும் இரண்டு பதங்களும் ஜீவேசுரருடைய ஐக்கிய வாசகங்களாம் இனி அச்சிவேசுருடைய பேதம் யாவையெனின் அவர்களுடைய சொருபந் தெரிந்தாலல்லது அவர்களுக்குள்ள பேதந் தெரியாதாதலால் அவர்களுடைய சொருபம் சுருக்கமாக வருணிக்கப்படுகின்றது,

## ஜீவ சொருபவருவணனே

வியட்டி (ஒவ்வொரு) தூலனுக்கும காரண சரீரங்களோடு (அஞ்ஞானத்தோடு) கூடிய சைதன்னியம் ஜீவனென்று சொல்லப்படும் இச்சிவனுக்கு உபாதியாகிய அஞ்ஞானத்தின் தர்மங்களாகிய அற்பஞ்ஞத்துவம் அற்ப சக்தித்துவம் பரிச்சின்னத்துவம் பாதந்திரத்துவம் முதலிய குணங்கள் உண்டு இப்படிப்பட்ட குணங்களோடுகூடியவன் ஜீவன் இவனே மேற்கூறிய நான்கு மஹா வாக்கியங்களின் முதலிலுள்ள நான்கு பதங்களுக்கும் வாச்சியார்த்தம் இக்குணங்களின் சம்பந்தமில்லாத கூடஸ்த ஆத்துமாவே இலக்கியார்த்தம்.

## ஈஸ்வர சொருபவருணனை

சமட்டி (சர்வ) தூலசூக்கும காரண சரீரங்களோடு (மாயை யோடு) கூடியசுக தன்னியம் ஈஸ்வரனென்று சொல்லப்படும் இவ் வீசானுக்கு உபாதியாயுள்ள மாயையின் தர்மங்களாகிய சர்வஞ்ஞத்து வம் சர்வசக்தித்துவம் அபரிசின்னத்துவம் சுதந்திரத்துவ முதலிய குணங்களுண்டு இப்படிப்பட்ட குணங்களோடுகூடிய ஈசுரனே நான்கு மஹா வாக்கியங்களிலும் இரண்டாவதாயுள்ள நான்கு பதங்களுக் கும் வாச்சியார்த்தம் இக்குணங்களின் சம்பந்தமில்லாத சுத்தப் பிரஹ்ம மம் இலக்கியார்த்தம்.

ஜீவேசுராரிடத்துள்ள அற்பஞ்ஞத்துவ சர்வஞ்ஞத்துவங்கள் அற்ப சத்தித்துவ சர்வசத்தித்துவங்கள் பரிச்சின்னத்துவ அபரிச்சின்னத்து வங்கள் பாரதந்திரத்துவ சுதந்திரத்துவங்கள் தம்முள் விரோதிகளாயிருத் தல்போல மேலும் பல விரோத தர்மங்களுள்ளன அவற்றையெல்லா மறிய விருப்பமுளதாயின் விசாரசாகரமுதலிய விரிந்தநூல்களுட் கண்டு கொள்க இவை ஜீவேசுருக்குள்ள பேதங்களாம் இப்பேர்ப்பட்ட விரோ தர்மமுடைய ஜீவேசுருக்கே மஹா வாக்கியங்களின் மூன்றாவதா யுள்ள அஸ்மி அஸி என்னும் இரண்டு பதங்களும் ஐக்கியங் கூறு கின்றன சுருதிகள் அசத்தியங் கூறமாட்டா ஆதலால் அர்த்த விரோதந்தோன்றுகின்ற இடங்களில் இலக்கணையினால் பொருள் கொள்ளவேண்டும் அவ்விலக்கணை யாதெனின் சத்தியின் ஞானமில் லாதவர்க்கு இலக்கணையின் ஞானம் உண்டாகமாட்டான் ஆதலால் சத்தியின் இலக்கணம் முதலிற் சுருக்கமாகக் கூறப்படுகின்றது.

சத்த (பத)த்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் விருத்தி யெனப்படும் அந்த விருத்தி சத்தி இலக்கணா விருத்தி என்னும் பேதத்தால் இரண்டு வகையாம் அவற்றுள் சத்தத்திற்கு அர்த்தத் தோடுள்ள சாக்ஷாத் (நேரேயுள்ள) சம்பந்தம் சத்தி விருத்தியென்

றும் சொல்லப்படும் இச் சத்தி விருத்தியினுலறியப்படும் பொருள் சத்தத்தின் வாச்சியார்த்தமென்றும் சக்கியார்த்தமென்றும் முக்கி யார்த்தமென்றுஞ் சொல்லப்படும்.

இனி இலக்கணு விருத்தியாவது யாதெனின் சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள பரம்பரா சம்பந்தம் இலக்கணு விருத்தியாம் அதாவது சத்தத்திற்குச் சக்கியார்த்தத்தோடு நேரோ சம்பந்தமுண்டு அச்சக்கியார்த்தத்திற்கு எந்த அந்நிய வஸ்துவோடு நேரோ சம்பந்தமுளதோ அந்த வஸ்துவினிடத்தில் மேற்கூறிய சத்தத்திற்குப் பரம்பரா சம்பந்தம் (சக்கியார்த்தவாயிலாகச் சம்பந்தம்) உண்டு இந்தப் பரம்பரா சம்பந்தத்தினை இலக்கணு விருத்தியென்றும் இப்பரம்பரா சம்பந்தமுடைய வஸ்துவை இலக்கியார்த்தமென்றுங் கூறுவர்.

இவ்விலக்கணை விட்ட விலக்கணை விடாத விலக்கணை விட்டு விடாத விலக்கணை யென மூன்று வகைப்படும் அவற்றுள் விட்டுவி டாத விலக்கணையே மஹா வாக்கியத்திலுபயோகியானபடியால் ஏனைய இரண்டு இலக்கணைகளையும் விரிவஞ்சி விடுத்து இவ்வோரிலக்கணை யின் சொரூபமுந் திருட்டாந்தமு மாத்திரம் இஙகே கூறப்படுகின்றது விட்டுவிடாத விலக்கணையின் சொரூபமாவது வாச்சியார்த்தங்களி லுள்ள விரோதமாகிய ஒரு பாகத்தை விட்டு விரோதமில்லாத மற் றப்பாகத்தைக் கொள்ளுதலாம் திருஷ்டாந்தமாவது திருநெல்வேலி யிலிருந்து யாத்திரையாகப் பிரயாணித்த தேவதத்தன் சோமதத்தன் இருவரும் காசியை அடைந்திருக்குங்காலத்தில் அங்கு அந்நகரத்தர சன் நால்வகைச்சேனைகள் தன்னைச்சூழ மதயானைபின்மீது ஆடை யாபரண அலங்கிருதனுய்ப் பவனிவந்தான் அவனைப் பார்த்திருந்த தேவதத்தன் சோமதத்தன் இருவரும் தமது நகரமாகிய திருநெல் வேலிக்கு வந்து கொஞ்ச நாளைக்குப் பின்னர் அந்நகரத்திலுள்ள ஆல யத்தில் சுவாமி தரிசனஞ் செய்யச் சென்றிருந்தபொழுது முன் காசி

யிலே பவனி வரப்பார்க்கப்பட்ட அரசன் விரக்தியினாலே சந்நியாசம் பெற்று விபூதி உருத்திராக்க காஷாய தண்ட கமண்டல தாரியாய் அவர்களுக்கெதிரே நின்று சுவாமி தரிசனஞ் செய்யக் கண்டார்கள் அவர்களில் தேவதத்தன் சோமதத்தனை நோக்கி முன் காசியில் யானையின்மீது பவனிவந்த அரசனே இந்தச்சன்னியாசியென்று கூறினான்.

அதைக்கேட்ட சோமதத்தன் அரசன் சந்நியாசியாகமாட்டான் ஏனென்றால் அவன் ஊர் காசி இவனூர் திருநெல்வேலி அவன் ஆடையாபரணம் பீதாம்பர கடக மகுடாதிகள் இவன ஆடையாபரணங்கள் காஷாய வஸ்திர விபூதி யுருத்திராக்ஷாதிகள் அவன் அரசன் இவன் சந்நியாசி ஆதலால அவன் இவனாகமாட்டான் என்று கூறினான் அதற்குத் தேவதத்தன் அந்த அரசன் சந்நியாசியென்னும் இருவரிடத்துமுள்ள விரோதபாகமாகிய அரசன் சந்நியாசி என்னும் பெயர்களையும் காசி திருநெல்வேலியாகிய வாசஸ்தானங்களையும் பீதாம்பர காஷாயங்களாகிய உடைகளையும் கடக மகுட விபூதி யுருத்திராக்ஷங்களாகிய ஆபரணங்களையும் பாராமல் விட்டுவிட்டு அவிரோதபாகமாகிய சரீரமாத்திரத்தை நோக்கினால் அச்சரீரமே இச்சரீரமென்பது விளங்குமென்று கூறினான் அதைக்கேட்டுத் தானும் அவ்வாறே பார்த்து அவனே இவன் இதிற் சந்தேகமில்லை என்று சம்மதித்தான் இங்கு இராஜ சின்னங்களோடு கூடிய சரீரம் அரசன் என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம சந்நியாச சின்னங்களோடு கூடிய சரீரம் சந்நியாசி என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாம் இந்த வாச்சியார்த்தங்களாகிய பீதாம்பராதி சின்னங்களோடு கூடிய சரீரத்திற்கும் காஷாயாதி சின்னங்களோடு கூடிய சரீரத்திற்கும் ஏகத்துவமுளதாகாது ஏனென்றால் தம்முள் விரோதியாகிய பீதாம்பராதி காஷாயாதி சின்னங்களோடு கூடியிருத்தலாலென்க இவ்விடத்து விட்டுவிடாத விலக்கணையாற் பொருள் கொள்ளுதலாவது அரசன் சன்னியாசி என்னும் வாச்சி

யார்த்தங்களிற் கலந்திருக்கின்றன மேற்கூறிய பீதாம்பராதி அரசசின்னங்களும் காஷாயாதி சந்நியாச சின்னங்களும் ஆகிய விரோத பாகத்தைவிட்டு அவிரோதபாகமாகிய சரீர மாத்திரத்தைக் கொள்ளுதலால் அவ்விரண்டு சரீரமும் ஒன்றென்பதாகிய ஏகத்துவஞ் சித்திக்கும் இது வே விட்டுவிடாத லிலக்கணைக்கு உதாரணமாம்.

இவ்வுதாரணம் போல அற்பஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடிய ஜீவன் மஹா வாக்கியங்களின் முதற் பதங்களுக்கு வாச்சியார்த்தமாம் சர்வஞ்ஞத்துவாதிகுணங்களோடு கூடிய ஈசுரன் இரண்டாவதாகிய பதங்களுக்கு வாச்சியார்த்தமாம் மேற்கூறிய குணங்களோடு கூடிய ஜீவேசுரருக்கு ஏகத்துவம் கூடாது ஏதனாலெனில் தம்முள் விரோதிகளாகிய அற்பஞ்ஞத்துவாதி சர்வஞ்ஞத்துவாதி குணங்களோடு கூடியிருத்தலாலென்க. இவ்விடத்து அவித்தை மாயைகளாற் கற்பிக்கப்பட்ட அற்பஞ்ஞத்துவாதி சர்வஞ்ஞத்துவாதி விரோத பாகத்தைவிட்டு விரோதமில்லாத கேவலஞ்ஞச தன்னிய பாகமாகிய கூடஸ்த பிரஹ்மங்கட்கு ஏகத்துவங்கூடும்.

ஆதலால் மஹா வாக்கியங்களிலுள்ள தத்துவமசி முதலிய பதங்களும் அப்பதங்கட்குரிய சீவேசுராகிய வாச்சியார்த்தங்களும் அந்தச் சீவேசுரரிடத்துள்ள பேதங்களும் அப்பேதங்களைப் போக்கத்தகுந்த இலக்கணையும் அவ்விலக்கணையாற் பேதம் நீங்கிய கூடஸ்த பிரஹ்மங்கட்குளதாகும் ஏகத்துவமும் ஆகிய இவையே அதிகாரிகளாற் சிரவணஞ் செய்தற்குரியவை யென்றறிக.

தத்துவமசி மஹா வாக்கியத்தை முதலாகக் கூறியது உபதேச வாக்கியமென்னுஞ் சிறப்புத் தோன்றுதற் கென்றறிக.

க—ஊ. பிரஹ்ம வித்தாகிய குருவைச் சரணடைந்தவன் மஹா வாக்கியங்களிலுள்ள தத்துவமஸி முதலிய பதங்களையும் அவற்றின் அருத்தமுதலிய வற்றையும் விசாரிக்கவேண்டும் எ—று. [உஎ]

[மனனம்]

[வெண்பா.]

சஉ. பந்தமித்தை ஞானத்தாற் பாதமுறுந் தன்மையி னு
லெந்தப் பொருள்பாத மெய்துமோ—வந்தவ து
மித்தையே நாணினிடை மேவாவு போலுமெ ன
வுய்த்துணரின் மெய்ம்மை யுறும் உஅ

இ-ள். பந்தம்மித்தை – [ஜீவனுக்குளதாகிய] ஜனன மரணாதி சமுசாரம் பந்தம்மித்தை, ஞானத்தால் - பிரஹ்மஞானத்தால், பாதம் உறும் தன்மையினல் - நிவிர்த்தியாகுஞ் சுபாவமுடைமையால்; எந்தப் பொருள் - எந்த வஸ்துவானது, பாதம் எய்துமோ - ஞானத்தினல் மித்தையென்று நிச்சயிக்கப்படுமோ, அந்த அது மித்தையே - அப்படிப்பட்ட வஸ்துவானது மித்தையே, நாணின் இடை – இரச்சுவினிடத்தில், மேவு அரவுபோலும் என - அநிர்வசனீயமாகத் தோன்றுகின்ற சர்ப்பத்தைப்போலும் என்று, உய்த்து உணரின் - ஆராய்ந்தறிந்தால், மெய்ம்மை உறும் - [ஆன்மா அசங்கம் ஜனனமரணாதி சமுசாரம் மற்றது என்னும்] உண்மைஞானமுளதாம், எ-று

பொ—ரை. ஜீவனுக்குளதாகிய ஜனன மரணாதி சமுசார பந்தம் மித்தை பிரஹ்ம ஞானத்தினல் நிவிர்த்தியாகுஞ் சுபாவமுடைமையால் எந்த வஸ்துவானது ஞானத்தால் மித்தையென்று நிச்சயிக்கப் படுமோ அப்படிப்பட்ட வஸ்துவானது மித்தையே இரச்சுவினிடத்தில் அநிர்வசனியமாகத் தோன்றுகின்ற சர்ப்பத்தைப்போலுமென்று ஆராய்ந்தறிந்தால் ஆன்மா அசங்கம் சனனமரணாதி சமுசாரமற்றது என்னும் உண்மை ஞானமுளதாகும். எ-று

க—ரை ஜீவனுக்குளதாகிய பந்தம் ஞானத்தாற் பாதிக்கப்படுஞ் சுபாவமுடையதாயிருத்தலால் மித்தை. எ-ம். (உஅ)

[இதுவுமது]

சரு. சீவேசர் பேதமித்தை சேர்ந்தவெள பாதிகத்தா ல்
யாவை யுபாதியி னுறபேத—மோவவை க
ளெல்லாமு மித்தை யிலங்கு கடமடவா ன்
புல்லுகின்ற பேதமே போல் (உகூ)

இ-ள். சீவ ஈசர்பேதம் மித்தை - ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்கும் தோற்றும் பேதங்கள் மித்தை, சேர்ந்த - பொருந்திய, ஔபாதிகத்தால் - [அவித்தை மாயையென்னும்] உபாதிகளினலாகியன வாயிருத்தலின், யாவை - எவை, உபாதியினல் பேதமோ - உபாதிகளினலாகிய பேதங்களோ, அவைகள் - அந்த உபாதிகளினலாகிய பேதங்கள், எல்லாமுமித்தை - அனைத்தும் மித்தையாம், இலங்கு கடமடவான் - விளங்காநின்ற கடாகாயமடாகாயங்களுக்கு, புல்லுகின்ற பேதம் போல் — [கடமடமென்னும் உபாதிகளாற்] பொருந்துகின்ற பேதம் [மித்தையாதல்] போல. எ-று

பொ-ரை ஜீவனுக்கும் ஈஸ்வரனுக்குந் தோன்றும் பேதங்கள் மித்தை. பொருந்திய அவித்தை மாயையென்னும் உபாதிகளினலாகியன வாயிருத்தலின் எவை உபாதிகளினலாகிய பேதங்களோ அந்த வுபாதிகளினலாகிய பேதங்கள் அனைத்தும் மித்தையாம் விளங்காநின்ற கடாகாய மடாகாயங்களுக்குக் கடமடமென்னும் உபாதிகளினற் பொருந்துகின்ற பேதம் மித்தையாதல் போல. எ-று

க-ரை. ஜீவேசுரருக்குள்ள பேதங்கள் உபாதிகளினலாகியனவாயிருத்தலின் மித்தை. எ-ம் [கஉ]

[இதுவுமது]

சச. இங்காத்து மாபிரஹ்மத் தேகமாஞ் சேதனத் தா
லெங்கேயெங் கேசே தனத்துவமுன்—டங் கே

பிரஹ்மா பினமாம் பிரஹ்மம்போ லென் று
வருமான் மனனமிவ் வாறு ௩௰

இ-ள். இங்கு - இவ்விடத்தில், (சிந்திக்குமிடத்தில்), ஆத்துமா பிரஹ்மத்த ஏகமாம் - ஆன்மா பிரஹ்மத்துடன் ஏகத்துவமுடையதாம், சேதனத்தால் - சைதன்ய சுபாவமுடைமையால், எங்கே எங்கே - எவ்வெவ்விடத்து, சேதனத்துவம் உண்டு - சைதன்னியத்தன்மையுளதோ, அங்கே பிரஹ்மா அபின்னம் ஆம் - அவ்வவ்விடத்திற் பிரஹ்மத்திற்கு ஏகத்துவமுளதாம், பிரஹ்மம் போல் என்று - பிரஹ்மம் எல்லாப் பொருள்களோடும் அபின்னமாயிருத்தல் போல வென்று; இவ்வாறு மனனம் வரும் - இவ்விதமாகச் சிந்தித்தலினது சொரூபம் நடைபெறும். எ-று

பொ-ளா. இவ்விடத்தில் ஆத்துமா பிரஹ்மத்துடன் ஏகத்துவமுடையதாம் சைதன்னிய சுபாவமுடைமையால் எவ்விடத்துச் சேதனத் தன்மை யிருக்கின்றதோ அவ்விடத்திற் பிரஹ்மத்திற்கு ஏகத்துவமுளதாம பிரஹ்மம் எல்லாப் பொருள்களோடும் அபின்னமாயிருத்தல் போலவென்று இவ்விதமாகச் சிந்தித்தலினது சொரூபம் நடைபெறும். எ-று.

க-ஊ. ஆத்துமாவும் பிரஹ்ம மும்சைதன்னிய சுபாவமுடைமையால் ஏகமாம். எ-ம் (௩௰)

[ நிதித்தியாசனம் ]

[விருத்தம்]

௬௫. உள்ளும் புறனு மொருபொருளு முறும லொளிருங் கடம்போ ல
வுள்ளும் வெளியு மெவ்வடிவு முறாத வுளமின் புத வனை யு
மெள்ளும் பிறவிப் புணரிகடந் திடுவா னியையு மெழிற்புணையு ந
கொள்ளும் பிரஹ்ம நிசமிசைக் கொடுபோய் விடுக் குந்தணையுமரோ (௩௧)

இ-ள். உள்ளும் புறனும் - உள்ளிலும் வெளியிலும், ஒரு பொருளும் — ஒரு வஸ்துவையும், உறாமல் - பொருந்தாமல், ஒளிரும் கடம்போல - விளங்காநின்ற குடத்தை யொப்ப, உள்ளும் வெளியும் - அகத்திலும் புறத்திலும், எவ்வடிவும் உறாத உளம் — [பிரபஞ்ச விஷயங்களுள்] எந்த விஷயாகாரத்தையும் அடையாத அந்தக் கரணம், இன்பு உதவு அனையும் - சுகத்தைத் தருகின்ற மாதாவும், எள்ளும் [விவேகிகளால்] நிந்திக்கத்தகுந்த, பிறவிப் புணரி- பிறவியாகிய சமுத்திரத்தை. கடந்திடுவான் - கடக்கும் பொருட்டு, இயையும் எழில் புணையும் - [வந்து] பொருந்துகின்ற அழகிய மரக்கலமும், கொள்ளும் பிரஹ்மதீரமிசை - [முமுக்ஷுக்கள் தமது சொரூபமாக] அடையத்தக்க பிரஹ்மமாகிய கரையின்மீது, கொடுபோய் விடுக்கும் துணையும் - கொண்டுபோய்ச் சேர்க்கின்ற தோழனு (மாலுமியு)மாம். எ-று

பொ-ரை. உள்ளிலும் வெளியிலும் ஒரு வஸ்துவையும்பொருந்தாமல் விளங்காநின்ற குடத்தை யொப்ப அகத்திலும புறத்திலும் பிரபஞ்ச விஷயங்களில் எந்த விஷயாகாரத்தையுமடையாத அந்தக்கரணம் சுகத்தைக் கொடுக்கின்ற மாதாவும் விவேகிகளால் நிந்திக்கத் தக்க பிறவியாகிய சமுத்திரத்தைக்கடக்கும் பொருட்டு வந்து பொருந்துகின்ற அழகிய மரக்கலமும் முமுக்ஷுக்கள் தமது சொரூபமாக அடையத்தக்க பிரஹ்மமாகிய கரையின் மீ துகொண்டு போய்ச் சேர்க்கின்ற தோழனு (மாலுமியு) மாம். எ-று

க-ரை. நிச்சல அந்தக்கரணம் மாதாவையும் கப்பலையுந் தோழனையும் போலச் சுகந்தரும். எ-ம் [௱௧]

இதுவுமது

௱௨. மெல்ல வடைந்து முறைவழியின் மேவிக் காணு முயிர்
புலியா ற்
கொல்லப் படல்போ னிர்க்குணமாய்க் குறியற் றிலங்கு
பாத்திஙுள ம்

புல்லும் பொழுதே யுருவிறந்து புலப்போக் கொழிந்து
தேசுடைத் தா
யல்ல லகன்று சீதளமா யமல சுகவா ரிதியாமே (௩௨)

இ-ள். முழைவழியின் - மலைக்குகைக்குச் செல்லுமார்க்கமாக, மெல்ல அடைந்து - மிருதுவாகச் சென்று, மேவிக்காணும் - [அக் குகையில் வாசஞ்செய்யும் புலியை] விருப்பத்துடன் பார்க்கின்ற, உயிர் - பிராணியானது, புலியால் கொல்லப்படல்போல் - [அந்தப்]புலி யினாலே கொல்லப்படுதல் போல, நிர்குணமாய் - சத்துவாதி குணங் களுக்கதீதமாய், குறி அற்று - [யாதொரு] அடையாளமுமின்றி, இலக் குபாத்தில் - [சச்சிதானந்த கனமாகப்] பிரகாசிக்கின்ற பிரஹ்மத்தி னிடத்தில், உளம்புல்லும் பொழுது - அந்தக்கரணம் நிலை பெற்ற அத்தருணத்தில், உருவு இறந்து - அவ்வந்தக் கரணந்தனதுருவ நாச மடைந்து, புலப்போக்கு ஒழிந்து — [சுரோத்திர முதலாகிய இந்திரி யங்களோடு கூடிச்] சத்தாதி விஷயங்களிற் செல்லுதலொழிந்து, தேசு உடைத்தாய் - ஞானப்பிரகாசமுடையதாய், அல்லல் அகன்று - துக்கங்களினின்றும் நீங்கி; சீதளமாய் - குளிர்ச்சியை யுடையதாய், அமலசுகவாரிதி ஆம் - பரிசுத்தமாகிய ஆனந்த சமுத்திரமாகும். எ-று

பொ-ரை, மலைக்குகைக்குச் செல்லுமார்க்கமாக மிருதுவாகச் சென்று அக்குகையில் வாசஞ்செய்யும் புலியை விருப்பத்துடன் பார்க் கின்ற பிராணியானது அந்தப் புலியினாலே கொல்லப் படுதல் போலச் சத்துவாதி குணங்களுக்கதீதமாய் யாதொரு அடையாளமுமின்றிச் சச்சிதானந்த கனமாகப் பிரகாசிக்கின்ற பிரஹ்மத்தினிடத்தில் அந்தக் கரணம் நிலைபெற்ற அத்தருணத்தில் அது தனது உருவ நாச மடைந்து சுரோத்திர முதலாகிய இந்திரியங்களோடு கூடிச் சத்தாதி விஷயங்களிற் செல்லுதலொழிந்து ஞானப்பிரகாசமுடையதாய்த் துக்

கங்களினின்றும் நீங்கிக் குளிர்ச்சியை யுடையதாய்ப் பரிசுத்தமாகிய ஆனந்த சமுத்திரமாகும். எ-று

க-ரை. பிரஹ்ம சொரூபத்தில் நிலை பெற்ற அந்தக்கரணம் பிரஹ்மாநந்தத்தை அடையும். எ-ம் [௬௨]

[இதுவுமது]

[கட்டளைக்கலித்துறை]

சஎ. நின்மா னுஷிய வெளியினிற் பானன் னியமறியா ன்
றன்மாத் திரத்தி னிருநதே விளங்குறுந் தன்மை
யொப்பாய் ப்
பன்னார் விடயமும் பற்றா துறக்கத்தின் பண்புமின்றிச்
சின்மாத் திரத்தின் விளங்கல் சமாதித் திதியென்ப
ரோ (௬௨)

இ-ள். நின்மானுஷிய வெளியில் — மனுடசஞ்சாரமில்லாத வெட்ட வெளியான இடத்தில், நிற்பான் - நிற்கின்றவொருவன், அந்நியம் அறியான் — [தன்னைத்தவிர] அந்நியமாகிய பிராணிகளொன்றையுங் காணாதவனாய், தன மாத்திரத்தின் இருந்து - தான் மாத்திரமே அவ்விடத்திருந்து, விளங்குறும் தன்மை யொப்பாய் - விளங்கா நின்ற தன்மைபோல, பன்னு ஓர் விடயமும் — சொல்லா நின்ற யாதொரு விஷயத்தையும், பற்றாது - பொருந்தாமல், உறக்கத்தின் பண்பும் இன்றி - நித்திரையின் குணம் இல்லாமல், சின் மாத்திரத்தின் • அறிவுமாத்திரமாக, விளங்கல் - [மனம்] பிரகாசித்திருத்தல், சமாதி திதி என்பர் - சமாதிநிலையென்று சொல்லுவர் [அறிந்தோர்]. எ-று

பொ-ரை. மனுடசஞ்சாரமில்லாத வெட்டவெளியான இடத்தில் நிற்கின்ற வொருவன் தன்னைத்தவிர அந்நியமாகிய பிராணி

கனொன்றையுங் காணாதவனாய்த் தான்மாத்திரமே அவ்விடத்திருந்து விளங்கா நின்றதன்மைபோல சொல்லாநின்ற யாதொரு விஷயத்தை யும் பொருந்தாமல் நித்திரையின் குணமுமில்லாமல் அறிவுமாத் திரமாகமனம் பிரகாசித்திருத்தல் சமாதி நிலையென்று சொல்லு வாறிந்தோர். எ-று

தான் என்பது எதுகை நோக்கித்தன்-எனக்குறுகி நின்றது.

க-ரை, சமாதியாவது மனம் அறிவு சொரூபமாக நிலைத்திருத் தல் எ-ம். [௬௩]

[இதுவுமது]

[விருத்தம்]

௬௪. மட்டறவெங் கணும்பூரித் திலங்கிடுசிற் பரந்தனிலே மனம்போ யொன்றி
யெட்டுணையு நினைப்புமறப் பினைமருவா தறிவுருவா யிருக்கு மீதே
நிட்டைகணப் பொழுதறினுஞ் சீவன்முத்தி நிலையு டனே நிலையாநிற்குங்
கெட்டழிக்கு மாசையெலாங் கெடினன்றி யிந்த நிட்டை கிட்டா தன்றே (௬௪)

இ-ள். மட்டு அற - [தேசகால வஸ்துக்களால்] அளவுபடாமல், எங்கணும் பூரித்து - எவ்விடத்திலும் பரிபூரணமாய், இலங்கிடுசிற் பரந்தனில் - விளங்காநின்ற சின்மயமாகிய பிரஹ்ம சொரூபத்தில், மனம் போய் - மனமானது தனது தூலத்தன்மை யழிந்து, ஒன்றி - [பாலிற் சலம்போலக்] கலந்து, எள்துணையும் - எள்ளளவும், நினைப்பு மறப்பினை - சகல கேவலங்களை, மருவாது - பொருந்தாமல், அறிவு உருவாய் இருக்கும் — அறிவே சொரூபமாக நிலைத்திருக்கின்ற, ஈதே

நிட்டை – இந்நிலையே ஞானநிட்டையாம், சணப்பொழுது உறினும் - [இந்த ஞானநிட்டையை ஒரு] க்ஷணநேரமடைந்தாலும், ஜீவன்முத்தி நிலை - ஜீவன் முத்தி நிலையானது, உடனே - அக்கணமே, நிலையாயாநிற்கும் – நிலைபெறும், கெட்டு அழிக்கும ஆசையெலாம் – [மோக்ஷவிச்சை ஆன்மஞானங்களைக்] கெடுத்தழிக்கின்ற இச்சைகளனைத்தும், கெடின் அன்றி - ஒழிந்தாலல்லாமல், இந்த நிட்டை - இந்த ஞான நிட்டையானது, கிட்டாது - கிடைக்கமாட்டாது. எ-று.:

பொ-ரை. தேசகால வஸ்துக்களால் அளவுபடாமல் எவ்விடத்திலும் பரிபூரணமாய் விளங்காநின்ற சின்மயமாகிய பிரஹ்ம சொருபத்தில் மனமானது தனது தூலத்தன்மையழிந்து பாலிற் சலம்போற் கலந்து எள்ளளவுஞ் சகல கேவலங்களைப் பொருந்தாமல் அறிவே சொரூபமாக நிலைத்திருக்கின்ற இந்நிலையே ஞானநிஷ்டையாம் இந்த ஞான நிஷ்டையை ஒரு க்ஷண நேரமடைந்தாலும ஜீவன்முத்தி நிலையானது அக்கணமே நிலைபெறும் மோக்ஷ விச்சை ஆன்ம ஞானங்களைக் கெடுத்தழிக்கின்ற இச்சைகளனைத்தும ஒழிந்தாலல்லாமல் இந்த ஞான நிஷ்டையானது கிடைக்க மாட்டாது. எ-று.

கெட்டு என்னுந்தன் வினை கெடுத்து எனப் பிறவினையாயிற்று.

க-ரை. ஞான நிட்டையடைந்தவர்க்கு ஜீவன் முத்தியுண்டாகும். எ-ம் [௯௪]

[துவம் பதார்த்த சோதனம்]

௪௯- அத்தி தோலா ரங்கமல ஞரிந் திரியங் களுமல்ல ன்
சித்த மல்ல னபிமானஞ் செய்யு மகங்கா ரமுமல்லன்
புத்தி யலனிம் மனமல்லன் போக்கா திகள்செய் யுயிரல் ல
னித்த வறிவு மின்பமுமாய் நிகழ்வ தெதுவோ வதுவானே ௯௫

இ-ள். அத்திதோல் ஆர் - என்பினாலுந் தோலினாலுங் கட்டப் பட்ட, அங்கம் அலன் — [இந்தத்] தேகமும் [யான்] அல்லன், ஆர் — [இத்தேகத்திற்] பொருந்திய, இந்திரியங்களும் - சுரோத்திர முதலா கிய ஞானேந்திரியங்களும் வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்களும், அல்லன் [யான்] அல்லன், சித்தம் அல்லன் - [சிந்தனாவடிவமான] சித் தமும் [யான்] அல்லன், அபிமானம் செய்யு் - [தேகேந்திரியாதிகளை யான் எனது என்று] அபிமானஞ் செய்கின்ற, அகங்காரமும் அல்லன அகங்காரமும் [யான்] அல்லன், புத்தி அலன் - [நிச்சய வடிவமான புத்தியும் [யான்] அல்லன், இம்மனம் அல்லன் — சங்கற்ப விகற்ப வடி வமான] இந்த மனமும் யான்] அல்லன், போக்கு ஆகிகள் செய் - உசுவாசு நிசுவாசங்களைச் செய்கின்ற, உயிர் அல்லன் - பிராணனும் [யான்] அல்லன், நித்த அறிவும் இன்பமும் ஆய் — சத்து சித்து ஆனந் தம் என்னும் வடிவமாய், நிகழ்வது எதுவோ - [சதோதயமாக] விளங் குகின்றது எந்த வஸ்துவோ, அது நான் — அந்தப் பிரஹ்மமே நான். எ-று

பொ-ரை. எலும்பினாலுந் தோலினாலுங் கட்டப்பட்ட இந்தத் தேகமும் யானல்லன் இத்தேகத்திற் பொருந்திய சுரோத்திர முதலா கிய ஞானேந்திரியங்களும் வாக்கு முதலாகிய கன்மேந்திரியங்களும் யானல்லன் சிந்தனாவடிவமான சித்தமும் யானல்லன் தேகேந்திரியாதி களை யான் எனதென்று அபிமானஞ்செய்கின்ற அகங்காரமும் யானல் லன் நிச்சயவடிவமாகிய புத்தியும் யானல்லன் சங்கற்ப விகற்ப வடிவ மான இந்த மனமும் யானல்லன் உசுவாச நிசுவாசங்களைச் செய்கின்ற பிராணனும் யானல்லன் சத்து சித்து ஆனந்தமென்னும் வடிவமாய்ச் சதோதயமாய் விளங்குகின்றது எந்த வஸ்துவோ அந்தப் பிரஹ்மமே நான். எ—று

க-ரை. இத்தேகாதிகள் யானல்ல சச்சிதானந்த வடிவமாகிய பிரஹ்மமே நான். எ-ம் [௬௫]

[முன் தொகுத்துக்கூறிய தேகாதிகளை இது முதல் ஆறு செய்யுட்களால் தனித்தனி சோதிக்கக் கருதி இதில் தூல சரீரத்தைச் சோதித்தல்]

[கட்டளைக்கலித்துறை]

௬0. சொப்பனத் தானையைக் கண்ணுற்று மெய்ந்நாத்து டித்தலறத்
தப்பிடக் கால்விசைத் தோடுமப் போழ்துந் தகைமனை யி
லொப்ப மளிக்கட் சவம்போ லசைவற் றுளவுட லோ
செப்பிடு நீரதின் வேறோநன் காய்ந்து தெளியுமினே

இ-ள்' சொப்பனத்து - சொப்பனுவஸ்தையில், ஆனையைக் கண் உற்று - ஓர் யானையைத்தமது நேத்திரத்தினாலே பார்த்து, மெய் துடித்து நா அலற - சரீரம் பதைக்கவும் நாவானது கூக்குரலிடவும், தப்பிட - [நீர் அவ்யானையினிடத் தகப்படாமற்] பிழைப்பதற்கு, கால் விசைத்து ஓடும் - கால் விரைவாய் ஓடுகின்ற, அப்போழ்தும் - அந்த வேளையிலும், தகைமனையில் - தகுந்த வீட்டினிடத்தே, ஒப்பு அமளிக்கண் - மனதுக்கிசைந்த படுக்கையின்கண், சவம்போல் - பிணம்போல, அசைவு அற்று உள - அசைவில்லாமற் கிடந்த, உடலோ — தேகமோ, செப்பிடும் நீர் - [சொப்பனுவஸ்தையிற் கூக்குரலிட்டோடியதாகச்] சொல்லாநின்ற நீங்கள், அதின் வேறோ - அந்தத் தேகத்தினும் அந்நியமோ, நன்கு ஆய்ந்து - நன்றாயாராய்ந்து, தெளியுமின் - தெளிந்து கொள்ளுங்கள். எ-று.

பொ-ரை. சொப்பனவஸ்தையில் ஓர் யானையைத் தமது நேத்திரத் தினாலே பார்த்துச் சரீரம் பதைக்கவும் நாவானது கூக்குரலிடவும் நீவிர் அவ்யானையினிடத் தகப்படாமல் பிழைப்பதற்குக் கால் வினா வாய் ஓடுகின்ற அந்த வேளையிலும் தகுந்த வீட்டினிடத்தேமனதுக் கிசைந்த படுக்கையின்கண்பிணம் போல அசைவில்லாமற் கிடந்த தேகமோ சொப்பனவஸ்தையில் கூக்குரலிட்டோடியதாகச் சொல்லா நின்ற நீங்கள் அந்தத் தேகத்தினும் வேறே நன்றாயாராய்ந்து தெளிந்து கொள்ளுங்கள். எ-று.

நீவிர் ஓடும்பொழுதும் அசைவற்றுக்கிடந்த தேகமா அதினும் வேறு என ஒட்டுக.

க-ரை. நீவிர் சொப்பனவஸ்தையில் ஓடும்பொழுதும் அசை வற்றுக்கிடந்த தூல சரீரம் உம்மினும் வேறு. எ-ம். (௩௬)

[இந்திரியங்களைச் சோதித்தல்]

[வெண்பா]

௩௭. இந்தியமன் றுமவற்றொன் றில்லுயிருங் காண்ட லுள் ளே
புந்தி விவகரிக்கும் போதிருந்து—நந்திய றி
வில்லதுவாக் காண்ட லெனதாத லென்றிவற்றா ற்
சொல்லாத்து மாச்சிற் சுகம் (௩௭)

இ-ள். இந்தியம் -] சுரோத்திர முதலாகிய ஞான] இந்திரியங் கள், [ஆத்துமா] அற்று - ஆன்மாவல்ல [எதனாலெனின் அதற்கு ஏது கூறுகின்றார்], அவற்று ஒன்றுஇல் உயிரும் - அவைகளில் ஒவ் வோரிந்திரிய மற்ற ஜீவரும், காண்டல் – காணப்படுதலும், உள்ளே - ஆந்தரத்தில், புந்திவிவகரிக்கும்போது - புத்தியானது மனோராச்சி யஞ் செய்யும்பொழுது, இருந்தும் – [தத்தமக்குரிய விடங்களில்]

இருந்தும், நந்தி - [தமது செயல்] கெட்டு, அறிவு இல்லாதவராக் காண்டல் — சடமாகக்காணப்படுதலும், எனது ஆதல் — மமதைக்கு விடயமாதலும், என்ற இவற்றால் - என்று சொல்லும் இவ்வேதுக் களை யுடைமையால், [ஆனால் ஆத்துமாமற் றெத்தன்மைத் தெனின் அதற்குக் கூறுகின்றார்], சொல் ஆத்துமா - மேற்சொல்லிய ஆன்மா வானது, சித்து சுகம் [ஆம்] ஞானானந்த மயமாம், எ—று,

பொ—ள. சுரோத்திர முதலாகிய ஞானேந்திரியங்கள் ஆன்மா வல்ல வாணுமெனின் அதற்கு ஏது கூறுகின்றார் அவைகளில்ஒவ் வோரிந்திரிய மற்ற ஜீவரும் காணப்படுதலும் ஆந்தரத்திற் புத்தி யானது மனோசஞ்சிலரு செய்யும் பொழுது தத்தமக்குரிய விடங்களி லிருந்துந் தமது செயல் கெட்டுச் சடமாகக் காணப்படுதலும் மமதைக்கு விடயமாதலும் என்று கூறுகின்ற இவ்வேதுக்களையுடை மையால் ஆனால் ஆத்துமா மற்றெத்தன்மைத் தெனின் அதறகுக் கூறுகின்றார் மேற் சொல்லிய ஆன்மாவானது ஞானானந்த மயமாம். எ—று.

என்ற என்பதின் அகரவீறு தொக்கது ஆத்துமா வென்பது மூன்றுங் கூட்டப்பட்டது ஆ் என்பது பிரித்துக் கூட்டப்பட்டது,

க-ளா. அநித்திய முதலிய ஏதுக்களையுடைய ஞானேந்திரியங் கள் ஞானானந்த மயமாகிய ஆன்மாவல்ல, எ—ம் (௩௭)

[பிராணனைச்சோதித்தல்]

௩௨. உள்வெளியும் போக்குவர வுற்றுறங்கும் வேளையின் மூக்
குள்ளபணி கள்ள னுறக்கவர்ந்துங்—கள்ளனெனக்
கண்டறிய லாகாத காற்றன்றே யாத்துமா
விண்டறிவா யுள்ள வெளி (௩௮)

இ-ள. உள்வெளியும் - அகத்திலும் புறத்திலும், போக்கு வரவு உற்று – உசுவாச நிசுவாசங்களைப்பொருந்தி, உறங்கும் வேளையில் - [சரீரி] நித்திரை செய்யுஞ் சமயத்தில், மூக்கு உள்ளபணி – நாசியிலே தரித்திருக்கப்பட்ட ஆபரணத்தை, கள்ளன உறக்க வர்க்தும் - திருடன் [வந்து இப்பிராண வாயு தன் கையிற்] பரிசிக்குமாறு கழற்றியும், கள்ளன் என - [அவனைத்] திருடன் என்று, கண்டு அறியலாகாத - நோக்கியறிய முடியாத, காற்று [ஆத்துமா] அன்று - [சடசொரூபமாகிய] பிராணன் ஆன்மாவல்ல, [ஆனல் ஆன்மாவின் சொரூபம் யாதெனின் மேற்கூறுகின்றூர்], ஆத்துமா- ஆன்மாவானது, விண்டு அறிவாய் உள்ள வெளி - வியாபகமாயும் அறிவாயுமிருக்கப்பட்ட நிரவயவப்பொருள். எ—று.

பொ-ரை. அகத்திலும புறத்திலும் உசுவாச நிசுவாசங்களைப் பொருந்தி சரீர நித்திரை செய்யுஞ்சமயத்தில் நாசியிலே தரித்திருக்கப்பட்ட ஆபரணத்தைத் திருடன் வந்து இப்பிராணன் தனது கையிற் பரிசிக்குமாறு கழற்றியும் அவனைத் திருடனென்று நோக்கியறிய முடியாத சடரூபமாய பிராணன் ஆன்மாவல்ல, ஆனல் ஆன்மாவின் சொரூபம யாதெனின மேற்கூறுகின்றூர் ஆன்மாவானது வியாபக மாயும் அறிவாயுமிருக்கப்பட்ட நிரவயவப்பொருள். எ—று.

ஆத்துமா என்பது அன்று என்பதுடனுங் கூட்டப்பட்டது

க-கா. சடமாகிய பிராணன் அறிவுவடிவாகிய ஆன்மாவல்ல. எ—ம் [௫௮]

[மனதைச் சோதித்தல்.]

௫௯. சங்கற்ப மேவடிவாச் சாற்றப் படுமனம ன்
றிங்குவிகா ரப்பட லு மெய்திறுயின்—மங்குத லு
மென்ன தெனப்படலு மென்றிவற்று லாத்து மா
மன்னறிவா னந்த மயம் (௫௧)

இ—ள். சங்கற்ப மேவடிவா - விடயங்களை நினைத்தலே வடிவமாக, சாற்றப்படும் மனம் - சொல்லப்படுகின்ற மனமானது, [ஆத்துமா] அன்று - ஆன்மாவல்ல, [ஏதனாலெனின் அதற்கு ஏது கூறுகின்றார்], இங்கு ஜாக்கிர காலத்தில், விகாரப்படலும் - காரியப்படுதலும், (முன்வடிவத்தைவிட்டு வேறு வடிவத்தைத் தரித்தலும்), துயில் எய்தில் - சுழுத்தியடைந்தால், மங்குதலும் - தன்னுருவங் கெடுதலும், என்னது எனப்படலும் - மமதைக்கு விஷயமாதலும், என்ற இவற்றால் - என்று சொல்லும் இவ்வேதுக்களை யுடைமையால், [ஆனால் ஆன்மாவின் சொரூபம் யாதெனின் மேற்கூறுகின்றார்], ஆத்துமா - ஆன்மாவானது, மன் அறிவு ஆனந்தமயம் – நிலைபெற்ற ஞானானந்தமயமாம். எ—று.

பொ—ரை. விடயங்களை நினைத்தலே வடிவமாகச் சொல்லப்படுகின்ற மனமானது ஆன்மாவல்ல ஏதனாலெனின் அதற்கு ஏது கூறுகின்றார் சாக்கிரகாலத்திற் காரியப்படுதலும் சுழுத்தியடைந்தால் தன்னுருவங் கெடுதலும் மமதைக்கு விஷயமாதலும் என்று சொல்லும் இவ்வேதுக்களை யுடைமையால் ஆனால் ஆன்மாவின் சொரூபம் யாதெனின் மேற்கூறுகின்றார் ஆன்மாநிலை பெற்ற ஞானானந்தமயமாம். எ—று.

ஆத்தமா என்பது அன்று என்பதுடனும கூட்டப்பட்டது
என்ற என்பதின் அகரவீறுதொக்கது

க—ரை. காரியப்படுதல் முதலிய ஏதுக்களையுடைய மனம் சச்சிதானந்த வடிவ ஆன்மாவன்று, எ—ம். (௯௧)

[புத்தியைச் சோதித்தல்.]

௯௨. நிச்சய சொரூபமதாய் நின்று சுழுத்தியின்கட்
பொய்ச்சூ னியமாகும் புந்தியன்று—நித்தியமுங்
குன்றுமத னின்மையையுங் குன்றா தறிபொருளா
யென்று மிலங்காத்து மா (௯௨)

இ-ள். நிச்சய சொரூபமதாய் நின்று - [சாக்கிரத்தில் விஷயங்களை இது இன்னது என] நிச்சயித்தலே வடிவமாகக்கொண்டிருந்த, சுழுத்தியின் கண் - சுழுத்தியவஸ்தையில், சூனியப்பொய் ஆகும் - இன்மை வடிவமாகிய பொய்யாகின்ற, புந்தி - புத்தியானது, நித்தியமும் - ஒவ்வொருநாளும், குன்றும் அதன் இன்மையையும் - [சாக்கிரத்தில் அப்புத்தியினிருப்பை யறிந்தாற்போலச் சுழுத்தியில்] கெடுகின்ற அதன் அபாவத்தையும், குன்றாது - தான் நித்தியமாயிருந்த, அறிபொருளாய் - அறிகின்ற சாக்ஷியாய், என்றும் — எந்நாளும், இலங்கு ஆத்துமா இன்று - விளங்குகின்ற ஆன்மாவல்ல. எ—று.

பொ—ரை. சாக்கிரத்தில் விஷயங்களை இது இன்னது என நிச்சயித்தலே வடிவமாகக் கொண்டிருந்த சுழுத்தியவஸ்தையில் இன்மை வடிவமாகிய பொய்யாகின்ற புத்தியானது ஒவ்வொருநாளுஞ் சாக்கிரத்தில் அப்புத்தியினிருப்பை யறிந்தாற்போலச் சுழுத்தியில் கெடுகின்ற அதன் அபாவத்தையும் நித்தியமாயிருந்தறிகின்ற சாக்ஷியாய் எந்நாளும் விளங்குகின்ற ஆன்மாவல்ல. எ—று.

தா—ம். தூலமுஞ் சூக்குமமுமாகிய பிரபஞ்சப் பொருள்களை த்தும் பாதயோக்கிய சொரூபமுடைய மித்தையாதலின புத்தியினிருப்பும் அத்தன்மைத் தென்பார் "நிச்சய சொரூபமதாய் நின்று" எனவுஞ் சுழுத்தியவஸ்தையில் அம்மித்தியாசொரூபமும் இன்றென்பார் "பொய்ச் சூனியமாகும்" எனவுங்கூறினர்.

க-ரை, சாக்ஷியமாகிய புத்தி சாக்ஷியாகிய ஆன்மாவல்ல எ—ம். (௪0)

[அஞ்ஞானத்தைச் சோதித்தல்]

௫௫. பிரியமுடன் மோதம் பிரமோத மூன்றும்
விரியிடமாய்ச் சிற்பிரதி விம்ப—மருவிடமா
மஞ்ஞான மென்னதெனலாலன் றாத்மா
மெய்ஞ்ஞான மானவிது வேறு. [சக]

இ-ள். பிரியமுடன் - [இஷ்ட வஸ்துவின் தரிசனத்தாலுண்டாகின்ற] பிரியவிருத்தியோடு, மோதம் - [இஷ்ட வஸ்துவின் லாபத்தாலுண்டாகின்ற] மோத விருத்தியும், பிரமோதம் - [இஷ்ட வஸ்துவின் போகத்தாலுண்டாகின்ற] பிரமோத விருத்தியுமாகிய, மூன்றும் - மூவகை விருத்திகளும், விரி இடம் ஆய் - உண்டாதற் கேதுவுமாய், சிற்பிரதிவிம்பம் - சிதாபாசன், மருவு இடம் ஆம் - பொருந்திநிற்றற்குஸ்தானமுமாகின்ற, அஞ்ஞானம் — அஞ்ஞானமானது, என்னது எனலால் — என்னுடையதென்று [தனக்கன்னியமாகச்] சொல்லப்படுதலால், ஆத்துமா அன்று - [தானுயிருக்கின்ற] ஆன்மாவல்ல, மெய்ஞ்ஞானம் ஆன இது - நித்திய ஞான வடிவமாகிய இவ்வான்மா, வேறு — [அஞ்ஞானத்தினும்] அந்நியமாம், எ-று,

பொ—ரை. இஷ்ட வஸ்துவின் தரிசனத்தாலுண்டாகின்ற பிரிய விருத்தியோடு இஷ்டவஸ்துவின் லாபத்தினாலுண்டாகின்ற மோதவிருத்தியும் இஷ்டவஸ்துவின் போகத்தினாலுண்டாகின்ற பிரமோத விருத்தியுமாகிய மூவகை விருத்திகளும் உண்டாதற் கேதுவுமாய்ச் சிதாபாசன் பொருந்தி நிற்றற்குஸ்தானமுமாகின்ற அஞ்ஞானமானது என்னுடையதென்று தனக்கந்நியமாகச் சொல்லப்படுதலால் தானுயிருக்கின்ற ஆன்மாவல்ல நித்திய ஞானவடிவமாகிய இவ்வான்மா அஞ்ஞானத்தினும் அந்நியமாம், எ—று.

க—னா. தனக்கர்மிட்மாகச் சொல்லப்படுகின்ற அஞ்ஞானந் தானுயிருக்கின்ற ஆன்மாவல்ல, எ-ம். [௪௧]

[தற்பதார்த்த சோதனம்]

[இதுமுதல் மூன்று செய்யுட்களால் தற்பதார்த்த சோதனோபாயங் கூறப்படுகிறது அவற்றுள் இதில் சத்தினின்றும் ஆகாயாதிகளைப் பிரிக்க வேண்டுமெனல்]

[கட்டளைக்கலித்துறை]

௳௯. ஏகா சலவச் சுதசத் திலத்திய சித்தில கு
மாகாய மாதி யனைத்தும் பிரிக்கப்பட் டாலிலவா ம்
வாகா னவப்பொரு ளொன்றே யிருந்து வயங்கிடும் பி ன்
தேகா திபௌதி கபூதங்கண் முன்னிற் றெரிவறு மே [௪௨].

இ-ள். ஏக அசல அச்சுதசத்தில் - சசாதியாதி சம்பந்தமில்லாததாயும் கிரியையற்றதாயும் நித்தியமாயு மிருக்கின்ற சத்து வஸ்துவில், அத்தியசித்த இலகும் — கற்பனையாய் விளங்காநின்ற, ஆகாயம் ஆதி அனைத்தும் - ஆகாய முதலாகிய பூதபௌதிகங்களெல்லாம், பிரிக்கப்பட்டால் இலவாம் - [அச்சத்தினின்றும்] பிரிக்கப்படின் மித்தையாவனவாம், பின் - பிரித்தபின்பு, வாகான அப்பொருள் ஒன்றே - அழகிய அந்தச் சத்துவஸ்து ஒன்றுமாத்திரமே, இருந்து வயங்கும் - நிலைபெற்றுவிளங்கும், தேக ஆதி பௌதிக பூதங்கள் [இல்] - [அவ்விளக்கத்தால்] சரீர முதலாகிய பிரபஞ்சங்களிலும் அதன் காரணமாகிய பஞ்சபூதங்களிலுமுள்ள, முன்தெரிவு அறும் - சத்தியத்தோற்றம் நீங்கும் (மித்தையாகத் தோற்றும்). எ-று.

பொ-ரை. சசாதியாதிசப்பந்தமில்லாததாயும் கிரியையற்ற தாயும் நித்தியமாயுமிருக்கின்ற சத்துவஸ்துவில் உற்பன்னமாய் விளங்காநின்ற ஆகாயமுதலாகிய பூதபௌதிகங்களெல்லாம் அந்தச் சத்தினின்றும் பிரிக்கப்படின் மித்தையாவனவாம். பிரித்த பின்பு அழகான அந்தச்சத்து வஸ்து ஒன்று மாத்திரமே நிலைபெற்று விளங்கும் அவ்விளக்கத்தால் சரீர முதலிய பிரபஞ்சங்களிலும் அதன் காரணமாகிய பஞ்சபூதங்களிலுமுள்ள சத்தியத்தோற்றம் நீங்கும் அதாவது மித்தையாகத்தோற்றும் எ-று.

ஏழாம் வேற்றுமையில் வந்த இல்லுருப் பிரித்துக்கூட்டப்பட்டது

"ஆகாய மாதியனைத்தும் பிரிக்கப்பட்டாலிலவாம், வாகனவப் பெருளொன்றேயிருந்து வயங்கிடும்பின், தேகாதி பௌதிக பூதங்கண் முன்னிற்றெரிவறுமே" என்று கூறியதற்கு முதலில் மித்தையாதலாகிய பாதமும் அப்பாதத்தாற் சத்துவஸ்துவின் விளக்கமும் அவ்விளக்கத்தால் பூத பௌதிகங்களின் பாதமும் உளதாமென்று அருத்தமாதல் பற்றிப் பாதத்தாற் போதமும் போதத்தாற் பாதமும் உளதாதலாகிய அந்நியோந்நியாசிரய தோஷம் உண்டாமென்னுஞ் சங்கையில்லை ஏதனுலெனின் முன்னைய பாதம் பரோக்ஷமும் பின்னையபாதம் அபரோக்ஷமும் ஆதலினெனவறிக.

பிரபஞ்சப் பொருள்கள் ஒவ்வொன்றிலும் சத்து சித்து ஆனந்தம் நாமம் ரூபம் என ஐந்த மசங்களுள அவற்றுள் முன்னைய மூன்று சந்தனத்தின் கைப்பு குளிர்ச்சி வாசனை ஆகிய மூன்றுஞ் சொரூபத்தாலெப்படி ஏகமோ அப்படி ஏகமும் வியாபகமுமாம் இவை சத்தாகிய ஆன்மாவின் அமிசங்களென்று சொல்லப்படும் பின்னைய இரண்டும் பலவும் பரிச்சின்னமுமாம இவை அசத்தாகிய மாயையின் அமிசங்களென்று சொல்லப்படும் இவ்வைந் தமிசங்களுகம் தம்முட்கலந்திருத்தல் பற்றிப் பிரபஞ்சப் பொருள்கள்

சத்தியம் போலச் சத்தசத்துக்களின் விவேகமில்லாதவர்களுக்குத் தோற்றுகின்றன இவ்வைந்தமிசங்களும் ஒரு பொருளில் எவ்வாறு கலந்திருக்கிறன வெனின் கடம் இருக்கிறது என்பது சத்து விளங்குகிறது என்பது சித்துதாகசாந்திக்குத் தண்ணீர் கொண்டு வருதலால் சுகசாதனமாயிருக்கிறது என்பது ஆனந்தம் கடம் என மூன்றெழுத்தாலாகியது நாமம் பண்டி பெருத்துக் கழுத்துச் சிறுத்து உருண்டை வடிவாயிருப்பது ரூபம் இவ்வைந்தமிசங்களும் கடம் என்னும் ஒரு பொருளிற் கலந்திருத்தல் காண்க.

இவற்றுள் பின்னையவாகிய நாம ரூபங்களாற் சொன்மாத்திரமாகக்கற்பிக்கப்பட்ட கடத்தில் முன்னையவாகிய சச்சிதானந்தங்கள் கலந்திருத்தலால் அக்கடம் சத்தியம் போல விவகரிக்கப்படுகிறது விசாரதிருட்டியால் கடத்தின் எந்தப்புறங்களிற் பார்த்தாலும் மண்ணைத்தவிரக் கடம் என்பது காணப்படுகிறதில்லை ஆகையால் கடம் இருக்கிறது என்னும் எழுவாயும் பயனிலையுமாகிய ஒரு வாக்கியத்திற் கடம் என்னும் எழுவாய்ப் பொருள் இருக்கிறது என்னும் பயனிலையோடு கூடினால் உள்ள பொருளாகத் தோற்றுகிறது அதில் இருக்கிறது என்னும் பயனிலையைப் பிரித்து விட்டால் வேறுயாது பயனிலையைப் பெறுமெனின் இல்லையென்னும் பயனிலையையல்லவா பெறும் அங்ஙனம் பெறவேமுன் உள்ளபொருளாகத் தோற்றிய கடம் என்னும் அந்த எழுவாய்ப் பொருளே பின் இல்லை யென்னும் பயனிலையால் அசத்தா (இல்லாததா) கின்றது இப்படியே ஆகாயமிருக்கிறது வாயு இருக்கிறது அப்பு இருக்கிறது பிருதிவி இருக்கிறது பிரபஞ்சமிருக்கிறது என ஆகாய முதற் பிரபஞ்சம் வரையுள்ள பூதபௌதிகங்கள் இருக்கின்றது என்பதாகிய சத்தத்தோடு கூடிச்சத்தியம்போலத் தோன்றுகின்றன அவற்றினின்றும் சத்தைப் பிரித்துவிட்டால் ஆகாயமில்லை வாயு இல்லை தேயுஇல்லை அப்புஇல்லை பிருதிவி இல்லை பிரபஞ்சம்

இல்லை என அவையாவும் மித்தையாகின்றன இங்ஙனம் மித்தை யென்று சொல்வது சொல் மாத்திரமா அநுபவமுடைடா எனின் அசுத்தாந்தக் கரணமுடையவர்களுக்குச் சொல்மாத்திரமாகிய மித்தையாம் அங்ஙனமாயினும் சுத்தாந்தக் கரணமுடைய முமு க்ஷுக்கள் ஏகாக்கிரசித்தத்துடன் நாமரூபவடிவ ஆகாயாதி சகத்தை யுஞ் சத்தையும் வேறு வேறு பிரித்து ஆகாயாதிகளிலுள்ள நாம ரூபங்களைப் பொருளாகக் கருதாது அவற்றிலுள்ள சத்தியத்து வாதி புத்தியையும் விடுத்து அவற்றின் உள்ளிலும் வெளியிலும் பூரித்துச் சச்சிதானந்த சொரூபமாகிய வஸ்து எப்படி ஏகமும் வியாபகமுமாயிருக்கின்றதோ அப்படிதனது அந்தக் கரணவிருத் தியை இப்பிண்டப் பிரமாண்டமாகிய எவ்விடத்தும் வியாபிக்கும் படி சிலநாள் அப்பியசித்துவந்தால் விருத்தியவ்வாறு வியாபகத் தன்மையை அடையும் எப்பொழுது பூரணமான வியாபகத் தன் மையை அடைந்து விருத்திநிச்சலமாயிற்றோ அப்பொழுது ஏகமா யும் அதிசூக்குமமாயும் பரிபூரணமாயுமுள்ள பரம்பொருள் அநுபவத் திற்கு வரும அவ்வநுபவத்தால் சகத்தில் அபரோக்ஷ மித்தியாத்துவ நிச்சயமுளதாம் இதுவே தற்பதார்த்த சோதனத்தின் உபாயமா மெனவறிக,

சச்சிதானந்தங்களையும் நாமரூப சகத்தையும் வேறு பிரித் தல் அத்துவைத சம்பிரதாயந்தானென்பது

"கடாதி விடயத்தினிலொன்றினைக்குறித்து நாமகற்பனை யோடுருவமெனு மாயையதன்றிறத்தைத், தடாது விடுத்தத்திபாதிப் பிரியமெனனுஞ் சச்சிதானந்தமாம் பிரஹ்மத்தின்றிறத்தை, விடாத னுசந்தானஞ் செய்திடுதலே புறத்து மெய்த்திரிசியானு வேதப் பெயர் கொள்கின்ற, கெடாத தொருசவிகற்ப சமாதியெனலா கும்" என்னும் வேதாந்த சூடாமணியினும் சத்தையும் நாமரூப

சகத்தையும் பிரித்த அந்தக்கரணத்தின் கண் பிரஹ்மானுபூதியுளதா மென்பது "உதியாம லென்று மொழியாமை நின்ற வொளியாகி யென்று முளதாய்த், திதியாய்நிறைந்து தெளிவாகி யங்கோர் செயலான தின்றி யருளான், மதியாளர் தங்க ளகமே யகண்ட வடிவாய் நிகழ்ந்த வடிவே, பதியாகி யென்று மழியாமை நின்ற படியாகி நின்ற பரனே" என்று கூறுகின்ற ஈசுரகீதையினாலுங்கண்டு கொள்க.

கஙா. பூதபௌதிகங்களைத்தும் சத்தினின்றும் பிரிக்கப்பட்டால் அசத்தாம். எ-ம். [சஉ]

[மேலைச்செய்யுளாற்சத்தினின்றும் ஆராயாதிகளைப் பிரிக்கவேண்டுமெனக்கூறி இச்செய்யுளில் அவற்றைவிருத்திக்க அபாவமாக்க வேண்டுமென்ற]

[விருத்தம்]

ஙஎ. மண்ணீரழல்கா லந்தரங்கள் வருகாரணத்திற் கிடமான
விண்ணீர் மையதெங் ஙனமிருக்கு மென்ன மெல்ல விவேகத்தா
லெண்ணி விளங்கு பூதமைந்தும் விருத்திக் கிலவாப் பழகிவரின்
வண்ணம் பெயரொன் றிவையின்றி வயங்கு மகண்ட பரசிவமே [சரு]

இ-ள். மண்ணீர் அழல்கால் அந்தரங்கள் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்சபூதங்களும், வருகாரணத்திற்கு இடம் ஆன - உண்டாதற்குக்காரணமாகிய பிரகிருதி (அதநியஸ்தமாய) இருத்தற்கு ஆதாரமாயுள்ள, விணீர்மையது - சிதாகாயத்தின்றன்மையானது, எங்ஙனம் இருக்கும் என்ன - எத்தன்மையாயிருக்கிற தென்று, விவேகத்தால்-விவேக [புத்தி] யினாலே, மெல்லவெண்ணி -

[ஏகாக்கிரசித்தத்துடன்] சாவதானமாகத் [தனித்திருந்து] விவே கித்து, விளங்கு பூதம் ஐந்தும் - [இந்திரியங்களின் வாயிலாகத்] தோன்றுகின்ற பூதங்களைந்தனையும், விருத்திக்கு - [அந்தக்காரண] விருத்திக்கு, இலவாப் பழகிவரின் - இல்லாதவனாக [மித்தையென் பதாக) விசாரத்தாலேனுந்தியானத்தாலேனும் அப்பியசித்து வந் தால், பெயர் வண்ணம் என்ற - நாமரூபமென்று சொல்லப்படுகின்ற, இவை இன்றி - இத்துவைதசம்பந்தமில்லாமல், அகண்டபரசிவம் வயங்கும் - ஏகமாகிய பிரஹ்மசொரூபம் விளங்கும் எ-று.

பொ-ரை. பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்ச பூதங்களும் உண்டாதற்குக்காரணமாகிய பிரகிருதி அந்நியஸ்தமா யிருத்தற்கு ஆதாரமாகிய சிதாகாயத்தின் றன்மையானது எத்தன் மையாயிருக்கிறதென்று விவேகபுத்தியினாலே ஏகாக்கிரசித்தத்து டன் சாவதானமாகத்தனித்திருந்து விவேகித்து இந்திரியங்களின் வாயிலாகத்தோன்றுகின்ற பூதங்களைந்தனையும் அந்தக்காரண விருத் திக்கு இல்லாதனவாக [மித்தையென்பதாக] விசாரத்தினாலேனும் தியானத்தினாலேனும் அப்பியசித்து வந்தால் நாமரூபமென்று சொல்லப்படுகின்ற இத்துவைத சம்பந்தமில்லாமல் ஏகமாகிய பிரஹ்மசொரூபம் விளங்கும். எ-று.

என்ற என்பதின் அகரங்குறைந்து நின்றது

இங்கே பூதமைந்தும் விருத்திக்கிலவாப்பழகல் என்று கூறியது போல "தானினையு மாறரிய தத்துவமியாதொன், ஞானிகழ்வதாகு மதபாவமெனும் யோகம், வானியலதாகி யொருவத்துவுமிலாதாஞ் சூனியமதாக வறிகின்றனர் சடயோர" என்ற ஈசுரகீதையிற் கூறி யிருப்பது காண்க.

அன்றியும் பஞ்சதசிபூதவிவேகம் [அக] வது சு-ல் இப்படி முமுக்ஷுவாயுள் மித்தியாத்துவத்தை வெகு காலம் வரையிலும்

நிச்சயித்து வாயுவை விடக்கடவன் அதாவது வாயுசத்தியமாமென்னும் புத்தியை விடக்கடவன் என்று கூறியிருப்பதுங்காண்க.

க-ரை. அந்தக்கரண விருத்தியினால் பூதபௌதிகங்களில் (மித்தியா) பாவனை பண்ணினால் உண்மைப் பொருள் விளங்கும் எ-ம. (௪௫)

[அந்தக்கரண விருத்ரியை வியாபகமாக்கவேண்டுமெனல்]

௫௮. விடயா கார மடையாமல் விண்போ லுள்ளம் வியாபகமா
யிடுமெம் மேலோற் கவன்பிரஹ்மமேபாம் பிறப்போடிறப்புமுறா
னடைதலரிதேல் விடயமெதி ரடையுந் தோறுமதுவாகி
விடுத் திலனுப் வேறுதனை யறிந்தா னேனும் வீடுறுமால் (௪௪)

இ-ள் எம்மேலோற்த - எந்த வுத்தமமான மோக்ஷ விச்சையுடையவனுக்கு, உள்ளம் - [யான் பிரஹ்மம் என்றுண்டாகும்] அந்தக்கரண விருத்தியானது, விடய ஆகாரம் அடையாமல் - சத்த முதலிய விஷய வடிவங்களைத் தரிக்காமல், விண்போல் - ஆகாயத்தை யொப்பாக, வியாபகம் ஆயிடும் - விபுவாகுமோ, அவன் அந்த அதிகாரியானவன், பிரஹ்மமேபாம் - [பிரஹ்மானுபூதியடைந்தவனாதலாற்] பிரஹ்ம சொரூபமேயாவன், பிறப்போடு இறப்பும் உறான் - [பின்பு] பிறப்பையு மிறப்பையுமடைய மாட்டான், [அங்ஙனஞ் செய்யமுடியாத மந்தர்களுக்கு மற்றோருபாயங் கூறுகின்றார்] அடைதல் அரிதேல் - [அவ்விபுத்தன்மையை அந்தக்கரணம்] அடைதல் அருமையாகுமாயின், விடயம் எதிர் அடையுந்தோறும் - விஷயங்கள் [இந்திரியங்களுக்கும்] பிரத்தியக்ஷமாகுந்தோறும், அது

ஆகிவிடுதல் இலனாய் - தான் அவ்விஷய வடிவமேயாயமுந்தாமல், வேறுதனை அறிந்தானேனும் — [விஷமாகிய ஞேயம் இந்திரியத்தாலுளதாகும் ஞானம் அந்தக்கரணமாகிய ஞாதிரு என்னும் இத்திரி புடிகளுக்கு] வேறாகத்தன்னைச் [சாக்ஷிவடிவமாக] அறிந்தானாயினும், வீடு உறும் - மோக்ஷமடைவான் எ-று.

பொ-ரை. எந்தவுத்தமமான மோக்ஷ விச்சையுடையவனுக்கு நான் பிரஹ்மமென்றுண்டாகும் அந்தக்கரண விருத்தியானது சத்த முதலிய வடிவங்களைத் தரிக்காமல் ஆகாயத்தை யொப்பாக விபுவாகுமோ அந்த அதிகாரியானவன் பிரஹ்மானுபூதியடைந்தவனாதலாற் பிரஹ்ம சொரூபமேயாவன் அவன் பிறப்பையு மடையமாட்டான் அங்ஙனம் செய்யமுடியாத மந்தர்களுக்கு மற்றொருபாயங்கூறுகின்றார் அவ்விபுத்தன்மையை அந்தக்கரணம் அடைதல் அருமையாகுமாயின் விஷயங்கள் இந்திரியங்களுக்குப்பிரத்தியக்ஷமாகுந்தோறும் தான் அவ்விஷய வடிவமேயாய அழுந்தாமல் விஷயமாகிய ஞேயம இந்திரியத்தாலுளதாகும் ஞானம் அந்தக்கரணமாகிய ஞாதிரு என்னும் இத்திரி புடிகளுக்கு வேறாகத் தன்னைச் சாக்ஷி வடிவமாக அறிந்தானாயினும் மோக்ஷமடைவான். எ-று.

௫௩வது செய்யுள்முதல் மூன்று செய்யுட்களின் திரண்ட பொருள். இம்மூன்று செய்யுட்களாலுங் கூறிய உபாயங்களின் படிதற் பதார்த்தத்தைச் சோதித்தலும் அதன் பயனும்.

முதலில் சத்தினின்றும் ஆகாயாதிகளைப் பஞ்சதசியின் பூத விவேகம் (௩௰)வது முதல (௩௮) வது வரையுள்ள சுலோகங்களிற் கூறியவாறு விவேகிக்க [பிரிக்க] வேண்டும் என்பதும், பிரித்த பின்பு சத்தினின்றும் பிரிந்த ஆகாயாதிப்பிரபஞ்சங்கள் மித்தையாம் என்பதும் அம்மித்தியாத்துவம் புத்திக்குத்திடமாகும் வரை சித்திர தீபத்திற் கூறியவாறு விசாரத்தினாலேனும் அதனை

அப்பியசிக்கவேண்டுமென்பதும் அம்மித்தியாத்துவம் திடப்பட்ட பின்னர் அந்தக்கரணத்தை வியாபகமாக்கவேண்டுமென்பதும் அவ்வாறு வியாபகமாய் நிலைத்த அந்தக்கரண விருத்தியில் அத்துவைத பிஹ்மானுபூதி அபரோக்ஷமாயுளதாமென்பதுமாம். பிரஹ்மானுபூதி வெளியிடத்தில் எவ்வாறு அபரோக்ஷமாமென்று சங்கிக்க வேண்டியதில்லை இதற்குப் பிரமாணம் சித்திரதீபத்தின் [உ௪உ] முதல் [உ௪௫] வரையுள்ள சுலோகங்களிற் சங்கை சமாதான பூர்வகமாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றது. அந்த [உ௪உ] சு-ம் அத்துவைதம் அபரோக்ஷமன்றெனின் அது பொருந்தாது ஞானவடிவமாகத் தோற்றிக்கொண்டிருத்தலால்-சங்கை—அத்துவைதம் முழுதுமாகத் தோற்றுகிறதில்லை யேயெனின சமாதானம் துவைதம் முழுதுந் தோற்றுகிறதா சொல். [உ௪௩] சு-ம். திசைமாத்திரத் தாற் றோற்றுகின்றதெனின் திசைமாத்திரத்தாற் றோற்றுதல் துவைதம் அத்துவைதம் இரண்டிலும் நிச்சயமாகவே சமமாம். உனக்கு தவ்வளவினல் துவைதஞ் சித்தித்தலபோல அத்துவைதம் என் சித்தியாது சித்திக்கவேசெய்யும் [உ௪௪] வது சு-ம். சங்கை. துவைதம் இல்லாதது அத்துவைதமாம் இவ்வத்துவைதம் துவைத ஞானமிருக்குங்கால் எப்படிச் சம்பவிக்கும். [உ௪௫] வது சு-ம். இப்படிக் கூறுவாபாயின் வாதி, கேள் துவைதம் அசத்தாம் மாயா வடிவமாயிருத்தலால் அசனல் பரிசேஷத்தால் வாஸ்தவமாகிய அத்துவைதம் தோற்றுகிறது என்று கூறப்பட்டிருக்கிறது இவ்வாறின்றித் துவம் பதார்த்த சோதனையிற் கிடைத்த சாக்ஷி வடிவ பிரத்தியக்சைதன்னிய அநுபவமாத்திரத்தாற் றிருப்தி யடைந்து தற்பதார்த்த சோதனை செய்யாவிடின் துவம்பதவாச்சியமாகிய ஜீவனுக்கும் இவனுக் காதாரமாகிய அவித்தைக்கும் காரணமாகிய பிரகிருதியானது நசிக்காமல் மிஞ்சியிருத்தலால் ஜகத்திற் சத்தியத்துவ புத்தி நீங்காது இது நீங்காதாகவே விஷயங்களிற்

சத்தியத்துவ புத்தியால் இச்சையும் அவ்விச்சையாற் பந்தமும் நீங்கா, இதனை,

"தொம்பதத்தினுபாதி கெடச் சொரூபமதாமதுவேதொன் மையதாந்தற்பத சோதனை செயவும் வேண்டுந், தம்பவுடன் மூன் றினுக்குஞ் சிவனுக்கு முதலாச் சாற்றுதன மாத்திரைப் பகுதிதானு மிருப்பதனு, னப்பரிபூரணமறைந்து ஞானமின்றி முனைப்போனுடு முயிராதலினுனதனருட்படியே, யிப்பருபாதியும் போய் நிருபாதிக மாமதனு லெப்பொரு ளப்பொருளாகி யிருப்பது தன்னியல்பே" என்று கூறியிருக்கிற உபதேசத்தாலறிக.

மனம் வியாபகமாதற்குச் சுருதி

கேவல விபுவாகிய சத்தாசாமானிய மொன்றினையே பாவித் துத் திக்குகளெல்லாம் நிரம்பியவனுய்ப் பரிபூரண பராமந்தியாய் நிற்பயமாக என்று அன்னபூரண சுருதி கூறுவதாய் விசார சந்திரோ தயர் சாமானியமா தன்னிய வருணனத்திலும்

"சத்தா சாமா னியமென்றுந் தனிப் பாவித்துப் பரிபூர்ண ச்
சுத்தா னந்த ஞய்த்திசைக ளெல்லாந் துன்னி நின்றிடுவாய்
சத்தா சாமா னியமட்டிங் கோடி யேதங் கததா னே
சுத்தா கார மிதன்விச்தா மதனின் றிருதான் றேன்றிடுமா ல்",

என்று வாசிட்டத்திலுங் கூறியிருத்தல் காண்க.

நாமரூபங்களைப் பற்றுமல் நான் பிரஹ்மமென்றுண்டாகும் வியாபகமான அந்தக்கரண விருத்தியினநுபமே பிரஹ்மாநுபவ மென்பதற்குப் பிரமானம் பஞ்சதசியில் பஞ்சகோச விவேகத்தின் (உச) வது சு-ம் வி-ம் உலகத்தில் எந்த எந்தக் கடமுதலிய விஷ-யங்களில் ஞானமிருக்கிறதோ அந்தவந்தக்கடமுதலிய விஷயங் களை அநாதாஞ் செய்யு (மித்தையென்றறிந்து மறக்கு) மிடத்துச்

சகலவஸ்துக்களிலும் "விளங்குகின்றது" என்னும் வடிவின தாகக் கலந்துள்ள விளக்க மெதுவோ அதுவே (ஞானமாத்திரமே) பிரஹ்மமாம் என்னும் இப்படிப்பட்ட புத்தியானது பிரஹ்மம் நிச்சயமாம் என்று கூறியிருத்தல் காண்க.

[இதனாலென்ன சித்தித்ததெனின் ஒவ்வொரு விடயாகாரமாகின்ற அந்தக்கரண விருத்தி அவ்வாறாகாமல் அநேக விடயங்கள் உள்ளடங்குமாறு வியாபகமாகிய காலத்தில் அவ்விருத்தியில் நாமரூபக்கலப்பின்றி விளங்கும் ஞானமாத்திர (விளக்கமாத்திர) த்தின் அநுபவம் பிரஹ்மாநுபவமாம் என்பது சித்தித்தது. ஆதலால் இங்கே (தற்பதார்த்த சோதனத்தில்) நாமரூபங்களை அபாவமாக்க வேண்டு மென்றும் மனோ விருத்தியை வியாபகமாக்கவேண்டு மென்றுங்கூறிய வுபாயம் பொருத்தமுடைய தன்றன்று வித்தியாரணிய சுவாமிகள் முதலிய பூர்வாசாரியர்கள் கூறியஇலக்கணத்தோடு பொருத்த முடையதேயாம். இப்பிரஹ்மாநுபவமாகிய அபரோக்ஷ ஞான லக்ஷணம் அக்குச் சங்கை சமாதான பூர்வகமாக நிரூபிக்கப் பட்டிருக்கின்றது அவற்றை ஈண்டு விரிவஞ்சி எழுதவில்லை]

கரு. விஷயாகாரதகை விட்டு விபுத்தன்மையடைந்த அந்தக்கரணமுடைய அதிகாரிக்குப் பிரஹ்மானுபூதியுளதாம் எ-ம். (சச)

(மோக்ஷசாதனம் பிரஹ்மஞ்ஞான மொன்றேயன்றிக் கருமமன்றெனக்கூறுதல்)

உ௫. முற்றிப் புறத்துப் பொருடுறந்து முடியா சடுக்கண் முறையிடை யோ
குற்றம் பலவா மெஞ்ஞாதி யுரிய கரும முனற்றினுமிம்
முற்றுங் காண சுத்திமட்டு முதவு முடிவில் பானா ன
மொற்றை யேதுன் பொழிந்தசுக வுருவா முத்தி யுதவுறுமால் சடு

இ-ள் புறத்துப்பொருள் - [புத்திரதாராதிகளாகிய]புறத்திலு ள்ள வஸ்துக்களை, முற்றித்துறந்து - வெறுத்து நீக்கி, முடிஆர் அடுக் கல் முழை இடை - சிகரங்களைப் பொருந்திய மலைக்குகையினிடத்தே, யோகு உற்றும் - [இயமமுதலாகிய அட்டாங்க] யோகங்களைச்செய் தாலும், உரிய - [தத்தம் வருணாச்சிரமங்களுக்கு] உரியதாகிய, எஞ் ஞாதி [ஆம்] -யாக முதலாகிய, பலகருமம் - நானாவிதநிஷ்காமகரு மங்களை, உஞற்றிலும் செய்தாலும், இம்முற்றும் - இவையனைத்தும், கரணசுத்திமட்டும் உதவும் - அந்தக்கரண சுத்திமாத்திரங்கொடுக்கும், முடிவில் பரஞானம் ஒற்றையே - அழிதலில்லாத பிரஹமஞ்ஞான மொன்று மாத்திரமே, துன்பு ஒழிந்த - [சர்வ] துக்கங்களும் நீங்கிய சுகவுருவாம்முத்தி - ஆனந்தவடிவமாகிய மோக்ஷத்தைக் கொடுக்கும். எ - று

பொ-ரை. புத்திரதாராதிகளாகிய புறத்திலுள்ள வஸ்துக்களை வெறுத்து நீக்கிச் சிகரங்களைப் பொருந்திய மலைக்குகையினிடத்தே இயமமுதலாகிய அட்டாங்கயோகங்களைச் செய்தாலும் தத்தம் வரு ணாச்சிரமங்களுக்குரித்தாகிய யாக முதலாகிய நானாவித நிஷ்காம கர்மங்களைச்செய்யினும் இவையனைத்தும் அந்தக்கரணசுத்திமாத்திரங் கொடுக்கும் அழிதலில்லாத பிரஹமஞ்ஞானம் ஒன்று மாத்திரமே சர்வதுக்கங்களும் நீங்கிய ஆனந்தவடிவமாகிய மோக்ஷத்தைக்கொடுக் கும். எ - று.

ஆம் என்பது பிரித்துக்கூட்டப்பட்டது.

தா-ம். மோக்ஷசாதனம் கருமமன்றென்பார் "முற்றிப்புறத்துப் பொருடுறந்து முடியாரடுக்கன் முழையிடையோ, குற்றும் பலவா மெஞ்ஞாதியுரியகருமமுஞற்றினும், முற்றுங்கரண சுத்தி மட்டு முத வும்" எனவும் ஞானகருமசமுச்சயமும் அச்சாதன மன்றென்பார் 'பரஞான், மொற்றையே துன் பொழிந்த சுகவுருவாமுத்தி யுதவுறும்'

எனவுங் கூறினர். இதனாலே நிஷ்காம கர்மம் ஞானத்தின் பகிரங்கசாதன மாவதன்றி மோக்ஷசாதனமன் றென்பதாயிற்று.

க—ரை. மோக்ஷத்திற்குச் சாதனம் பிரஹ்மஞானம் ஒன்றேஎ—ம் (சரு)

மேலைச்செய்யுளால் நிஷ்காமகன்மத்துக்கு ஞானத்தின் பகிரங்கசாதனத்தன்மை உடன் பாட்டாற்கூறி இதில் எதிர்மறை முகத்தானு வலியுறுத்தல்

[கட்டளைக்கலித்துறை]

சுஎ. பிச்சைக் கலைந்து முணவோர் கவளமும் பெற்றிலாய்
அச்சோவென் றேங்கி யலைதலிற் காமித் தறம்புரி யா
ரிச்சையில் கன் மஞ்செய் யார்பல யோனி யுற்றுரெனி
னும்
விச்சையு றாரின்ப வீடு முறாரிடர் மேவுவரே சசு

இ-ள். காமித்து - [உணவை) விரும்பி, அறம்புரியார் - [அன்னம முதலியவற்றைப் பயனுகக் கொடுக்கத் தக்க] சற்கருமங்களை (முற்பிறப்புக்களிற்] செய்யாதவர்கள் பிச்சைக்கு - பிச்சையெடுப்பதற்காக அலைந்தும் - [இப்பிறப்பில் ஊாதோறுந்தெருத்தோறும மனைதோறுந்) திரிந்தும் ஓர்கவளம் - ஒருதாம் வாய் கொள்ளும அளவுடைய, உணவு [உம்] — உண்ணப்படு பொருளும், பெற்றிலாய் - கிடையாதவர்களாய், அச்சோ என்று ஏங்கி - ]பசிநோயாலுண்டாகும் வருத்தத்தைச் சகிக்கமாட்டாது] ஐயோவென்று அழுதுகொண்டு, அலைதல்இல் - திரிதல்போல, இச்சை இல் கன்மம் செய்யார் [மேலைச் செய்யுளிற் கூறிய] நிஷகாம கன்மஞ்செய்யாதவர்கள், பலயோனி உற்றூர் எனினும் — பல பிறப்புக்களை யடைந்தாராயினும், விச்சை உறார் [அந்தக்காணசுத்தி யடையாமையால் அதன் சுத்தியாலடையக்கூடிய] ஞானமடையார், இன்ப வீடும் உறார் -[ஞானமடையாமையின்] ஆனந்தவடிவ மோக்ஷத்தையு மடையமாட்டார், இடம் [ஏ] மேவுவர் - பிறப் பிறப்புக்களாலுண்டாகுந்] துன்பத்தையே அடைவர். எ—று

பொ-ளா. உணவை விரும்பி அன்னமுதலியவற்றைப் பய ஞகக் கொடுக்கத்தக்க சற்கருமங்களை முற்பிறப்புக்களிற் செய்யாத வர்கள் பிச்சையெடுப்பதற்காக இப்பிறப்பில் ஊர்தோறுந் தெருத் தோறும் மனைதோறுந் திரிந்தும ஒரு தாம் வாய் கொள்ளும அள வுடைய உண்ணப்படும் பொருளுங்கிடையாதவர்களாய்ப் பசி நோயாலுண்டாகும் வருத்தத்தை சகிக்கமாட்டாது ஐயோ என்று அழுதுகொண்டு திரிதல் போல மேலைச்செய்யுளிற் கூறிய நிஷ்கா மகன்மஞ் செய்யாதவர்கள் பல பிறப்புக்களையடைந்தாராயினும் அந்தகரணசுத்தி யடையாமையால் அதன் சுத்தியாலடையக்கூடிய ஞானமடையார் ஞானமடையாமையின் ஆனந்த வடிவ மோக்ஷத்தை மடையமாட்டார் பிறம்பிறப்புக்களாலுண்டாகுந் துன்பத்தையே அடைவர். எ-று.

உம்மையும் ஏகாரமும் பிரித்துக் கூட்டப் பட்டன.

க-ளா. காமியகன்மஞ் செய்யாதவர்க்கு உணவு அடையப்படா மைபோல நிஷ்காமகன்மஞ் செய்யாதவர்க்குச் சித்தசுத்தி யின்மையால ஞானமும் அஃதின்மையால மோக்ஷமும் அடையப்படா. எ-ம் [சசு]

[க]வது ஞானசாதன வியல் முற்றிற்று

---

## [உ] வது நிலையியல்

[வெண்பா]

கூக. எட்டியெட்டிப் பாக்குமட்டு மெட்டவெட்டச் செல் லுமஃதே
சுட்டிறந்தாற் றுனுகித் தோன்றுமே—மட்டிறந்து

எங்கு நிறைவா யிலகு மூத்தா னந்தனெ னு
நங்குருவி னல்லுருவ மே.

இ-ள். மட்டு இறந்து எங்கும் நிறைவாய் - அளவின்றி எவ்வி டத்தும் பரிபூரணமாய், இலகும் மூத்தானந்தன் எனும் - விளங்கா நின்ற மூத்தானந்த னென்று கூறும் நாமமுடைய, நம் குருவின் - நமது குருமூர்த்தியினது, நல் உருவம் - ஆனந்த சொரூபமானது, எட்டி எட்டி - [விடயம் போலத் தனக்கந்நியமாயிருப்பதாகக் கருதி மனத் தால்] தாவித்தாவி, பார்க்குமட்டே - தேடுமளவும், எட்டஎட்ட [ஏ] செல்லும் - தூரத்தூரவே யகலும், அஃதே - அச் சொரூபமே, சுட்டு இறந்தால் - (தனக்கந்நியமாக ஒன்றையும்) சுட்டியறியாமல் (மனத்தை யசைவற) நிறுத்தினால், தான் ஆகி தோன்றும் - அங்ஙனம் நிறுத்தினவருடைய சொரூபமாகி விளங்கும். எ-று.

பொ-ரை. அளவின்றி எவ்விடத்தும் பரிபூரணமாய் விளங்கா நின்ற மூத்தானந்தனென்று கூறுகின்ற நாமமுடைய நமது குருமூர்த்தி யினது ஆனந்த சொரூபமானது விடயம்போலத் தனக்கு அந்நியமா யிருப்பதாகக் கருதி மனத்தால் தாவித் தாவித் தேடுமளவுந் தூரத்தூர வேயகலும் அச்சொரூபமே தனக்கந்நியமாக ஒன்றையுஞ் சுட்டாமல் மனத்தை யசைவற நிறுத்தினால் அங்ஙனம் நிறுத்தினவருடைய சொரூபமாகி விளங்கும் எ-று.

பிரித்துக் கூட்டப்பட்ட ஏகாரந் தேற்றப் பொருளது

க-ரை. பரம்பொருள் சுட்டுணர்வற்ற விடத்துத் தானாகி விளங் கும். எ-ம். (ள)

[விருத்தம்]

கூஉ. விடயமொன்றே பொன்னெனவும் பணியெனவு மிரு திறனா விளங்கி நின் றே

யடைமுனதொன் றுடன்மெய்யும் பினதுபொய்யும்
பலவுமே யாவ போல க்
கடமுதலா யபலாகிப் பலவாகி யஞ்ஞ நக்குங் காணும்
வத் து
வடிவில்சற்சிற் சுகமேக வனனியமாய் முத்தருக்கு
வயங்கு மாதோ. (உ)

இ-ள். விடயம் ஒன்றே - ஒரே விஷயம், பொன்எனவும் பொன்னென்றும், பணி எனவும் - [கடகமுதலிய] ஆபரணமென்றும்- இருதிறன் ஆய் விளங்கிநிற்கு - இரண்டு விதமாக விளங்கிநின்று, முன்அடைஅது - (அவற்றுள்) முன்னர்ப்பொருந்திய பொன்னானது, ஒன்றுடன் மெய்யும் - ஏகமுஞ் சத்தியமும், பின் (அடை) அது - பின்னர்ப் பொருந்திய ஆபரணமானது, பலவும் பொயயும் - நானாவும் அசத்தியமும், ஆவபோல - ஆவனபோல, வத்து (ஒன்றே) - பிரஹ்மம் ஒன்றுதானே, அஞ்ஞநக்கு - அஞ்ஞானிகளுக்கு, கடமுதல ஆய் - (நாம ரூபமே சொரூபமாயுள்ள) குடமுதலிய பிரபஞ்ச பதார்த்தங்களாய், பலவாகி - நானாவாகி, அயல் ஆகி - தமக்கு அந்நியமாய், காணும் - விளங்குதும், முத்தருக்கு - ஜீவன் முத்தர்களாகிய ஞானிகளுக்கு, வடிவுஇல் - நாம ரூபமில்லாத, சற்சிற் சுகம் (ஆய்) - சச்சிதானந்த கனமாய், ஏகம் (ஆய்) - அகண்டைகரசமாய், அனனியமாய் - தமது சொரூபமாய், வயங்கும் - விளங்கும். எ-று.

பொ-ரை. ஒரே விஷயம்பொன்னென்றும கடமுதலிய ஆபரணமென்றும் இரண்டு விதமாக விளங்கிநின்று அவற்றுள் முன்னர்ப் பொருந்திய பொன்னானது ஏகமுஞ் சத்தியமும் பின்னர்ப் பொருந்திய ஆபரணமானது நானாவும் அசத்தியமும் ஆவனபோலப் பிரஹ்மம் ஒன்றுதானே அஞ்ஞானிகளுக்கு நாமரூபமுமே சொரூபமாயுள்ள குடமுதலிய பிரபஞ்சபதார்த்தங்களாய் நானாவாய்த் தமது அந்நியமாய்

விளங்கும் ஜீவன்முத்தாகளாகிய ஞானிகளுக்கு நாமரூபமில்லாத சச்சி தானந்தகனமாய் அகண்டைகரசமாய்த் தமது சொரூபமாய் விளங் கும். எ-று.

ஒகரே என்பதும் அடை என்பதும் பின்னரும கூட்டப்பட் டன. ஆய் என்பது பிறவிடங்களிலுஞ் சென்றியைந்தது.

க—ரை. ஒரே பிரஹ்மம் ஞானிகளுக்குத் தமது சொரூபமாக யாகவும் அஞ்ஞானிகளுககுப் பிரபஞ்சமாகவும் விளங்கும் எ-ம். (உ)

[வெண்பா]

௬௩. எள்ளுக்கு ளெண்ணெயொப்ப வெங்கு நிறைந் தென்
சொருப
முள்ளுக்கு முள்ளா யொளிர்தலாற் —கள்ள ப்
புலவே டுவர்திருட்டும் போயினவோ ரைந் து
தலையுலகப் பேய்ப்பயமுந் தான் [௩]

இ-ள். எள்ளுக்குள் எண்ணெய் ஒப்ப -எள்ளினடத்து [நிறைந் திருக்கின்ற] எண்ணெயைப்போல, எங்கும் நிறைந்து - (பிரபஞ்ச மும் அதற்கப்பாலுமாகிய) எவ்விடத்தும் பரிபூரணமாய், என் சொரு பம் - [சச்சிதானந்த கனமாகிய] என்னுடைய சொரூபமானது, உள் ளுக்கும் உள்ளாய் - சூக்கும வஸ்துக்களுக்குஞ் சூக்குமமாய், ஒளிர்த லால் - பிரகாசத்தலினால், கள்ளப்புலவேடுவர் — வஞ்சகத்தையுடைய பஞ்சேந்திரியங்களாகிய வேடர்களாலுண்டாகிய, திருட்டும் - களவும், ஓர் ஐந்து தலை - (சத்தாதி விஷயங்களைந்தையும்) ஐந்தலையாகவுடைய உலகப்பேய்ப் பயமும் — பிரபஞ்சமாகிய பேயினாலுண்டாகிய அச்ச மும், போயின - தொலைந்துவிட்டன. எ—று.

பொ—ரை. எள்ளினடத்து நிறைந்திருக்கின்ற எண்ணெயைப் போலப் பிரபஞ்சமும் அதற்கப்பாலுமாகிய எவ்விடத்தும் நிறைந்து சச்சிதானந்த கனமாகிய என்னுடைய சொரூபமானது சூக்கும வஸ்

தக்களுக்குஞ் சூக்குமமாய்ப் பிரகாசித்தலினுல் வஞ்சகத்தையுடைய பஞ்சேந்திரியங்களாகிய வேடர்களாலுண்டாகிய களவுஞ் சத்தாதி விஷயங்களெல்லாவற்றையும் ஐந்து தலையாகவுடைய பிரபஞ்சமாகிய பேயி ஞலுண்டாகிய அச்சமுந் தொலைந்துவிட்டன எ—று.

தா—ம். அஞ்ஞான தசையிற் புத்தியைத் தனது உண்மை நிலை யில் நிற்கவொட்டாமல் ஞானேந்திரியங்கள் தம் வசமாக்கி வெளியே இழுத்து விஷயகாரமாக்கிற்றென்பார் "கள்ளம்புலவேடுவர் திருட்டு" என்றும் அப்புத்தி சத்தாதி விஷயங்களைச் சுகசாதனமெனக் கருதி மயங்கிற்றென்பார் "ஐந்து தலை யுலகப்பேய்ப் பயம்" எனவும் ஞான தசையில் அப்புத்தி பூரணத்தன்மையை அடைய எவ்விடத்தும் பரிபூ ரணமாகிய பரம்பொருளே விளங்குதலால் இந்திரியங்கள் புத்தியைத் தன் வசமாக்கி வெளிப்படுத்தி விஷயாகாரமடைவிக்காது என்பார். "திரு ட்டும் போயின" என்றும் விஷயங்கள் மித்தையாகத் தோற்றுதலால் அவற்றில் வைத்திருந்த சுகசாதனத் தன்மையாகிய மயக்கம் புத்திக்கு நீங்கிற்றென்பார். "ஐந்து தலை யுலகப்பேய்ப் பயமும் போயின' என் றுங்கூறினர்.

க—ணா. எவ்விடத்தும் பரம்பொருளே விளங்குதலால் இந்திரி யச்சேட்டையும் விஷயங்களில் வைத்திருந்த சுகசாதனத் தன்மையா கிய மயக்கமுந் தொலைந்தன. எ—று. ரு

கூச. விடயமென்று வேறாய் விளங்கிடுமே னில்லா
தடைய வெழுந்தோடு மங்கே—யிடையீடற்
றெங்குமொரு தானே யிலங்கிடிவ் வேளைமன
மெங்கே யெழுந்தோடு மே (௧)

இ—ள். விடயம் என்று - (இது சத்தம் இது பரிசம் இது உரு வம் இது இரசம் இது கந்தம்) என்று விடயங்கள், வேறாய் விளங்கி டுமேல் - (தனக்கு) அயலாக விளங்குமானல், நில்லாது —(தனாதுணை

வம நிலையில்) நிற்காமல், அங்கே அடைய எழுந்து ஓடும்- அவ்விடயங் களினடத்துக் கூடுதற்கு எழுந்து செல்லும், இடைஈடு அற்று - இடையீடின்றி, எங்கும் ஒருதானே - எவ்விடத்தும் ஒப்பற்ற சச்சி தானந்த வடிவப் பிரஹமமாகிய தனது சொரூபமே, இலங்கிடின்—பிர காசிக்கில், இவ்வேளை மனம - இத்தன்மையுடைய ஞானகாலத்தில் (சத்துவமாகச் சேடித்த) மனமானது, எங்கே எழுந்து ஓடும் - (தனது நிலையில் நிற்பதன்றி) எவ்விடத்துக்கு எழுந்து செல்லும் (ஓரிடத் தஞ் செல்லாது செல்லுதற்கிடமின்மையால்). எ—று.

பொ—ரை. இது சத்தம் இது பரிசம் இது உருவம் இது இர சம் இது கந்தம் என்ற விடயங்கள் தனக்கு அயலாக விளங்குமானால் தனதுண்மை நிலையில் நிற்காமல் அவ்விடயங்களினிடத்துக்கூடுதற்கு எழுந்து செல்லும் இடையீடின்றி எவ்விடத்தும் ஒப்பற்ற சச்சிதா னந்த வடிவப் பிரஹமமாகிய தனது சொரூபமே பிரகாசிக்கல் இத் தன்மையுடைய ஞானகாலத்திற் சத்துவமாகச் சேடித்த மனது தனது நிலையில் நிற்பதன்றி ஓரிடத்தஞ்செல்லாது செல்லுதற்கிடமின்மை யால். எ—று.

க—ரை. ஞானகாலத்தில் எவ்விடத்துஞ் சச்சிதானந்த வடிவப் பிரஹம சொரூபமே விளங்குதலால் மனது விஷயகாரமடையாது. எ—ம். ௯

சு௧. கட்டினுநில் லாதுபொருள் கண்டருந்த வோடுமன ஞ்
சுட்டிறந்த போதெதனைத் துய்க்குமே மனிற்—கெட்
டொந்து
மோகாமற் போயின்ப முண்ணுமா லீதும ன
மாகா தறிவென்ப ரால் (௩)

இ—ள். கட்டினும் நில்லாது - (அஞ்ஞான காலத்தில் விடயங் களிற் செல்லவொட்டாது) அடக்கினும் அடங்காமல், பொருள்

கண்டு - சத்தாதி விஷயங்களைப் பார்த்து, அருந்த ஓடும்-(அவற்றை) அநுபவிப்பதற்கு விரைந்து செல்லும், மனம் - அந்தக்கரணமானது, சுட்டு இறந்தபோது — [ஞானகாலத்தில் விஷயாகாரத்தைத் தரிக்கின்ற] சுட்டுணர்வு நீங்கியபோது, எதனைத்துய்க்கும் எனில் - எதையநுபவிக்குமென்றால், கெட்டு ஒழிந்தபோய் - தனதுருவமாகிய தூலத்தன்மை நாசமடைந்து, போகாமல் — அருவ (சூக்கும) மாய்ப் [பிரஹமத்தோடு பாலும் நீரும்போற் கலந்து நின்று], இன்பம் உண்ணும் - பிரஹமானந்தத்தை அநுபவிக்கும், ஈஃது மனம் ஆகாது-[பிரஹ்மானந்தஅநுபவத்திற்குரிய] இது மனமாகமாட்டாது, அறிவு என்பர் - [பின்னையோ] ஞானமென்று கூறுவர் பெரியோர். எ—று

பொ—ரை. அஞ்ஞானகாலத்தில் விடயங்களிற் செல்லவொட்டாதடக்கினும் அடங்காமல் சத்தாதி விஷயங்களைப்பார்த்து அவற்றை அநுபவிப்பதற்கு விரைந்து செல்லும் அந்தக்கரணமானது ஞானகாலத்தில் விஷயாகாரத்தைத் தரிக்கின்ற சுட்டுணர்வு நீங்கியபோது எதை அநுபவிக்குமென்றால் தனதுருவமாகிய தூலதன்மை நாசமடைந்து அருவமாய்ப் பிரஹமத்தோடு பாலும் நீரும்போற் கலந்து நின்று பிரஹ்மானந்தத்தை அநுபவிக்கும் பிரஹ்மானந்த அநுபவத்திற்குரிய இது மனமாகமாட்டாது பின்னையோ ஞானமென்று கூறுவர் பெரியோர். எ—று,

க—ரை. மனதுக்குச் சுட்டுணர்வு நீங்கிய காலத்திற் பிரஹமாநந்த அனுபூதியுளதாம். எ—ம். (௫)

சுசு. மனத்தே யனைத்துலகு மன்னியிருக் கு
மெனைத்தும் பிறவிடத்தி லில்லை—நினைப்பி ல்
சுழுத்தியின்க ணேதேனுந் தோன்றா மையினா ல்
விழுச்சுகமாந் தானன்றி வேறு (௬)

இ-ள். மனத்தே - மனத்தின்கண்ணே, அனைத்து உலகும் - [சடசேதனங்களாகிய] எல்லாப் பிரபஞ்சமும், மன்னியிருக்கும் - பொருந்தி நிற்கும், எனைத்தும - அற்பமும், பிற இடத்தில் - மனம் இருத்தலின் வேறாகியவிடத்தில், இல்லை, [இதனை உலகப் பிரசித்த அநுபவமாகிய ஏதுவாலுணர்த்துகின்றார்], நினைப்பு இல் - மனம் நசித்த, சுழுத்தியின்கண் - சுழுத்தியவஸ்தையில், விழுச்சுகம் ஆம் - மேலாகிய ஆனந்த மயமாகிய, தான் அன்றி - தனது சொரூபம் இருந்து விளங்குகின்றதே யல்லாமல், வேறு - [தனது சொரூபத்திற்கு] அந்நியமாக, ஏதேனும் - [இருவகைப் பிரபஞ்சங்களுள்) எந்தப் பிரபஞ்சமாவது, தோன்றாமையினால் - விளங்காமையால். எ—று.

பொ—ரை. மனத்தின்கண்ணே சடசேதனங்களாகிய எல்லாப் பிரபஞ்சமும் பொருந்தி நிற்கும் அற்பமும் மனம் இருத்தலிவேறாகிய விடத்திலில்லை. இதனை உலகப்பிரசித்த அநுபவமாகிய ஏதுவாலுணர்த்துகின்றார். மனம் நசித்தசுழுத்தியவஸ்தையில் மேலாகிய ஆனந்தமயமாகிய தனது சொரூபம் இருந்து விளங்குகின்றதே யல்லாமல் தனது சொரூபத்திற்கு அந்நியமாகிய இருவகைப் பிரபஞ்சங்களுள் எந்தப் பிரபஞ்சமும் விளங்காமையால், எ—று.

இங்கே "மனத்தேயனைத்துலகு மன்னியிருக்கும், என உலகுக்கு மனத்தை இடமாக்கினது, வேனிற்காட்பாதிரி பூக்கும்' என்றாற்போலக் காலப் பொருண்மை பற்றியென்க. அதாவது மனமுள்ள காலத்து உலகுண்டு எனப்பொருள்படும். பிறவிடத்தில் என்றதும் அஃது, இவையெல்லாம்' சுழுத்திபின் கணே ஏதேனுந் தோன்றாமையினால்' என்னும் ஏதுவால் நன்கு விளங்கும்.

எல்லா உலகும் மனோ கற்பிதம் என்பதற்கு உதாரணம்.

பஞ்சதசி கூடஸ்தவது சு-ல், உள் அல்லது வெளியிடத்தினை அல்லது எந்த சகல தேசங்களையும புத்திகற்பிக்கின்றதோ அந்தத்தேச

(இட) த்திலுள்ளது சாக்ஷியெனப்படுகின்றது, என்று கூறியிருக்கின்றது.

கருத்து. மனமிறந்த சுழுத்தியவஸ்தையில் அந்நியமொன்றுந் தோற்றாமையால் பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணம் மனமே. எ—ம். (௬)

௬௭. பார்த்தவிட மெல்லாம் பரந்தோன்ற வச்சொரு ப
தீர்த்தத்தி லாழ்ந்த திருத்தனுக்கும—போர்த்தவந் த
வானந்தத் தாதித்தன் முன்விளக்குப் போலவ னி
யீனமுறு மாவிலங்கா தே (௭)

இ-ள். பார்த்த இடம் எல்லாம் - நோக்கிய இடங்களெங்கும், பரம் தோன்ற - பிரஹ்மமாகிய தனது சொரூபம் விளங்குதலால், அச்சொரூப தீர்த்தத்தில் - அந்தப் பிரஹ்ம சொரூபமாகிய வெள்ளத்தில், ஆழ்ந்ததிருத்தனுக்கு - மூழ்கிய ஜீவன் முக்தனுக்கு, ஆதித்தன் முன் - சூரியனது பிரகாசத்தின்கண், விளக்குப்போல - [வைக்கப்பட்ட] தீபத்தினது பிரகாசம் [கெடுதல்] போல, அவனி - பிரபஞ்சத்தின் [சத்தியத்தன்மை விளக்கமானது], போர்த்த அந்த ஆனந்தத்து - [தனக்குள்ளிலும் வெளியிலும்] வியாபித்துப் பிரகாசிக்கின்ற சச்சிதானந்த விளக்கத்தால், ஈனம் உறும் - கெட்டுப்போம், இலங்காது - விளங்கமாட்டாது. எ—று.

பொ—ரை. நோக்கிய இடங்களெங்கும் பிரஹ்மமாகிய தனது சொரூபம் விளங்குதலால் அந்தப் பிரஹ்ம சொரூபமாகிய வெள்ளத்துள் மூழ்கிய ஜீவன் முத்தனுக்குச் சூரியனது பிரகாசத்தின்கண் வைக்கப்பட்ட தீபத்தினது பிரகாசம் கெடுதல்போலப் பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மை விளக்கமானது தனக்குள்ளிலும் வெளியிலும் வியாபித்துப் பிரகாசிக்கின்ற சச்சிதானந்த விளக்கத்தாற் கெட்டுப்போம் விளங்கமாட்டாது. எ—று.

ஆதித்தன் விளக்கு என்றது அவற்றிற் றரிக,

இவ்வனம் கூறியது சொரூப சமாதியின்றிய காலத்துள்ள சக சாதுபூதி யென்றறிக.

இதனால் இருட்காலத்திற் பிரகாசிக்கின்ற விளக்குச் சூரியப்பிர காசத்தில் வைக்கப்பட்டபொழுது தனது பிரகாசமாகிய சத்தி கெட்டுத்தோன்றுதல்போல அஞ்ஞானகாலத்தில் சத்தியத்தன்மை யாகிய பிரகாசத்தோடு விளங்கிய சகத்து ஞானகாலத்தில் பிரஹ்மப் பிரகாசத்துள் காணப்படும்பொழுது அச்சத்தியத் தன்மையாகிய பிரகாசங் கெட்டு மித்தையாகக் காணப்படுமெனவறிக.

க—ணா. பிரஹ்மானந்தத்தில் மூழ்கிய ஞானிகளுக்குப் பிரபஞ் சஞ் சத்தியமாகத் தோற்றாது எ-ம். (எ)

கஅ. உள்ளும் புறமு மொருதன் னியல்பறிந்தார்க்
கெள்ளும் பொருளொன் றிருக்குமோ—மெள்ள
வெழுந்திரவி தோன்றி னிலகலகின் றோற்
றொழிந்தபோ மாறுபோ லும். (அ)

இ-ள். உள்ளும் புறமும் - அகத்திலும் புறத்திலும், ஒருதன் இயல்பு – அகண்டைகரசமாயுள்ள பிரஹ்மமாகிய தனது சுபாவத்தை அறிந்தார்கு அபரோக்ஷமாக அநுபவித்த ஞானிகளுக்கு, எள்ளும் பொருள் ஒன்று (உம்) - (முன் அப்பியாச காலத்திற்போலத் தமது சொரூபமல்லவென்று) இகழத்தக்க பிரபஞ்சப் பொருள் ஒன்றாயி னும், இருக்குமோ - இருக்காது [எதுபோலெனின்], மெள்ள – சாவதானமாக, இரவி எழுந்து தோன்றில் - சூரியன் உதயமாய்ப் பிர காசித்தால், இலகு அலகின் தோற்றம் - முன் இருட்காலத்திற்] பிர காசித்த மின்மினிப்புழுவினுடைய விளக்கமானது, ஒழிந்துபோம் ஆறுபோலும் - நீங்கிவிடுமுறைமை போலும். எ—று.

பொ-ரை. அகத்திலும் புறத்திலும் அகண்டாகாசமாயுள்ள பிரஹ்மமாகிய தனது சுபாவத்தை அபரோக்ஷமாக அநுபவித்த ஞானிகளுக்கு முன் அப்பியாச காலத்திற் போலத் தமது சொரூபமல்லவென்று இகழத்தக்க பிரபஞ்சப் பொருள் ஒன்றாயினுமிருக்காது. எதுபோலெனில் சாவதானமாகச் சூரியன் உதயமாய்ப் பிரகாசித்தால் முன் இருட்காலத்திற் பிரகாசித்த மின்மினிப் புழுவினுடைய விளக்கமானது நீங்கி விடுமுறைபோலும். எ—று.

ஒன்றும் என்பதின் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது,

ஞானிகட்குப் பேதத் தோற்றமில்லை யென்பதற் குதாரணம்-

திருவருட்பயன்

" உள்ளும் புறம்பு மொரு தன்மைக் காட்சியருக்
கெள்ளுந் திற மேதுமில் "

எனவும் கூறியிருத்தல் காண்க.

ஞானிகட்குப் பேதத்தோற்றமில்லை யென்பதற்கு உதாரணம், ஒழிவிலொடுக்கம்.' கூரிருளின் மின்மினியின் கூட்டம்போல் வாழ் சகத்தை, யாரறிவாரந்த வறி வுதயஞ் சூரியனகால்". எனவும் இதனகீழ்த்திருவருட் பயன செய்யுள் எழுதவேண்டியது.

க-ரை- ஞானிகள் திருஷ்டிகதுப் பிரஹ்மத்திற் கந்நியமாக யாதொரு பொருளுந் தோன்றாது. எ-ம். (அ)

சுக. பாலொடுதே னுங்கலந்த பண்பாம் பிறப்பொழித் து
மேலான முத்திதரு மெய்யறிவு—மேலையன் றி
யிம்மையினு மின்பமே நல்கு திருவிகற் ப
வம்மைச் சமாதியுமுற் றால் (க)

இ-ள். பிறப்பு ஒழித்து - தக்காரணமாகிய சனனமரணத்தை நீக்கி, மேலான முத்திதரும் - மாட்சிமை தங்கிய மோக்ஷத்தைக்

கொடுக்கின்ற, மெய் அறிவும் - பிரஹ்ம ஞானமும், மேல அன்றி - [அந்தப் பிரஹ்ம ஞானத்தா லடைதற்குரிய] விதேக முத்தியின் மாத்திரமல்லாமல், இம்மையிலும் - இச் சீவன் முத்தித்தசையிலும், இன்பம் — நல்கும் — பிரஹ்மானந்தத்தைக் — கொடுக்கின்ற, அம்மை — நிருவிகற்பசமாதியும் — அழகிய நிருவிகற்பசமாதியும் உற்றால் - [ஒரு ஞானிக்கு] அடையப்படுமோனால் [அவ்வடைவு], பாலொடு — பசியுடைய ஒருவனுக்கு அப்பசி நிவர்த்திக்காகப் பருகப்பட்ட] க்ஷீரத்துடன், தேனும் - [தித்திப்பினையுடைய] தேனும், கலந்த பண்பு ஆம் - கூடின தன்மை யொப்பாம். எ-று.

பொ—ரை. துக்காரணமாகிய சனனமரணத்தை நீக்கி மாட்சி மைதங்கிய மோக்ஷத்தைக் கொடுக்கின்ற பிரஹ்ம ஞானமும் அந்தப் பிரஹ்ம ஞானத்தாலடையத்தக்க விதேகமுத்தியின் மாத்திரமல்லாமல் இச்சீவன் முத்தித்தசையிலும் பிரஹ்மானந்தத்தைக் கொடுக்கின்ற அழகிய நிருவிகற்பசமாதியும் ஒரு ஞானிக்கு அடையப்படுமோனால் அவ்வடைவு பசியுடையவனாகிய ஒருவனுக்கு அப்பசி நிவிர்த்திக்காகப் பருகப்பட்ட க்ஷீரத்துடன் தித்திப்பினையுடைய தேனும் கூடின தன்மை யொப்பாம். எ—று.

க—ரை. ஒரு ஞானிக்குப் பிரஹ்ம ஞானத்தோடு நிருவிகற்பசமாதியுங்கிடைத்தால் ஒருவனுக்குப் பருகக் கிடைத்த பாலுடன் தேனுங் கூடின தன்மைபோலும். எ-ம். (க)

எ௰. மண்ணு திகளான் மறைத்தானைத் துச்சுடினும்
விண்ணினுக் கூ றில்லா விதநிகர்ப்ப—வெண்ணகமுன்
னெப்பொருள்கள் யாவை யியற்றுகினு மென்வடிவா
மெய்ப்பொருளுக் கில்லை மிகை. [கூ௰]

இ-ள். மண்ஆதிகளால் - பிருதிவி அப்பிதேயு என்னும் மூன்று பூதங்களால், மறைத்து நனைத்து சுடினும் - [முறையே] மறையச் செய்யினும் ஈரமாக்கினும் சுடினும், விண்ணினுக்கு - ஆகாயத்திற்கு, ஊறுஇல்லாவிதம் நிகர்ப்ப - யாதொரு தீங்கும் அடையாத விதத்தைப்போல, என் அகம் முன் - சங்கற்பவியாபார முடைய மனமுதலிய, எப்பொருள்கள் - எந்தக்கருவிகள் யாவை இயற்றினும் - தத்தமக்குரிய எந்தவெந்த வியாபாரங்களைச் செய்யினும், என் வடிவு ஆம் - எனது சொரூபமாகிய, மெய்ப்பொருளுக்கு - சச்சிதானந்தத்திற்கு, மிகை இல்லை - யாதொரு கேடுமில்லை. எ-று.

பிருதிவி அப்பு தேயு என்னும் மூன்று பூதங்களாலும் முறையே மறையச் செய்தாலும் ஈரமாக்கினாலுஞ் சுட்டாலும் ஆகாயத்திற்கு யாதொரு தீங்கும் அடையாத விதத்தைப்போலச் சங்கற்ப வியாபார முடைய மனமுதலிய எந்தவெந்தக் கருவிகள் தத்தமக்குரிய எந்த வெந்த வியாபாரங்களைச் செய்யினும் எனது சொரூபமாகிய சச்சிதானந்தத்திற்கு யாதொரு கேடுமில்லை. எ-று.

க—ணா. பிருதிவியாதி பூதங்களின் வியாபாரங்களால் ஆகாயங் கேடடையாததுபோல மன முதலிய கருவிகளின் வியாபாரங்களால் சச்சிதானந்த வடிவமாகிய ஆன்மங் கேடடையாது. எ-ம் (௧௰)

௭௧. பந்தமுற்ற வந்நாளும் பாசமற்ற விந்நாளு ஞ்
சிந்தை மயங்கித் தெளிந்தசல்லான்—முந் த
விருந்தவகன் றெய்தலய வின்மையினுன் முத் தி
பொருந்தல் பொருந்தாமை பொய் (௧௧)

இ-ள். பந்தம் உற்ற - [சனன மரண சமுசாரத்திற்] கட்டுப்பட்டிருந்த, அந்நாளும் — அக்காலத்திலும், பாசம் அற்ற இந்நாளும் - அக்கட்டுநீங்கிய இக்காலத்திலும், சிந்தைமயங்கி - மனமானது [இல்லத்தையுள்ளதாகவும் உள்ளத்தை இல்லதாகவுங் கருதி] மயக்கத்தை

யடைந்ததும், தெளிந்தது அல்லால் - இல்லதை இல்லாதாகவும் உள்ளதை உள்ளதாகவுமறிந்து] தெளிவை யடைந்தது மல்லாமல், முந்த இருந்த - அஞ்ஞான காலத்திலிருந்த வஸ்துக்கள், அகன்று — நீங்க, அயல்எய்தல் - அவற்றிற்கந்நியமாகிய வஸ்துக்கள் [ஞானகாலத்தில் வந்து] சார்தல், இன்மையினல் - இல்லாமையால். முத்தி - மோக்ஷமானது, பொருந்தாமை - [முன்னாள்] அடையப்படாமையும், பொருந்தல் [இந்நாள்] அடையப்படாமையும், பொய் - அசத்தியமாம். எ-று.

பொ-ரை. சனனமரண சமுசாரத்திற் கட்டுப்பட்டிருந்த அக்காலத்திலும் அக்கட்டு நீங்கிய இக்காலத்திலும் மனமானது இல்லதை யுள்ளதாகவும் உள்ளதை யில்லாதாகவும் கருதி மயக்கத்தை யடைந்த யடைந்ததும் இல்லதையில்லாதாகவும் உள்ளதை உள்ளதாகவுமறிந்து தெளிவை யடைந்ததுமல்லாமல் அஞ்ஞான காலத்திலிருந்த வஸ்துக்கள் நீங்க அவற்றிற்கந்நியமாகிய வஸ்துக்கள் ஞானகாலத்தில் வந்து சார்தலில்லாமையால் மோக்ஷமானது முன்னாள் அடையப்படாமையும் இந்நாள் அடையப்பட்டமையும் அசத்தியமாம். எ-று.

அகன்று என்பது செயவெனச்சத்திரிபு. இருந்த என்பது அஃறிணைப்பன்மை வினையாலணையும் பெயர்.

க-ரை. எக்காலத்திலும் ஒரு பொருளேயிருத்தலால் மனத்தின் மனத்தினது மயக்கத்தையுந் தெளிவையுந் தவிர மோக்ஷத்தினது அடையாமையும் அடைவும அசத்தியமாம். எ-ம். (௧௧)

௭௨, ஊறுபடா வான்றன்பா லுற்ற கடாதிகளா
ற் கூறுபட்டாற் போன்றிருந்த கொள்கைபோ—மாறுபடா
ப் பூரணா னென்னிடத்தாம் பொய்யுடல மாதிகளான்
மாரணவீ றுற்ற வகை (௧௨)

இ-ள். மாறுபடா - விகாரமற்ற, பூரணநான் — கால தேச வஸ்துக்களா லளவுபடாததாயுள்ள பிரஹ்ம சொருபமாகிய யான், என் இடத்து ஆம் - என்னிடத்து [அத்தியஸ்தம்] ஆகிய, பொய் உடலம் ஆதிகளால் - வியாவகாரிக தேக முதலியவற்றின் அகந்தாபிமானத்தால், மாரண ஈறு - [அவற்றிற்குளவாகா நின்ற பிறத்தல் முதல்| இறத்தல் இறுதியாகிய [ஷட்பாவ விகாரங்களையும்], உற்றவகை - [அடையாதிருந்தும்] அடைந்ததுபோன்றவிதமானது, ஊறுபடா - [எந்த வஸ்துவினாலும்] பரிசிக்கப்படாத, வான் - [எகமும் வியாபகமுமாகிய] ஆகாயமானது, தன்பால் - தன்னிடத்து, உற்றகடாதிகளால் - பொருந்தியிருக்கின்ற குட முதலியவைகளின் பிரிவால், ஊறுபட்டால் போன்று - [தான் பிரிவுபடாதிருந்தும் கடாகாயம் மடாகாயம் குதிராகாயம் எனப்] பிரிவுபட்டதைப் போல, இருந்த கொள்கை - [பலவித நாமரூபங்களா] யிருந்த தன்மைக்கு, நேர் — சமானமாம் எ-று.

பொ—ரை. விகாரமற்ற தேசகால வஸ்துக்களாலளவுபடாததாயுள்ள பிரஹ்ம சொருபமாகிய நான் என்னிடத்து அத்தியஸ்தமாகிய வியாவகாரிகதேக முதலியவற்றின் அகந்தாபிமானத்தால் அவற்றிற்குளவாகா நின்ற பிறத்தல் முதல் இறத்த லிறுதியாகிய அறுவகை விகாரங்களையும் அடையாதிருந்தும் அடைந்தது போன்றிருந்த தன்மையானது எந்த வஸ்துவினாலும் பரிசிக்கப்படாத எகமும் வியாபகமுமாகிய ஆகாயமானது தன்னிடத்துப் பொருந்தியிருக்கின்ற குட முதலியவைகளின் பிரிவால்தான் பிரிவுபடாதிருந்தும் கடாகாயம் மடாகாயம் குதிராகாயம் எனப்பிரிவுபட்டதைப்போலப் பலவித நாமரூபங்களாய் இருந்த தன்மைக்குச் சமானமாம். எ—று.

ஆகாயம் கடாதி சம்பந்தத்தாற் கூறுபட்டதன்று அங்ஙனமாயி னும் கூறுபட்டுத் தோன்றுதல் மயக்கவுணர்விற்காதலால் அது மித்தை யென்பார் "கூறுபட்டாற்போன்றிருந்த கொள்கை" என உவமவுருபு கொடுத்துப் போலியாக்கினர். அவ்வாறே உவமேயத்தும் நிருவிகார ஈசதன்னியம் தேகாதிகளின் சம்பந்தத்தால் நான் பிறந்தேன் இருந் தேன் என்பன முதலியவாக விவகரிக்கப்படுதலால் விகாரமடைந்தது போலத்தோன்றியது மித்தையெனக் கண்டுகொள்க.

க-ரை. நிருவிகாரப் பிரஹ்ம சொரூபம் தேகாதிகளின் சம்பந் தத்தால் விகாரமடைந்ததுபோலத் தோற்றியது ஏகமாகிய ஆகாயம் கடாதி சம்பந்தத்தால் நானாவாகியதுபோலத் தோற்றியதற்கு ஒப்பாக மித்தை. எ—ம். (௧௨)

௭௩. பொன்னிற் பணியிருத்தல் பொய்போன்மெய்ப் போதவின்ப
வென்னிற் சகமு மிருக்குகவே—மன்னுந்
தனக்குப் பணியாற் றவறேற் சகத்தா
லெனக்கு மிகையுற் றிடும் (௧௩)

இ-ள். பொன்னில் – பொன்னிடத்தில், பொய்பணி – மித் தையாகிய ஆபரணம், இருத்தல்போல் – [கற்பிததாதான்மிய சம்பந் தத்தால்] இருத்தலொப்பாக, மெய்போத இன்ப என்னில் - சச்சிதா னந்த வடிவமாயிருக்கின்ற என்னிடத்தில், சகமும் - [மித்தையாகிய தேகாதி]ப்பிரபஞ்சங்களும், இருக்குக - [கற்பிததாதான்மிய சம்பந் தத்தால்] இருக்குக. மன்னும் தனக்கு - நிலைபெற்ற பொன்னுக்கு, பணியால்தவறேல் - அவ்வாபரணத்தினாலே கேடுண்டாயின், சகத் தால் - இத்தேகாதிப் பிரபஞ்சங்களினால், எனக்கு மிகையுற்றிடும் - பிரஹ்மசொரூபமாகிய எனக்குங் கேடுண்டாகும். எ—று.

பொ—ளா. பொன்னினிடத்தில் மித்தையாகிய ஆபாணம் கற்பிததாதான்மிய சம்பந்தத்தால் இருத்தல்போலச் சச்சிதானந்த வடிவமாயிருக்கின்ற என்னிடத்தில் மித்தையாகிய தேகாதிப் பிரபஞ்சங்களும் கற்பிததாதான்மிய சம்பந்தத்தால் இருக்குக நிலைபெற்ற பொன்னுக்கு அவ்வாபரணத்தினாலே கேடுண்டாயின் இத்தேகாதிப் பிரபஞ்சங்களினாலே பிரஹ்ம சொரூபமாகிய எனக்குங் கேடுண்டாகும். எ—று.

க-ரை. பொன் தன்னிடத்திற் கற்பிதமாயுள்ள பணியாற் சேடடையாததுபோலப் பிரஹ்ம சைதன்னியம் தன்னிடத்துக் கற்பிதமாயுள்ள சகத்தாற் சேடடையாதது. எ—ம். (௧௫)

[கட்டளைக் கலித்துறை]

எ௬. கன்னிக் கதலியை நார்கழிக் குந்தொறுங் கண்டகண் போ
லன்னியம் யாவும்பொய் யாதல்கண் டெல்லா மகற்றி விட்டுப்
பின்னறி யப்பொரு ளில்லா விடத்திற் பிறங்குசித் தே
மன்னிய வான்ம வடிவாங்கண் டார்முத்தி வாழ்வினரே (௧௬)

இ—ன். கன்னிக்கதலியை - ஈனுதவாழையில் [அதனுள் தண்டெடுக்க விரும்பினேன்], நார்கழிக்குந்தொறும் - அதிலுள்ள மட்டைகளை ஒவ்வொன்றாக உரித்து நீக்குந்தோறும், கண்ட கண்போல் - [இது தண்டன்று இது தண்டன்று, என அறிந்து சென்று பின்னர் எல்லா மட்டை கட்குமுள்ளேயுள்ள குருத்தை விசிக்குங்கால் அதனுள் தண்டின்மையை] அறிந்த கண்ணையொப்பாக [த்தேகாதிகளில் ஆன்மாவாகிய தன்னையறியவிரும்பினேன்], யாவும் - [காணப்படுவன] அனைத்தும், அன்னியம் - தனக்கு வேறு என்பதையும், பொய் ஆதல் - [ஆன்மாவாகிய

தனக்கு வேருகியவை அனன்மாவாகலின் அவை] மித்தையாதலேயும், கண்டு— [குரு சாஸ்திரங்களால்] அறிந்து, எல்லாம் — [தேகம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி சித்தம் அகங்காரம் அஞ்ஞானம் ஆகிய] அனைத்தையும், அகற்றிவிட்டு - [தன்னுலறியப்படுதலின் இது நானல்ல இது நானல்லவென்று] நேதிபண்ணி, பின் - [இவ்வாறு அனைத்தையும் நேதிபண்ணிய] பின்னர், அறிய- எதிரிட்டறிதற்கு, பொருள் இல்லா இடத்தில் - அனன்ம வஸ்துக்களில்லாமலிறந்தவிடத்தில், பிறங்கு ஒப்பத்தே - [சுயஞ்சோதியாய்த் தானுய்ப்] பிரகாசிக்கின்ற அறிவே, பன்னிய - நித்தியமாகிய, ஆன்ம வடிவு ஆம்-தனது வாஸ்தவ சொரூபமாம், கண்டார்-இதனை அபரோக்ஷமாக அறிந்தவர் யாவரோ அவர், முத்திவாழ்வினர் — மோக்ஷமாகிய செல்வத்தையுடையவராவர். எ—று.

பொ—ளை. ஈருள்ளவாழையில் அதனுள் தண்டெக்க விரும்பினேன அதிலுள்ள பட்டைகளை ஒவ்வொன்றாக உரித்து நீக்குந்தோறும் இது தண்டன்று இது தண்டன்று எனவறிந்துசென்று பின்னர் எல்லாமட்டைகட்கு முன்னேயுள்ள குருத்தை விரிக்குங்கால் அதனுள் தண்டின்மையை அறிந்த கண்ணைப்போலத் தேகாதிகளில் ஆன்மாவாகிய தன்னையறிய விரும்பினேன் காணப்படுவனவனைத்தும் தனக்கு வேறு என்பதையும் ஆன்மாவாகிய தனக்கு வேருகியவை அனன்மாவாகலின் அவை மித்தையாதலேயுங் குரு சாஸ்திரங்களாலறிந்து தேகம் இந்திரியம் பிராணன் மனம் புத்தி சித்தம் அகங்காரம் அஞ்ஞானம் ஆகிய அனைத்தையும் தன்னுலறியப்படுதலின் இது நானல்ல இது நானல்லவென்று நேதிபண்ணி இவ்வாறு அனைத்தையும் நேதிபண்ணியபின்னர் எதிரிட்டறிதற்கு அனன்மவஸ்துக்களில்லாமல் இறந்தவிடத்திற் சுயஞ்சோதியாய்த் தானுய்ப் பிரகாசிக்கின்ற அறிவே நித்தியமாகிய தனது யதார்த்த சொரூபமாம் இதனை அபரோக்ஷமாகவ

திந்தவர் யாவரோ அவர் மோக்ஷமாகிய செல்வத்தையுடையவராவர். எ—று.

க—ஙா. ஆன்மாநுபவம் தனுன்ம வஸ்துக்களின் எதிரீடிறந்த காலத்துளதாம். எ—ம். (௪௫)

[விருத்தம்]

௪௬. ககனங் காவற் காரனெனிற் கள்ள னிருக்க விடமுண்டோ
வகமே ஞானிக் கெங்கணுமோ ரத்தி பாதி யின்புருவாய்த்
திகழு மந்த வகண்டபா தேசோ மயத்தி லனுதினமு
முகளுந் தன்மை யுடையமன மொழிந்தே போகு முருதன்றே (௪௬)

இ—ள். ககனம் - [சகல வஸ்துக்களுமிருத்தற் கிடமாகிய] ஆகாயம், காவற்காரன் எனில் — [போக்ஷேத்தைக் காக்கும்] காவலாளி என்ற சொல்லில், கள்ளன் இருக்க [உம்] இடம் உண்டோ — [அக்காவலாளிக்குத் தெரியாமல்] திருடன் [ஒளித்து] இருக்கவும் சென்று திருடவும்] அவகாசமிருக்குமோ [இராது அவகாசமே காவலாளியின சொரூபமாயிருத்தலின் அதுபோல], ஞானிக்கு — ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தை அபரோக்ஷமாகவறிந்த ஜீவன் முத்த] வித்துவானுக்கு, எங்கணும் - எவ்விடத்தும், ஓ - ஒப்பற்ற, அகமே—தனதுசொரூபமே, அத்திபாதி இன்பு உருவாய் - சச்சிதானந்த வடிவாய், திகழும் - பிரகாசிக்கும், அகண்டபர — சமமாயும் வியாபகமாயுமிருக்கின்ற, அந்த தேசோமயத்தில் - அப்பேரொளியில், அனுதினமும் உகளும் தன்மையுடைய மனம் — [விடயங்களைக்கண்டு] எப்பொழுதுந் தாவிச்செல்லுங் குணமுடைய நூலமனது, [முன்போல் ஜீவித்திருக்கவும் விடயங்களைக்கண்டு சென்று பற்றவும் இடமுண்டோ

இல்லை அனைத்துஞ் சச்சிதானந்த ஏகவடிவமாயிருத்தலின்], உருது- [ஆதலால்தான் ஜீவித்திருக்காமலும் விடயங்களைச்] சாராமலும், ஒழிந்து போகும் – கெட்டுப்போம். எ-று

பொ-ரை சகல வஸ்துக்களுமிருத்தற் கிடமாகிய ஆகாயம் பொக்கிஷத்தைக் காக்கும் காவலாளி யென்று சொல்லில் அக்காவலாளிக்குத் தெரியாமல் திருடன் ஒளித்திருக்கவும் சென்று திருடவும் அவகாசமிருக்குமோ இருக்காது அவகாசமே காவலாளியின் சொரூபமாயிருத்தலின் அதுபோல ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தை அபரோக்ஷமாக வறிந்த ஜீவன் முத்த வித்துவானுக்கு எவ்விடத்தும் ஒப்பற்ற தனது சொரூபமே சச்சிதானந்த வடிவாய்ப் பிரகாசிக்கும் ஏகமாயும் வியாபகமாயுமிருக்கின்ற அப்பேரொளியில் விடயங்களைக் கண்டு எப்பொழுதுந் தாவிச்செல்லுங் குணமுடைய தூலமனது முன்போற் சீவித்திருக்கவும் விடயங்களைக் கண்டு சென்று பற்றவும் இடமுண்டோ இல்லை அனைத்துஞ் சச்சிதானந்த ஏக வடிவமாயிருத்தலின் ஆதலால்தான் ஜீவித்திருக்காமலும் விடயங்களைச் சாராமலுங் கெட்டுப்போம். எ-று.

உருது என்பது முற்றெச்சம் இருக்கவும் என்பதின் விகாரத்தாற்றொக்க எச்சவும்மையால் சென்று திருடவும் என்பது வருவிக்கப்பட்டது உவமையன்றெழில்கள் பொருளுக்கும் வருவிக்கப்பட்டன.

க-வா. ஆகாயமாகிய காவலாளியே எங்குமிருத்தலால் திருடனது இருப்பு முதலியன கூடாமை போல ஞானிக்கு எங்குந் தனது சொரூபமாகிய அதிஷ்டானமே விளங்குதலால் அத்தியஸ்தமாகிய தூலமனத்தினது இருப்பு முதலியன கூடா. எ-ம். [கரு]

எசு. பிரஹ்மத் தாரோ பிதமுலக மிலையென் றறிந்து
முபாதியதாய்
மருவா ரத்த முள்ளமட்டும் வயங்கும் பொய்யா யதிட்
டானம்
பிரிவற் றிலங்கு பேற்றால்வெண் டேரோன் றறிந்த
பின்னுமங்நீர்த்
தெரிவு நீங்கா தென்னவெயி லுருப்பந் தீரா திருக்
கும்வரை (கசு)

இ—ள். வெண்டேர் என்று - [கானலினிடத்துச் சலப்பிராந்தியடைந்தவன் தோற்றுகின்ற இஃது நீரல்ல] கானலென்று, அறிந்த பின்னும் - [பிரத்தியக்ஷமாகக்] கண்ட பின்னரும், வெயில உருப்பம் - [ஜலத்தோற்றம் நசித்தற்குத் தடையாகிய] சூரியனுடைய வெப்பமானது, தீராது இருக்கும் வரை - நீங்காதுள்ளவளவும், அந்நீர்த் தெரிவு - அச்சலத்தோற்றம், நீங்காது என்ன - நசிக்காது விளங்குதல் போல, உலகம் — பிரபஞ்சமானது, பிரஹ்மத்து - [சச்சிதானந்த சொரூபமாகிய] பிரஹ்மத்தினிடத்து, ஆரோபிதம் - [அஞ்ஞானத்தாற்] கற்பிக்கப்பட்டது, இலை என்று - ஆதலால் பரமார்த்தமாக மலடிமகன் போல] அபாவமாமென்று, அறிந்தும் - [அபரோக்ஷமாகச் [சாக்ஷாத் கரிக்கப்படினும், உபாதியாய் - [இது சோபாதிக அத்தியாச மாகலின் சாக்ஷாத்கரித்தவுடனே தோற்றாது நசித்தற்குத்] தடையாய், மருவு - பொருந்தியிருக்கின்ற, ஆரத்தம் உள்ள மட்டும் - [பிராரத்த கன்மத்தின் காரியமாகிய] தூலசரீரமிருக்குமளவும், அதிட்டானம் - [கற்பிதப் பிரபஞ்சத்திற்கு அதிட்டானமாகிய] பிரஹ்ம சொரூபம், பிரிவு அற்று - வேற்றுமையின்றி[ப்பரிபூரணமாய்], இலங்கு பேற்றால் - விளங்குகின்ற இலாபத்தால்,

பொய்யாய் - பிராதி பாசிக (தோற்றமாத்திர) மாய், வயங்கும் - விளங்கும் - எ-று.

பொ-ரை. கானலினிடத்துச் சலப்பிராந்தி யடைந்தவன் தோற்றுகின்ற இஃது நீரல்ல கானலென்று பிரத்தியக்ஷமாகக் கண்ட பின்னரும் ஜலத்தோற்றம் நசித்தற்குத் தடையாகிய சூரிய வெப்பமானது நீங்காதுள்ளவளவும் அச்சலத்தோற்றம் நசிக்காது விளங்குதல்போலப் பிரபஞ்சமானது சச்சிதானந்த சொரூபமாகிய பிரஹ்மத்தினிடத்து அஞ்ஞானத்தாற் கற்பிக்கப்பட்டது ஆதலாற் பரமார்த்தமாக மலடிமகன்போல அபாவமென்று அபரோக்ஷமாகச் சாக்ஷாத் கரிக்கப்படினும் இது சோபாதிக அத்தியாச மாகலின் சாக்ஷாத் கரித்தவுடனே தோற்றுது நசித்தற்குத் தடையாய்ப் பொருந்தியிருக்கின்ற பிராரத்த கருமத்தின் காரியமாகிய தூல சரீ மிருக்குமளவும் கற்பிதப் பிரபஞ்சத்திற்கு அதிட்டானமாகிய பிரஹ்மசொரூபம் வேற்றுமையின்றிப் பரிபூரணமாய் விளங்குகின்ற இலாபத்தால் பிராதிபாசிகமாய் விளங்கும் எ-று.

க-ரை. கானற்சலமானது அதின் அதிட்டான ஞானத்தாற் பாதிக்கப்படினும் உபாதி பலத்தாற் பின் மித்தையாகத் தோற்று தல் போலப் பிரபஞ்சமானது அதின் அதிட்டான ஞானத்தாற் பாதிக்கப்படினும் உபாதி பலத்தாற் பின் மித்தையாகத் தோற் றும். எ-ம். (௬௬)

எஎ. கானற்சலமார் சடலிடையா காயமென்னும்பெரும்பூதந்
தானென்றேலும் விழுந்தழுந்தித் தனதுவடிவங் கெடுதலுண்டோ
வீனவாரோ பிசமாகவென்பாற் றேன்றுமிச்சகத்தில்
யான்முனிறந்து பிறந்தேனென்னெண்ணம் வியக்கற்பாலதே கள

இ-ள். கானல் சலம் ஆர் - கானலின்கண் மித்தையாகத் தோற்றுகின்ற நீரால் நிரம்பிய, கடல் இடை - சமுத்திரத்தினிடத்து, ஆகாயம் என்னும் - விண்ணென்று சொல்லப்படுகின்ற, பெரும் பூதம் - அதிவியாபகமும் அதி சூக்குமமுமாகிய பூதமானது, விழுந்து அழுந்தி - வீழ்ந்து மூழ்கி, தனதுவடிவம் - தன்னுடைய சொரூபம், என்றேனும் - எந்நாளிலாயினும், கெடுதல் உண்டோ - நாசமாதலுளதோ, [இல்லை உளதென்பாருளரெனின் அவருடைய அச்சொல் அதிசயிக்கத்தக்கதன்றோ அதுபோல], என்பால் - பிரஹ்ம சொரூபமாகிய என்னிடத்தில், ஈனம் - [ஞானத்தால்] அழியத்தகுந்த, ஆரோபிதமாகத் தோன்றும் - கற்பித வஸ்துவாக விளங்குகின்ற, இச்சகத்தில் - இந்தப் பிரபஞ்சத்தில், யான் - [இதற்கதிட்டானனாகவும் பரிபூரணனாகவும் நித்தியனாகவுமிருக்கின்ற] நான், முன் - அஞ்ஞான காலத்தில், இறந்து [என்] பிறந்தேன் - மரித்தேன் ஜனித்தேன், என் எண்ணம்-என்று எண்ணிய எண்ணமானது, - விபக்கற்பாலதே - அதிசயிக்கத்தக்கதேயாம். எ-று,

பொ-ரை. கானலின்கண் மித்தையாகத் தோன்றுகின்ற நீரால் நிரம்பிய சமுத்திரத்தினிடத்து விண்ணென்று சொல்லப்படுகின்ற அதிவியாபகமும் அதிசூக்குமமுமாகிய பூதமானது வீழ்ந்து மூழ்கித் தன்னுடைய சொரூபம் எந்நாளிலாயினும் நாசமாதலுளதோ இல்லை உளதென்பொருளரெனின் அவருடைய அச்சொல் அதிசயிக்கத்தக்கதன்றோ அதுபோலப் பிரஹ்மசொரூபமாகிய என்னிடத்தில் ஞானத்தாலழியத் தகுந்த கற்பித வஸ்துவாக விளங்குகின்ற இந்தப் பிரபஞ்சத்தில் இதற்கதிட்டானனாகவும் பரிபூரணனாகவும் நித்தியனாகவுமிருக்கின்ற நான் அஞ்ஞான காலத்தில் மரித்தேன் ஜனித்தேன் என்று எண்ணிய எண்ணமானது அதிசயிக்கத்தக்கதேயாம், எ-று.

என் என்னுந்தன்மை யொருமை வினைமுற்றுவிகுதி இறப்புடனுங் கூட்டப்பட்டது. இறப்பை முற்கூறியது பல சென்மங்களில் என்பதையுணர்த்துதற் கென்றறிக. வியக்கற்பாலது என்பது குறிப்பு மொழியாய் மயக்கத்தை யுணர்த்தி நின்றது.

க-ரை; கானல் நீர்க்கடலில் ஆகாயம் விழுந்து அமிழ்ந்திப் போயிற்றென்று கருதுதல் மயக்கமாதல்போலப் பிரஹ்ம சொரூபமாகிய நான் ஜகதநில் இறந்தேன் பிறந்தேன் என்று முன் கருதியது அஞ்ஞான மயக்கம். எ-ம். (கஎ)

எ௰அ. குணமுங் குறியு மிறந்ததுவாய்க் கோதிலானந் தோ
ததியாய்
மணமண் பரிச முருவிரச மலியு மொலியு மிலதாகி
யணுவே மகத்தே கனமிலகு வாதி யாய வடிவுபெபர்
நணுகா வமல பாப்பிரஹ்ம நானே நானே யதுதானே.
(கஅ)

இ-ள். குணமும் - சத்துவாதி குணங்களும், குறியும் - ஒருவித அடையாளமும், இறந்தது ஆய் - இல்லாததாயும், கோது இல் - குற்றமில்லாத, ஆனந்த உததியாய் - இன்பக்கடலாகியும், மணம் அண் பரிசம் - கந்தமும் பொருந்துகின்ற பரிசமும், உருவு இரசம் - உருவமும் இரசமும், மலியும் ஒலியும் — [எங்கும்] நிறைந்திருக்கின்ற சத்தமும், இலது ஆகி — இல்லாததாயும், அணு மகத்து கன இலகு — நுண்மை பருமன் பாரம் பாரமின்மை, ஆகியாய — முதலாகிய, வடிவுபெயர் - உருவநாமங்களை, நணுகா - பொருந்ாத, அமலபாப்பிரஹ்மம் [ஏ] நான் - நின்மலமாயுமுள்ள அகண்டாகாரசப்பிரஹ்மமேநான், நானே அது - நானே பிரஹ்மம், எ—று.

பொ-ரை சத்துவாதி குணங்களும் ஒருவித அடையாளமுமில்லாததாகியும் குற்றமில்லாத ஆனந்தக்கடலாகியும் கந்தமும் பொருந்து

கின்ற பரிசமும் உருவமும் இரசமும் எங்கும் நிறைந்திருக்கின்ற சத்தமும் இல்லாததாயும் நுண்மை பருமன் பாரம் பாரமின்மை முதலாகிய உருவ நாமங்களைப் பொருந்தாத நின்மலமாயுமுள்ள அகண்டாகாசப் பிரஹ்மமே நான் நானே பிரஹ்மம், எ—று.

க-ரை. நிருவிசேஷமாகிய பிரஹ்மமே ஆத்துமா ஆத்துமாவே பிரஹ்மம் என்று அவற்றின் ஐக்கியத்தையுணர்த்தியது, எ—று. (கஅ)

எ௰க. மன்னு மனிய நோக்காமன் மறித்துத் தனையும் பார்க்காம
லுன்னன் மறத்த லிலாமலுள வுணர்வு முதித்த லொடுங்கலின்றிப்
பின்ன மறவோ ரியல்பாகப் பிறங்குஞ் சுகானு பவமுமிவை
தன்னை யறிந்த வனுபவமென் றறிந்த பெரியோர் சாற்றுவரால் [கக]

இ-ள். மன்னும் அனியம் நோக்காமல் - [பாகியத்தில்] நிலைபெற்றுள்ள சத்தாதி விஷயங்களைக் கிரகிக்காமலும், மறித்து தனையும்பார்க்காமல் - திரும்பத்தன்னை [சரீரத்தையுங்] கிரகிக்காமலும், உன்னல் மறத்தல் இலாமல் - [ஆந்தரத்தில் வாசனா பலத்தால் எழும் அநான்ம வஸ்துக்களை அல்லது ஆன்மாவாகிய பிரஹ்ம வஸ்துவை] நினைக்காமலும் மறக்காமலும், உள உணர்வும் — [சுயம்பிரகாசமாய் நித்தியமாய்] உள்ள அறிவும், உதித்தல் ஒடுங்கல் இன்றி—தோற்ற நாசங்களில்லாமலும், பின்னம் அற - யாதொரு பேதமுமில்லாமலும், ஓர் இயல்பு ஆக - ஒரு தன்மையாக, பிறங்கும் சுக அனுபவமும் — விளங்கும் ஆனந்தானுபவமும், இவை — ஆகிய இவை, தன்னை அறிந்த - பிரஹ்மாபின்னமாகிய ஆன்மாவையுணர்ந்த, அனுபவம் என்று — அனுபூதி யென்று,

அறிந்த பெரியோர் சாற்றுவர் - இவ்வனுபவிகளாகிய ஞானிகள்சொல்லுவார்கள், எ—று.

பொ—ரை. பாகியத்தில் நிலைபெற்றுள்ள சத்தாதி விஷயங்களைக் கிரகிக்காமலும் திரும்பத் தன்னையுங் கிரகிக்காமலும் ஆந்தரத்தில்வாசனுபலத்தால் எழும் அநான்ம வஸ்துக்களை அல்லது ஆன்மாவாகிய பிரஹ்மவஸ்துவை நினைக்காமலும் மறக்காமலும் சுயம்பிரகாசமாய் நித்தியமாயுள்ள அறிவும் தோற்ற நாசங்களில்லாமலும் யாதொரு பேதமுமில்லாமலும் ஒரு தன்மையாக விளங்கும் சுகானுபவமுமாகிய இவை தன்னையுணர்ந்த அநுபூதியென்று இவ்வநுபவிகளாகிய ஞானிகள் சொல்லுவார்கள், எ—று.

க—ரை. ஞானிகள் நித்தியமாகிய ஞானானந்தானுபவமே ஆன்மானுபவமென்று கூறுவர், எ—ம். [௧௧]

௰௨. பத்துத் திசையும் பூதமைந்தும் பகாப் பூதகாரியமு
மத்தியாச மாவிளங்க வவற்றி னதிட்டானமதாகிச்
சுத்த மாகி யகண்டசுயஞ் சோதி யாகிப் பூரணமாய்
நித்த மாய தன்சொருப நிகழுஞ் சகச நிலையினர்க்கே. [௰௨]

இ—ள். சகசநிலையினர்க்கு - சகசாநுபவமுடைய ஞானிகட்கு, பத்துத்திசையும் — கிழக்கு முதலிய பத்துத்திக்குகளும், பூதம் ஐந்தும் — பிருதிவியாதி பூதங்களைந்தும், பகா அப்பூதகாரியமும் - சொல்லிய அந்தப் பஞ்சபூதங்களால் விரிந்திருக்கின்ற பிண்டப் பிரமாண்டங்களாகிய பிரபஞ்சமும், அத்தியாசமாவிளங்க - [கானலினிடத்துச்சலம் போலக்] கற்பிதமாகத்தோன்ற, நித்தம் ஆய — நித்தியமாயிருக்கின்ற, தன் சொருபம் — [பிரஹ்மாபின்னமாகிய] தனது ஆன்ம சொரூபமானது, அவற்றின் - அக்கற்பித வஸ்துக்களுக்கு, அதிட்டானம் ஆகி —

அதிஷ்டானமாய், சுத்தம் ஆகி - நின்மலமாய், அகண்டசயஞ்சோதி ஆகி — ஏகமாகிய சுயம்பிரகாசமாய், பூரணமாய் - அபரிச்சின்னமாய், நிகழும் — விளங்கும், எ-று.

பொ-ரை. சகசானுபவமுடைய ஞானிகளுக்குக் கிழக்கு முதலிய பத்துத்திக்குகளும் பிருதிவியாதி பூதங்களைந்தும் சொல்லிய அந்தப் பஞ்சபூதங்களால் விரிந்திருக்கின்ற பிண்டப் பிரமாண்டங்களாகிய பிரபஞ்சமும் கானலினிடத்துச் சலம்போலக் கற்பிதமாகத் தோன்ற நித்தியமாயிருக்கின்ற பிரஹ்மாபின்னமாகிய தனது ஆன்ம சொரூப மானது அக்கற்பித வஸ்துக்களுக்கு அதிஷ்டானமாய் அமலமாய் ஏக மாகிய சுயம்பிரகாசமாய் அபரிச்சின்னமாய் விளக்கும், எ-று,

அத்தியாசமா விளங்க ஆன்ம சொரூபம் விளங்கும் எனக் கூட்டப் படும் அங்ஙனங் கூட்டப்படினும விளங்க என்பது காரியப்பொருட் டாய் வந்த செயவெனெச்ச வாய்பாட்டெதிர்கால வினையெச்சமாதலா லும் ஆன்ம ஞானவேதவாச்சகத்தின் மித்தியாத்துவ நிச்சயமுளதாத லானும் ஆன்ம ஞானத்தால் ஜகத்துவாதிக்கப்பட்டு மித்தையாமென் பது கருத்தாகக் கொள்க.

க-ரை. ஞானிகளுக்குத் தமது ஆன்ம சொரூப ஞானத்தால் ஜகத் துவாதிக்கப்பட்டு மித்தையாம், எ-ம். [௨௰]

௨௧. நாகஞ் சரிப்போ னிதுவதுவென் றறியா னதுபோன் ஞானியுந்தன்
றேகஞ் சரிக்கு மிடநாடுர் சிகரத் திகிரி வனபென்னப்
பாகித் தறியா னெங்குமொரு படித்தா யத்தி பாதியின் ப
வேகப் பொருளாந் தவவடிவே வயிலங்கக் காண்ப னதனாலே. [௨௧]

இ-ள். நாகம் சரிப்போன் - ஆகாய மார்க்கத்திற் செல்பவன், இது அது என்று அறியான் - இது அது என்று ஒன்றையுஞ் சுட்டியறிய மாட்டான், [எதனாலெனில் அவ்விடத்துத் தன்னைத்தவிர அந்நிய வஸ்து ஒன்றுமின்மையால்], அதுபோல் - அத்திருஷ்டாந்தம்போல, ஞானியும் - ஜீவன் முத்தனும் தன் தேகம் - தன்னுடைய சரீரம், சரிக்கும் - சஞ்சாரஞ்செய்யும், இடம் - தானங்களாகிய, நாடு - [நாடுகளை இது இன்ன] நாடெனவும், ஊர் - [நகரங்களை இது இன்ன] நகரமெனவும், சிகரத்திகிரி - முடிகளோடு கூடிய [மலைகளை இது இன்ன] மலையெனவும், வனம் என்ன - [வனங்களை இது இன்ன] வனமெனவுங் [கருதி], பாகித்து அறியான் - பிரித்தறியமாட்டான், [யாதினாலெனில்], எங்கும் ஒரு படித்தாய் - எவ்விடத்தும் ஒரு தன்மையாய், அத்திபாதி இன்ப - சச்சிதானந்த வடிவ, எகப்பொருள்ஆம் - ஒரே வஸ்துவாகிய, தன் வடிவே - தன்னுடைய ஆன்ம சொரூபமே, இலங்கக் காண்பன் - விளங்கத் தரிசிப்பன், அதனாலே - அக்காரணத்தாலே, எ-று,

பொ-ரை. ஆகாய வழியிற் செல்பவன் இது அது என்று ஒன்றையுஞ் சுட்டியறியமாட்டான். எதனாலெனின், அவ்விடத்துத் தன்னைத் தவிர அந்நிய வஸ்து ஒன்றுமின்மையால் அத்திருஷ்டாந்தம்போல ஞானியுந் தன்னுடைய சரீரம் சஞ்சாரஞ்செய்யுந் தானங்களாகிய நாடுகளை இது இன்ன நாடெனவும் நகரங்களை இது இன்ன நகரமெனவும் முடிகளோடு கூடிய மலைகளை இது இன்ன மலையெனவும் வனங்களை இது இன்ன வனமெனவும் கருதிப் பிரித்தறியமாட்டான். எதனாலெனில், எவ்விடத்தும் ஒரு தன்மையாய்ச் சச்சிதானந்த வடிவ ஒரேவஸ்துவாகிய தனது ஆன்ம சொரூபமே விளங்கத் தரிசிப்பன் அக்காரணத்தால், எ-று,

செய்யுளோசை நோக்கி விரித்தல் விகாரம் பெற்ற எனவென்னும் எண்ணிடைச்சொல் நாடு முதலிய எண்ணுப்பொருடோறும் பிரிந்தியைந்தது.

க-ரை. ஞானியானவன் எவ்விடத்தும் சச்சிதானந்த சொரூபமாயுள்ள தன்னையே காண்டலால் நாம ரூபங்களை அறியான் எ-ம். [௨௧]

௮௨. கடலிற் செலுமோர் மாலுமிக்கக் கரையுங்குறியா லறி
படல் போ
லுடலி னேக்கா லாசிரிய னுணர்மா ணுக்க னெனும்
பே த
மடியு முடியு நடுவுமிலா வமல பரிபூ ரணஞா ன
வடிவாம் பிரஹ்ம வித்தினுக்கு மருவு மென்னு மரு
மறையே [௨௨]

இ-ள். கடலில் செலும் - சமுத்திரத்தின் கண்ணே [மரக்கலத்தை நடத்திச்] சஞ்சரிக்கும், ஓர் மாலுமிக்கு - ஓர் மீகாமனுக்கு, அக்கரையும் - [ஏகமும் வியாபகமுமாயுள்ள அக்கடல் இயல்பாக அறியப்படுதலோடு] அக்கடற்கப்பாலுள்ள கரையும், குறியால் அறிபடல் போல் — [தீபஸ்தம்ப முதலிய] அடையாளங்களா லறியப்படுதல் போல, அடியும் நடுவும் முடியும் இலா — ஆதியும் மத்தியும் அந்தமும் இல்லாத, அமல பரிபூரண ஞானவடிவு ஆம் - நின்மல பரிபூரண ஞான சொரூபமாய் விளங்குகின்ற, பிரஹ்ம வித்தினுக்கு — பிரஹ்ம வித்தாகிய ஞானிக்கு, ஆசிரியன் - [உபதேசிக்கின்ற இச்சரீர விசிட்ட சைதன்னியம்] குரு, உணர்மாணுக்கன் — இதனைக் கேட்டறியும் [அச்சரீர விசிட்ட சைதன்னியம்] சீடன், எனும் பேதம் — என்று காணும் பேத வுணர்ச்சியானது, உடலின் நோக்கால் - [அப்பக்குவான்மாக்க

ளிடத்துளதாகின்ற காருண்ணியத்தாலும் அவருடைய கருமபரிபாகத் தாலும் எழுஞ்] சரீர திருஷ்டியால், மருவும் என்னும் – பொருந்து மென்று கோஷிக்கும், அருமறை - அருமையாகிய வேதங்கள், எ-று,

பொ–ரை. சமுத்திரத்தின்கண்ணே மரக்கலத்தை நடத்திச் சஞ்ச ரிக்கும் ஒரு மீகாமனுக்கு எகமும் வியாபகமுமாயுள்ள அக்கடல் இயல் பாக அறியப்படுதலோடு அக்கடற்கப்பாலுள்ள கரையும் அவ்விடத்தி லுள்ள தீபஸ்தம்ப முதலிய குறிகளால் அறியப்படுதல்போல ஆதியும் மத்தியும் அந்தமுமில்லாத நின்மல பரிபூரண ஞான சொரூபமாய் விளங்குகின்ற பிரஹ்ம வித்தாகிய ஞானிக்கு உபதேசிக்கின்ற ஆச் சரீர விசிட்டசைதன்னியங் குரு இதனைக் கேட்டறியும் அச்சரீர விசிட்டசைதன்னியஞ் சீடன் என்று காணும் பேத வுணர்ச்சியானது பக்குவான்மாக்களிடத் துளதாகின்ற காருண்ணியத்தாலும் அவ ருடைய கருமபரிபாகத்தாலும் எழுஞ் சரீர திருஷ்டியால் பொருந்து மென்று கோஷிக்கும் அருமையாகிய வேதங்கள், எ-று,

சச்சிதானந்த வடிவப் பிரஹ்ம சொரூபத்திற் சஞ்சரிப்பவனென் பார் "அமல பரிபூரண ஞான, வடிவாம் பிரஹ்மவித்து" என்றார் அவனுக்கு எவ்விடத்துந் தனது சொரூபப் பிரகாசமே தோற்றுதலாற் பேதவுணர்ச்சி யுளதாகாது அங்ஙனமாயினும் பிராரத்தசேடமிருத்த லாலும் ஜீவகாருண்ணியஞ் சுபாவ விலக்கணமாயிருத்தலாலும் நிருவி கற்பசமாதி அப்பியாசத்தின் ஏற்றத்தாழ்வுக்குத் தக்கபடி ஏற்றத்தாழ் வாக ஒரோர் காலத்துளதா மென்றறிக.

கடலிற் சஞ்சரிப்பவனுக்கு அக்கரையின் ஞானமுளதாதற்குத் தீப ஸ்தம்பாதிகள் காரணமாதல்போலச் சச்சிதானந்த வடிவப் பிரஹ்ம சொரூபத்திற் சஞ்சரிக்கும் ஞானிக்குச் சரீரதிருஷ்டி யுளதாதற்குப் பக்குவான்மாக்களிடத் துண்டாகின்ற காருண்ணியங் காரணமென்பது கண்டுகொள்க ஆனால் சரீரம் நிலைத்தற் குரிய உணவு முதலியவற்றின்

ரேகணம் எவ்வாறு கூடுமெனின் அதற்குப் பிராரத்த கருமங் காரண மாயிருத்தலிற் கூடுமென்றறிக.

க-ரை. சச்சிதானந்த அத்துவைதப் பிரஹ்ம சொரூபமே தானு யிருக்கின்ற ஞானிக்கு ஜீவகாருண்ணியத்தாலும் முமுக்ஷுக்களது கன்மபரிபாகத்தாலும் நான் அவன் என்னும் பேத வுணர்ச்சியுளதாம், எ-ம். [உஉ]

அங. நீர மெழுந்து மேற்பெருமி நின்று பெயரா லுருவத்தாற்
பாரிற் குமிழி யெனப்படினும் பயமே யாகும் பார்ப்பவருக்
கோரா னந்த பாமுலகா வுரைக்கப் படினு மில்லாத
பேரோ டுருவங் காணுர்க்கப் பிரஹ்மப் பொருளாப் பிறங்குமால் [உங]

இ-ள். நீரம் - ஜலமானது [தானிருந்த வண்ணமிருக்க], மேல் எழுந்து பெருமிநின்று - [வாயு சம்பந்தத்தால்] மேலே எழும்பி உள்ளே வெளிபட நீங்கிநிற்க, பெயரால் - [அதனுற் கற்பிக்கப்பட்ட மூன்றெழுத்துப்] பெயராலும், உருவத்தால் - [மேலெழும்பி நிற்கின்ற] வடிவத்தாலும், பாரில் - உலகத்தாரால், குமிழி எனப்படினும் - குமிழி என்று [சொல்லப்படுகிறது அதனை] சொல்லப்பட்டாலும், பார்ப்பவருக்கு - [கற்பிதமாகிய அந்நாம ரூபங்களைப்பாராமல் அவற்றிற்காதாரம் யாதென்று ஊன்றி] நோக்குவோருக்கு, பயமே ஆகும் - ஜலமயமாகவே காணப்படும், [அதுபோல], ஓர் ஆனந்தபாம் - ஒப்பற்ற ஆனந்த சொருபப் பிரஹ்மமானது, [தானிருந்தவண்ணம்

நிருவிகாரமாயிருக்க], உலகா உரைக்கப்படினும் – [மாயா சம்பந்தத்தாலுளவாகிய நாமரூப கற்பனையால் அஞ்ஞானிகளால்] பிரபஞ்சமாகக் [கூறப்படுகிறது அங்ஙனக்] கூறப்படினும், இல்லாத பேரோடு உருவம் – உண்மையாயில்லாத நாமரூபங்களை, காணார்கு – [கற்பிதமென்று அக்காரணத்தால்] நோக்கா [மல் விசேத்து அவற்றிற்காதாரமாய் உட்புறங்களிற் பூரித்துள்ள உண்மைப்பொருளையே நோக்குகின்ற] ஞானிகளுக்கு, அப்பிரஹ்மப் பொருளா – அந்த உண்மையாகிய சச்சிதானந்தப் பிரஹ்மவஸ்துவாகவே, பிறங்கும் – விளங்கும், எ–று.

பொ-ரை. ஜலமானது தானிருந்தவண்ணமிருக்க வாயு சம்பந்தத்தால் மேலே எழும்பி உள்ளே வெளிபட வீங்கி நிற்றலால் கற்பிக்கப்பட்ட மூன்றெழுத்துப் பெயராலும் மேலே எழும்பிநின்ற வடிவத்தாலும் உலகத்தாரால் குமிழியென்று சொல்லப்படுகிறது அங்ஙனஞ் சொல்லப்பட்டாலும் கற்பிதமாகிய அந்நாம ரூபங்களைப் பாராமல் அவற்றிற்காதாரம் யாதென்று ஊன்றி நோக்குவோருக்கு ஜலமயமாகவே காணப்படும் அதுபோல ஒப்பற்ற ஆனந்த சொரூபப் பிரஹ்மமானது தானிருந்தவண்ணம் நிருவிகாரமாயிருக்க மாயாசம்பந்தத்தாலுளவாகிய நாமரூப கற்பனையால் அஞ்ஞானிகளாற் பிரபஞ்சமாகக் கூறப்படுகிறது அங்ஙனங் கூறப்படினும் உண்மையாயில்லாத நாமரூபங்களைக் கற்பிதமென்று அக்காரணத்தால் நோக்காமல் விசேத்து அவற்றிற்காதாரமாய் உட்புறங்களிற் பூரித்துள்ள உண்மைப்பொருளையே நோக்குகின்ற ஞானிகளுக்கு அந்த வுண்மையாகிய சச்சிதானந்தப் பிரஹ்மமாகவே விளங்கும், எ-று,

பார் என்பது ஆகுபெயர் பாரில் என்பது வேற்றுமை மயக்கம்நிற்க என்னும் காரணப்பொருட்டாய் வந்த செயவெனெச்ச வாய்பாட்டிறந்தகால வினையெச்சம் நின்றெனத் திரிந்து நின்றது.

க-ரை. பிரஹ்மமானது அஞ்ஞானிகளுக்குப் பிரபஞ்சமாகக் காணப்படுவதல்லது ஞானிகளுக்குச் சச்சிதானந்த வடிவப் பிரஹ்மமாகவே விளங்கும். எ-ம். [உக]

[வெண்பா]

அச. அந்தக் கரண மசையா தடங்கிடின்மற்
றெந்தக் கரணமசை வெய்திநிற்குஞ்—சந்ததமும்
விட்டுதியா வின்பமே மேலிடுமா ஞளடைவில்
விட்டொழியுஞ் சுட்டறிவு மேல். [உச]

இ-ள். அந்தக்கரணம் - உட்கருவியாகிய மனமானது, அசையாது - [வாசனையால் விடயங்களைக் குறித்துச்] சலிக்காமல், அடங்கிடின் - பிரஹ்ம சொருபத்தி லொடுங்குமாயின், மற்று எந்தக்கரணம் அசைவு எய்திநிற்கும் - புறத்திலுள்ள வேறு எந்தக் கருவிகள் தந் தொழிலைச் செய்துநிற்கும் [யாதொன்றுந் தொழில் செய்யாது ஆனல் மனமடங்கிற் பயன் யாதெனிற் கூறுகின்றார்], சந்ததமும் - எந்நாளும், விட்டு உதியா இன்பமே - நீக்கமுந் தோற்றமுமில்லாத பிரஹ்மானந்தானுபவமே, மேலிடும் - அதிகரிக்கும், [இஃது அதிகரிக்கவே], மேல் - பின்பு, நாள் அடைவில் - நாள் செல்லச்செல்ல, சுட்டு அறிவு விட்டு ஒழியும் - [முன்பு புறத்தில் இந்திரியங்களோடு கூடியறிந்த விடயச்] சுட்டுணர்வு நீங்கிவிடும், எ-று.

பொ-ரை. உட்கருவியாகிய மனமானது வாசனையால், விடயங்களைக் குறித்துச் சலிக்காமல் பிரஹ்ம சொருபத்தி லொடுங்குமாயின் புறத்திலுள்ள வேறெந்தக் கருவிகள் தந்தொழிலைச் செய்துநிற்கும் யாதொன்றுந் தொழில் செய்யாது ஆனல் அங்ஙனம் மனம் அடங்கிற் பயன் யாதெனின் அதற்குக் கூறுகின்றார் எந்நாளும நீக்கமுந் தோற்றமுமில்லாத பிரஹ்மானந்தானுபவமே அதிகரிக்கும் இஃது அதிகரிக்

கவே பின்பு நான் செல்லச்செல்ல முன்புபுறத்தில் இந்திரியங்களோடு கூடியறிந்த விடயச் சுட்டுணர்வு நீங்கிவிடும். எ-று.

க-ரை. மனமடங்கப்பெற்றவர்க்குப் பிரஹ்மானந்தானுபூதியும் சுட்டுணர்வின் நீக்கமுமுளவாம். எ-ம். [௨௪]

[2]-வது நிலையியல் முற்றிற்று.

## ௩-வது பயனியல்.

[ வெண்பா ]

அ௫. தேவருலகிற் சிறப்பான வின்சுக மு
மூவருலக முழுச்சுகமு—மேவினுந் தா
னென்னின்பமாமோ விகழப்படுவ வல்லாத்
தன்னின்பங் கண்டான் றனக்கு. [௧]

இ-ள். தன் இன்பம் - தனது சொரூபமாகிய பிரஹ்மானந்தத்தை, கண்டான் தனக்கு — அநுபவித்தறிந்த ஜீவன் முத்தனுக்கு, தேவர் உலகில் - [ இந்திரன் முதலாகிய ] தேவர்கள் [ வாசஞ்செய்கின்ற ] பொன்னுலகத்தின்கண்ணுள்ள, சிறப்பான — [அரம்பைமாதர் அமிர்த முதலிய] மேன்மைபொருந்திய, இன்சுகமும் — இனிய சுகபோகவஸ்துக்களும், மூவர் உலக முழுச்சுகமும் — பிரமா முதலிய மும்மூர்த்திகள் வசிக்கின்ற பிரமலோக வைகுந்தலோக சிவலோகங்களிலிருக்கப்பட்ட சுகத்துக்குரிய எல்லாப்போகவஸ்துக்களும், மேவினும் - [வலிய வந்து] சேர்ந்தாலும், என் - சீசீ இஃதென்னையென்று, இகழப்படுவ அல்லால் - இகழ்ந்து விலக்கப்படுவவேயல்லாமல், இன்பம் ஆமோ - [தன்னுலநுபவிக்கப்பட்ட] பிரஹ்மானந்தத்திற்குச் சமானமாமோ [ஆகாமித்தையா யிருத்தலால்] எ-று.

பொ-ரை தனது சொரூபமாகிய பிரஹ்மானந்தத்தை அநுபவித்தறிந்த ஜீவன் முத்தனுக்கு இந்திரன் முதலிய தேவர்கள் வசிக்கின்ற பொன்னுலகத்தின்கண்ணுள்ள அரம்பைமாதர் அமிர்தமுதலிய மேன்மைபொருந்திய இனிமையாகிய சுகபோக வஸ்துக்களும் பிரமாமுதலிய மும்மூர்த்திகள் வசிக்கின்ற பிரமலோக வைகுண்டலோக சிவலோகங்களிலுள்ள எல்லாச் சுகபோக வஸ்துக்களும் வலியவந்து சேர்ந்தாலும் சீசீ இஃதென்னையென்று இகழ்ந்து தள்ளப்படுவேயல்லாமல் தன்னாலனுபவிக்கப்பட்ட பிரஹ்மானந்தத்திற்குச் சமானமாமோ ஆகாமித்தையாயிருத்தலால். எ-று.

சுகம் ஆகுபெயர் என் என்பது இகழ்ச்சிக்குறிப்பு.

க-ரை. பிரஹ்மானந்தத்தை அநுபவித்த ஞானி விஷயானந்தத்தை விரும்பான். எ-ம். [௧]

அசு. நல்லமுது துண்டோன் முன்னாட்புசித்த தேனுமுப்பில்
புல்லரிசி யூண்பின் புசிப்பனோ—வெல்லையி லா
வானந்த மேவடிவ மானே னதுவிகந்தி ங்
கேனோ விடய மெனும். [௨]

இ-ள். நல்ல அமுது - இனிமையாகிய தேவாமிர்தத்தை, உண்டோன் - புசித்தவன், உப்பில் புல்லரிசி ஊண் - உப்பற்ற புல்லரிசிக்கூழ், முன் நாள் புசித்ததேனும் - [அவ்வமிர்தம் புசித்தற்கு] முற்காலத்துப் புசித்ததாயிருப்பினும் [அதனை], பின் - [அவ்வமிர்தம்புசித்த] பிற்காலத்து, புசிப்பனோ — உண்ணவெண்ணுவனோ [என்னான் அதுபோல], எல்லை இலா - [காலதேச வஸ்துக்களால்] அளவிறந்த, ஆனந்தமே வடிவம் ஆனேன் - பிரஹ்மானந்தமே தனது சொரூபமாகப்பெற்ற ஜீவன் முத்தன், அது இகந்து - அவ்வின்பத்தினின்றும்நீங்கி, இங்கு - ஜீவன் முத்தித் தசைக்கண், விடயம் என வெனும் - [துச்ச

மாகிய] விஷய சுகத்தை எதற்காக நினைப்பான், [நினைக்கவேமாட்டான்]. எ-று.

பொ-ரை. இனிமையாகிய தேவாமிர்தத்தைப் புசித்தவன் உப்பற்ற புல்லரிசிக்கூழ் அவ்வமிர்தம் புசித்தற்கு முற்காலத்துப் புசித்ததாயிருப்பினும் அதனை அவ்வமிர்தம் புசித்த பிற்காலத்துண்ணவெண்ணுவனோ எண்ணான் அதுபோலக் காலதேச வஸ்துக்களா லளவிறந்த பிரஹ்மானந்தமே தனது சொரூபமாகப் பெற்ற ஜீவன் முத்தன் அவ்வின்பத்தினின்றும் நீங்கி ஜீவன் முத்தித் தசைக்கண் துச்சமாகிய விஷய சுகத்தை எதற்காக நினைப்பான் நினைக்கவேமாட்டான். எ-று.

க-ரை. ஜீவன் முத்தனுக்குப் பிரஹ்மானந்தானுபவ மிகுதியால் விடய சுகவாசனை நீங்கும். எ-ம். [௨]

அஎ. விக்ஷேபப் பேயோட்டி மேலவித்தைமண் களைந் து
நிக்ஷேப மாயதன்னை நீக்கமிலாப்—பக்ஷமுட ன்
கண்டெடுத்த வன்றே கடுவேட்கை யாயதுக்க ம்
விண்டளவி லின்பாய் விடும். [௩]

இ-ள். நிக்ஷேபமாய — [ஒருவன்] புதையலாகிய, தன்னை - தனது ஆன்ம சொரூபத்தை, விக்ஷேபப் பேயோட்டி — [அடையவொட்டாமற் பிரதிபந்திக்கின்ற] விஷயக்காட்சியாகிய பிசாசைப்போக்கடித்து, மேல்மண் அவித்தைகளைந்து — [பின்னர் அதனை மறைத்திருக்கின்ற] மேற்புறத்து மண்ணாகிய அஞ்ஞானத்தை வேரறக்கடிந்து, நீக்கம் இலா - நீங்குதலில்லாத, பக்ஷமுடன் — விருப்பத்தோடு, கண்டெடுத்த அன்றே - அபரோக்ஷமாகச் சாக்ஷாத் கரித்த அப்பொழுதே, கடுவேட்கையாய துக்கம் - கொடிய இச்சையாலுளதாகிய துக்கமானது, விண்டு - ஒழிதலால், அளவில் இன்பு ஆய்விடும் - பரிபூரணானந்த சொரூபமாவன். எ-று.

பொ-ரை. ஒருவன் புதையலாகிய தனது ஆன்ம சொரூபத்தை அடையவொட்டாமற் பிரதிபந்திக்கின்ற விஷயக்காட்சியாகிய பிசாசைப் போக்கடித்துப் பின்னர் அதனை மறைத்திருக்கின்ற மேற்புறத் துமண்ணாகிய அஞ்ஞானத்தை வேரறக்கடிந்து நீக்குதலில்லாத விருப்பத்தோடு அபரோக்ஷமாகச் சாக்ஷாத் கரித்தவப்பொழுதே கொடிய இச்சையாலுளதாகிய துக்கமானது ஒழிதலால் பரிபூரணானந்த சொரூபமாவன். எ-று.

விண்டு என்பது செயவனெச்சத்திரிபு

இங்கே ஆன்ம சொரூபத்தைப் புதையலாக உருவகப்படுத்தியிருத்தல்போலப் பஞ்சதசி ௧௧௧௨-வது சு-ல் "தேகவடிவ கல்லைப்பெயர்த்துப் புத்திவடிவகுந்தாலியினால் மனவடிவப் பூமியைப் பிளந்து புருஷனானவன் பிரத்தியக பின்ன பிரஹ்ம வடிவ நிதியாகிய என்னையறிய வேண்டும்" எனக் கூறியிருப்பது காண்க.

க-ரை. ஆன்ம சாக்ஷாத்கார மடைந்தவன் பூரணானந்த சொரூபமாவன். எ-ம். [௩]

௮௮. கன்னலிர சம்பிரித்துக் கண்டயின்றோ னக்கோதுக்
கென்னுறினுஞ் சற்று மினையுமோ—தன்னி
லறிந்துபிரிந் தோனெதனுக் காக்கையினுக் கேது
செறிந்தாலு மெண்ணஞ் செயும். [௪]

இ-ள். கன்னல் - கரும்பினை, இரசம் - [உம்] பிரித்து - [அதன்கண் வியாபித்து மதுரவடிவமாயிருக்கின்ற] சாற்றினையும் [துரும்பு வடிவமாயுள்ள கோதினையும்] வேறு வேறு பிரித்து, கண்டு - [அவற்றை முறையே பயனுடையதெனவும் பயனின்றியதெனவும்] அறிந்து, அயின்றோன் - [அவற்றட் பயனுடைய இரசத்தினைப்] பருகினவன், அக்கோதுக்கு - [பயனின்றிய] அச்சக்கைக்கு, என் உறினும் - வேடிமா தடையினும், சற்றும் இனையுமோ - அற்பமாயினும் வருந்துவனோ

[வருந்தான் அதுபோல], தன்னில் - தான் என்னும் பதத்தின் வாச்சியார்த்தத்தில், (உகாதானியதோடு கூடிய சரீரத்தில்), அறிந்து - [பரிபூரணமாயும் சச்சிதானந்த வடிவமாயுமிருக்கின்ற ஆன்மாவேதானெனவும் பரிச்சின்னமும் அசத்து சடதுக்க வடிவமுமாயிருக்கின்ற தேகம் அந்நியமெனவும் உள்ளபடி] கண்டு, பிரிந்தோன் - [அந்நியமாகிய அச்சரீரத்தினின்றும்] வேறுபட்டிருக்கின்ற ஞானியானவன், ஆக்கையினுக்கு - [அசத்துசட துக்கவடிவமாகிய] அத்தேகத்துக்கு, ஏது செறிந்தாலும் - எவ்விதமாகிய தீங்குகள் வந்து பொருந்தினும், எதனுக்கு - என்ன காரியத்தின்பொருட்டு, எண்ணம்செயும் - கவலையடைவன் [அடையவேமாட்டான்]. எ-று.

பொ-ரை. கரும்பினை அதன்கண் வியாபித்து மதுரவடிவமாயிருக்கின்ற சாற்றினையுந் துரும்புவடிவமாயுள்ள கோதினையும் வேறுவேறு பிரித்து அவற்றை முறையே பயனுடையதெனவும் பயனின்றியதெனவும் அறிந்து அவற்றுள் பயனுடைய இரசத்தினைப் பருகினவன் பயனின்றிய அச்சக்கைக்கு கேடியாதடையினும் அற்பமாயினும் வருந்தவனோ வருந்தான் அதுபோலத் தானென்னும் பதத்தின் வாச்சியார்த்தத்தில் பரிபூரணமாயுஞ் சச்சிதானந்த வடிவமாயுமிருக்கின்ற ஆன்மாதானெனவும் பரிச்சின்னமும் அசத்துசட துக்கவடிவமுமாயிருக்கின்ற தேகம் அந்நியமெனவும் உள்ளபடி கண்டு அந்நியமாகிய அச்சரீரத்தினின்றும் வேறுபட்டிருக்கின்ற ஞானியானவன் அசத்து சடதுக்க வடிவமாகிய அத்தேகத்துக்கு எவ்விதமாகிய தீங்குகள் வந்து பொருந்தினும் என்ன காரியத்தின்பொருட்டுக் கவலையடைவன், அடையவேமாட்டான். எ-று.

இரசமும் என்பதின் எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

க-ரை. ஞானி தன் தேகத்துக்குளவாகும் தீங்குகளாற் கிலேசமடையான். எ-ம். [௬]

[ விருத்தம் ]

௮௧. பேசு மெதிரற் றசையசையாப் பேறேயான்ம தரிசனமா
மாசில் விசும்பா வஃதாயின் மன்னும் பிரஹ்ம தரிசன
மா
நேசித் திவற்று ளொன்றையொரு நிமிடம் பெறினு
மஞ்ஞான
நாச மடைந்து பரானந்த நயமே பயனு நண்ணுறுமால்
[௫]

இ-ள். பேசும் — [ஒருவனுக்குச்] சொல்லாநின்ற, அகம் - அந்தக் கரணமானது, எதிர்அற்று - [ஆன்மா நான்மாக்களாகிய எந்த வஸ்துக் களையும்] விஷயம்பண்ணுதலொழிந்து, அசையாப்பேறே - சலியா திருக்கும் நிலையே, ஆன்மதரிசனம்ஆம் - ஆன்மாநுபூதியாம், மாசில் - [விடயச்சவர்ச்சியாகிய] குற்றமில்லாத, அஃது - அவ்வந்தக்கரணம், விசும்பாஆயின் - ஆகாயத்தைப்போல வியாபகமாயின், [அங்ஙனமா தல்], மன்னும் - நிலைபெற்ற, பிரஹ்ம தரிசனம் ஆம் — பிரஹ்மாநு பூதியாம், நேசித்து — விருப்பத்துடன், இவற்றுள் — இவ்விரண்ட னுள், ஒன்றை - யாதாயினு மோரனுபூதியை, ஒரு நிமிடம் - ஒருநிமி ஷப்பொழுது, பெறினும் — அடைந்தாலும் [அவ்வடைவால்], அஞ் ஞானம் — அஞ்ஞானமானது, நாசம் அடைந்து - அழிந்துபோக, பர ஆனந்தநயமே — மேலாகிய ஆனந்த சொரூப மோக்ஷமே, பயனு - பிர யோசனமாக, நண்ணுறும் - அடையப்படும். எ-று.

பொ-ரை. ஒருவனுக்குச் சொல்லாநின்ற அந்தக்கரணமானது ஆன் மா நான்மாக்களாகிய எந்த வஸ்துக்களையும் விஷயம்பண்ணுதலொ ழிந்து சலியாதிருக்கும் நிலையே ஆன்மாநுபூதியாம் விடயச்சவர்ச்சி யென்னுங் குற்றமில்லாத அவ்வந்தக்கரணம் ஆகாயம்போல வியாபக

மாயின் அஃது நிலைபெற்ற பிரஹ்மானுபூதியாம் விருப்பத்துடன் இவ்விரண்டனுள் யாதாயினு மோரனுபூதியை ஒரு நிமிஷப்போழ்தடைந்தாலும் அவ்வடைவால் அஞ்ஞானமழிந்துபோக மேலாகிய ஆனந்த சொரூப மோக்ஷமே பிரயோசனமாக அடையப்படும். எ-று.

நாசமடைந்து என்பது செயவெனெச்சத்திரிபு.

மாசில் விசும்பா அஃது ஆயின் பிரஹ்மதரிசனம் ஆம் என்றதற்குதாரணம்,

ஔவை குறள்.

"பரந்த விசும்பிற் பரந்த வொளி காணிற்
பரம்பரமே யாய வொளி"

என்று கூறியிருப்பது காண்க.

இங்கே ஆன்ம தரிசனமும் பிரஹ்ம தரிசனமுமென இரண்டு நிலை கூறியிருத்தல்போல வாசிட்டத்தில் "மூவகை யுலகி லிந்தவகங்கா மும்மை யென்று, மேவரு மிரண்டு கன்ரு மிகவுமோர் நீனமாகும், யாவதும்பாமு நாமே யீறில மெமைய லாதோர், பாவனை யிலரென் றேரும் போதமே பரமாங் காரம்" எனவும், "செங்கெல் வாலினுஞ் சற்றுமிச் செகங்களுக் கயலா யென்றும், மன்னுத மெனக் கொன் போத மற்றையாங் கார மாகும், இன்னிலை யிரண்டுஞ் சீவன் முத்தர் பாலிருந்திடேற்றித், தன்னரு முத்தி நல்குஞ் சுழலுறு பந்த நல்கா" எனவுங் கூறியிருத்தல் காண்க.

க—ரை. தத்துவம் பதார்த்தங்களின் லக்ஷியார்த்த அனுபூதியே அஞ்ஞான நாசத்திற் கேது. எ—ம், [௫]

ரு—வது பயனியல் முற்றிற்று.

## ௪-வது அடைந்தாரியல்

[ வெண்பா ]

௧௯. எண்ணம் பிரிவற் றிலங்காத் துமவடி வா
மண்ணனிலையை யடைந்தோர்க—டண்ணிம ய
மானிடரும் பார்த்து மகிழ மறைநெறியி ன்
மானிடர்கள் மன்ன நடப்பார். [௪]

இ-ள். எண்ணம் - அந்தக்கரணமானது, பிரிவு அற்று - பிரஹ்மத்தினின்றும் பிரிதலொழிந்து, இலங்கு - விளங்காநின்ற, ஆத்தும வடிவு ஆம் - ஆன்மசொரூபமாயிருக்கின்ற, அண்ணல் - பெருமை பொருந்திய, நிலையை - ஜீவன் முத்தியை, அடைந்தோர்கள் - பெற்றவர்கள், தண் - குளிர்ச்சிபொருந்திய, இமயமான் இடரும் - இமயபர்வதராசனுடைய புத்திரியாகிய பார்வதிதேவியை இடப்பாகத்திலுடையவராகிய சிவபெருமானும், பார்த்து மகிழ - கண்டுகளிப்பெய்தவும், மானிடர்கள் - மனிதர்கள், மறைநெறியில் - வேதமார்க்கத்தில், மன்ன - ஒழுகி நிற்கவும், நடப்பார் - சற்கருமோபாசனைகளைச் செய்வார், எ-று.

பொ-ரை. அந்தக்கரணமானது பிரஹ்மத்தினின்றும் பிரிதலொழிந்து விளங்காநின்ற ஆன்ம சொரூபமாயிருக்கின்ற பெருமைபொருந்திய ஜீவன் முத்தியைப் பெற்றவர்கள் குளிர்ச்சிபொருந்திய இமயபர்வத ராஜனுடைய புத்திரியாகிய பார்வதிதேவியை இடப்பாகத்திலுடையவராகிய சிவபெருமானுங் கண்டுகளிப்பெய்தவும் மனிதர்கள் வேத மார்க்கத்தி லொழுகி நிற்கவும் சற்கருமோபாசனைகளைச் செய்வார், எ-று.

க-ரை. ஜீவன் முத்தர்கள் செய்யும் கருமோபாசனைகள் பரோபகாரார்த்தமாம். எ-ம், [௪]

௧௧. செருப்புடையான் மூட்காட்டிற் சென்றாலுநோ வா
னிருப்பதுதா னுக்கா ணியல்பான் — விருப்பின னு
மெவ் விடய முண்டா னெனினுந் தொடர்படை யா
னவ்வடிவ மாகாமை யால். [உ]

இ-ள், செருப்பு உடையான் - பாதரக்ஷையைக் காலிற் பூண்ட விவேகியானவன், முள்காட்டில் - [தன்பத்தைக் கொடுக்கின்ற] முள் ளிருந்த வனத்தின்கண்ணே [பாதரக்ஷையுளதென்னுஞ் செருக்குப் பற்றிச் செல்லான்], சென்றாலும் - [அவ்வனமே மார்க்கமாயிருக்குமா யின் அங்கு]ச் சென்றானாயினும், நோவான் — அதனால் துக்கமடைய மாட்டான். [அதுபோல], இருப்பதுதானாக்காண் இயல்பான் - எவ் விடத்தும் பரிபூரணமாயிருக்கின்றது பிரஹ்மமாகிய தனது சொரூப மென்று அறியுஞ் சுபாவமுடைய ஜீவன் முத்தன், [ஞானிகளாகிய தனக்கு விஷயங்களாற் கேடின்றென்னுங் கர்வத்தால் இழிவைக்கொ டுக்கின்ற நிஷித்த விஷயங்களிற் பிரவிர்த்தியான்], விருப்பினனாய் - [பிராரத்தவலியால்] ஆசையுடையவனாய், எவ்விடயம் உண்டான் எனி னும் — [விகித விஷயங்களுள்] எந்த விஷயத்தைப் புசித்தானாயினும், தொடர்பு அடையான் — [அவ்விடயானுபவத்தாற்] பந்தமடையான், [எதனாலெனில்], அவ்வடிவம் ஆகாமையால் — அவ்விஷயாகாரங்களை யடையாததினால். எ-று.

பொ-ரை. பாதரக்ஷையைக் காலிற் பூண்ட விவேகியானவன் தன் பத்தைக் கொடுக்கின்ற முள்ளிருந்த வனத்தின்கண்ணே பாதரக்ஷை யுளதென்னுஞ் செருக்குப்பற்றிச் செல்லான் அவ்வனமே மார்க்கமா யிருக்குமாயின் அங்குச்சென்றானாயினும் அதனால் துக்கமடையமாட் டான் அதுபோல எவ்விடத்தும் பரிபூரணமாயிருக்கிறது பிரஹ்மமா கிய தனது சொரூபமென்றறியும் சுபாவமுடைய ஜீவன் முத்தன்

ஞானியாகிய தனக்கு விஷயங்களாற் கேடின்றென்னும் கர்வத்தால் இழிவைக்கொடுக்கின்ற நிஷித்த விஷயங்களிற் பிரவிர்த்தியான் பிராரத்தவலியால் ஆசையுடையவனாய் விகித விஷயங்களுள் யாதொருவிஷயத்தைப் புசித்தானாயினும் அவ்விஷயானுபவத்தாற் பந்தமடையான் எதனாலெனில்? தான் அவ்விஷயாகாரங்களையடையாததினால். எ-று.

க-ரை. ஞானி விஷயங்களை அருந்தினும் அவற்றாற் பந்தமுறான். எ-ம். [௨]

கஉ. அண்ட மணுவாக வகண்டமா யற்பவ ணு
வண்டமே யாக வணுவாகி—யுண்டெனி லே
யெவ்விடத்தி லான்மா விராதொழியு மீதா ஞா
ரெவ்விடம்விட் டெங்கேகு வார். [௩]

இ·ள். அண்டம் – [வியாபகமாயுள்ள] பிரமாண்டங்களும், அணு ஆக - [தன்னை நோக்க]ப் பரமாணுவென்று கூறுமாறு, அகண்டம் ஆய் – [அப்பிரமாண்டங்களெல்லாம் தன்னுள்ளடங்க அவற்றிற்கப்பாலும் எல்லையற்ற வியாபகமாயிருத்தலின் ஏகமாய் அற்ப அணு – மிக நுட்பமாகிய பரமாணுவும், அண்டம்ஆக பிரமாண்டமாகக் கூறுமாறு, அணுஆகி – அப்பரமாணுவுக்குள்ளும் பரமாணுவாய், ஆன்மா உண்டெனில் – ஆன்மா இருக்கிறதென்று [சுருதி] கூறுமானால், எவ்விடத்தில் இராது ஒழியும் - அஃது எந்தவிடத்தி லில்லாமற்போம் [எவ்விடத்தும் நீக்கமற நிறைந்தே இருக்கும்]? ஈது ஆனார் – இத்தன்மையாயுள்ள ஆன்ம சொரூபமாயிருக்கின்ற ஞானிகள், எவ்விடம் விட்டெங்கு ஏகுவார் - எவ்விடத்தைவிட்டு எவ்விடத்தையடைவார், [தன்னிற்கற்பிக்கப்பட்ட அத்தேச காலங்கட்கு அதிஷ்டானமாயிருக்கின்ற அசலராதலின் விடுதலும் அடைதலும் இலர்]: எ-று.

பொ-ரை. வியாபகமாகிய பிரமாண்டங்களும் தன்னைநோக்கப் பரமாணுவென்று கூறுமாறு அப்பிரமாண்டங்களெல்லாம் தன்னுள்ளடங்க

அவற்றிற்கப்பாலும் எல்லையற்ற வியாபகமாயிருத்தலின் ஏகமாய் மிக வும் நுட்பமாகிய பரமாணுவும் பிரமாண்டமாகக்கூறுமாறு அப்பரமாணு வுக்குள்ளும் பரமாணுவாய் ஆன்மாவிருக்கிறதென்று சுருதி கூறுமா னுல் அவ்வான்மா எந்தவிடத்திலில்லாமற்போம் எவ்விடத்தும் நீக்கமற நிறைந்தேயிருக்கும் இத்தன்மையாயுள்ள ஆன்மசொருபமாயிருக்கின்ற ஞானிகள் எந்தவிடத்தைவிட்டு எந்தவிடத்தையடைவார் தன்னிற் கற் பிக்கப்பட்ட அநதேச காலங்கட்கு அதிட்டானமாயிருக்கின்ற அசலரா தலின் விடுதலும் அடைதலும் இலர். எ-று.

ச-ஙா. ஜீவன் முத்தர்கள் எங்கும் நிறைந்திருக்கின்ற பரிபூரண சொருபமுடையவர் எ-ம் [ரு]

[ விருத்தம் ]

கரு. காணற் கரிய வொருமணியைக் கண்டோ னெடுத்துப் பணியாக்கிப்
பேணி யணிந்து மகிழ்ந்தனுற் பெறுவான்புகழு மவன் போலென்
சாணிற் றிகழுங் கோசமைந்துந் தவிர்த்தான் மாவைத் தரிசித்தோ
னேனும் றதுவா யின்பினுறு யெவரும் விரும்ப வியங் குவனல் [ச]

இ-ள். காணற்கு அரிய - [யாவராலும்] அறிதற்கரிதாகிய, ஒரு மணி யை - ஓரிரத்தினத்தை, கண்டோன் - [ஓரிடத்திற்கிடக்கப்] பார்த்த வன், எடுத்து - [அதனை] எடுத்து, பணி ஆக்கி - ஆபரணமாகச் செய்து, பேணி - விரும்பி, அணிந்து - தரித்து, அதனுல் மகிழ்ந்து - அவ்விரத்தினுபரணத்தைத் தரித்தலால் சந்தோஷமுடையவனாய், புக

மும் பெறுவான் — [தான் மகிழ்ச்சியடைதலோடு விவேகிகளாலிசைக் கும்] கீர்த்தியையுமடைவான், அவன் போல் - அவனைப்போல, என் சாணில் - எட்டுச்சாணளவிலுள்ள சரீரத்தில், திகழும் - விளங்கா நின்ற ,கோசம் ஐந்தும் - [அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ் ஞானமயம் ஆனந்தமயமென்னும்] கோசங்களைந்தினையும், தவிர்த்து — [யானல்ல என்னுடையவுமல்லவென்று அவற்றிற்குரிய குணங்களோடு கூட வகிர்ந்து] நீக்கி, ஆன்மாவை - [பின்புமிஞ்சியிருக்கும்] ஆத்தமா வை, தரிசித்தோன் — [தானுகக்] கண்டவன், என் உற்று — நித்தியத் துவத்தையடைந்து, அதுவாய் - அவ்வான்மாவேதானுய், இன்பின னுய் — நித்தியானந்த முடையவனுய், எவரும் விரும்ப - [தன்னைக் கண்டவர்] யாவரும் விருப்பம் கொள்ளும்படி, இயங்குவன் - சஞ்சரிப் பான். எ-று

பொ-ரை. யாவராலும் அறிதற்கரிதாகிய ஓரிரத்தினத்தை ஓரிடத் திற்கிடைக்கப்பார்த்தவன் அதனையெடுத்து ஆபரணமாகச்செய்து விரும் பித்தரித்து அவ்விரத்தினுபரணத்தைத் தரித்தலால் சந்தோஷமுடைய வனுய்த்தான்மகிழ்ச்சியடைதலோடு விவேகிகளாலிசைக்குங் கீர்த்தி யையுமடைவான். அவனைப்போல எட்டுச் சாணளவிலுள்ள சரீரத்தின் கண் விளங்காநின்ற அன்னமயம் பிராணமயம் மனோமயம் விஞ்ஞான மயம் ஆனந்தமயமென்னும் கோசங்களைந்தினையும் யானல்ல என்னு டையவுமல்லவென்று அவற்றிற்குரிய குணங்களோடுகூட வகிர்ந்து நீக்கிப் பின்பு மிஞ்சியிருக்கும் ஆத்தமாவைத் தானுகக் கண்டவன் நித்தியத்துவத்தை யடைந்து அவ்வான்மாவே தானுய் நித்தியானந்த முடையவனுய்த் தன்னைக் கண்டவர் யாவரும் விருப்பங்கொள்ளும்படி சஞ்சரிப்பான். எ-று.

என் சாண் என்பது ஆகுபெயர்.

க-ரை. ஞானி பரமானந்தமுடையவனும் எல்லாராலும் விரும்பப் படுவோன். எ-ம். [௪]

௧௪. ஞான மடைந்தோன் விலக்குவழி நடவா னடக்கின் மலமருந்து
மேனந்தனக்கு மிவனிழிவா மெண்ணி யாய்ந்து பார்த் திடினே
யீன மறுபூ சுரச்சேய்பித் தியைந்த கொடிய வைண வன்போ
லானு விராக சித்தியினு லடையான் றோட மற்பமுமே. [௫]

இ-ள். ஞானம் அடைந்தோன் - [பிரஹ்மாத்ம ஐக்கிய] ஞானத்தைப்பெற்ற ஜீவன் முத்தன், விலக்குவழி - [வேதங்களில்] விதிக்கப் படாத மார்க்கத்தில், நடவான் - செல்லான், நடக்கின் - சென்றால், மலம் அருந்தும் - மலத்தை யுண்ணுகின்ற, ஏனம் தனக்கும் - [ஊர்ப்] பன்றிக்கும், இவன் இழிவு ஆம் - இக்கூடாவொழுக்கமுடையவன் றாழ்வன், எண்ணி - [அச்சீவன் முத்தனைக்] குறித்து, ஆய்ந்து - ஆராய்ந்து, பார்த்திடின் - அறியின், ஈனம் அறு - இழிவில்லாத, பூசு ரச்சேய் - பிராமணச்சிறுவனும், பித்து இயைந்த - பைத்தியம்பிடித்த, கொடிய வைணவன் — வீரவைஷ்ணவனும், போல் — [முறையே வருணாசார சமயாசாரங்களினின்றும் வழுவாதது] போல, ஆனு - நீங்காத, விராகசித்தியினுல் - வைராக்கிய பலத்தால், அற்பமும் - கொஞ்சமேனும், தோடம் - குற்றத்தை, அடையான் - பொருந்தமாட்டான். எ-று.

பொ-ரை. பிரஹ்மாத்ம ஐக்கிய ஞானத்தைப் பெற்ற ஜீவன் முத்தன் வேதங்களில் விதிக்கப்படாத மார்க்கத்திற் செல்லான் சென்றால்

மலத்தையுன் ணுகின்ற ஸர்ப்பன்றிக்கும் இக்கூடாவொழுக்கமுடைய வன் கீழாவன் அச்சிவன்முத்தனைக்குறித்து ஆராய்ந்தறியின், இழி வில்லாத பிராமணைச்சிறுவனும், பைத்தியம்பிடித்த வீர வைஷ்ணவ னும், முறையே வருணசார சமயாசாரங்களினின்றும் வழுவாதது போல, நீங்காத வைராக்கிய பலத்தால், கொஞ்சமேனுங் குற்றத்தைப் பொருந்தமாட்டான். எ-று.

ஞானிவிலக்கு வழி நடவான் என்றதால் விலக்கு வழி நடப்பவன் ஞானி அன்றென அறிக.

௧-ஊ. ஜீவன்முத்தன் வைராக்கிய பலமுடையவனாதலால் நிஷித்த விஷயங்களிற் பிரவிர்த்தியான். எ-ம் [௫]

௧௫. சில்லோர்க் கிரிய புண்ணியமுஞ் சில்லோர்க்கரும்பா வ
முஞா ன
நல்லோ னளிக்கி னவன்சமமா காட்ட மிலனே யென
வேண்டா ஞ்
சொல்லே விதைத்தோன் சொல்லடைவுஞ் சொலுமற்
றென்றே லஃதடைவும்
புல்லி விதைத்தோன் செயலோவப் புலத்தின் செய
லோ புகலுமினே [௧]

இ-ள். சில்லோர்க்கு — [தன்னை நேசித்துப் பூசித்து வணங்குகின்ற] சில விவேகிகளுக்கு, அரிய புண்ணியமும் - [பிறாலடைதற்கு] அருமையாகிய புண்ணியத்தையும், சில்லோர்க்கு - [தன்னையிகழ்ந்து தள் புறத்துகின்ற] சில அவிவேகிகளுக்கு, அரும்பாவமும் — [நீக்குதற்கு] அருமையாகிய பாவத்தையும், ஞானல்லோன் - பிரஹ்மஞானத்தை யுடைய ஜீவன்முத்தன், அளிக்கின் - கொடுப்பானாயின், அவன் - அந்த ஜீவன்முத்தன், சமம் ஆம் நாட்டம் - [விவேகி அவிவேகியாகிய

யாவரையும்] ஒரு தன்மையாகப் பார்க்கும் திருஷ்டி, இலன் எனவேண்டாம் - இல்லாதவனென்று சொல்லவேண்டாம், சொல்விதைத்தோன் - [ஓர் நிலத்தில்] நெல்லினை விதைத்தவன், சொல் [ஏ] அடைவும் - நெல்லினையே பெறுதலும், சொல்லும் - பேசாநின்ற, மற்று ஒன்றேல் - மற்றோர் தானியத்தை விதைத்திடின், அஃது அடைவும் - அந்தத் தானியத்தைப் பெறுதலும், புல்லி - அந்த நிலத்திற் சென்று, விதைத்தோன் செயலோ - விதைத்தவனுடைய செய்கையோ, அப்புலத்தின் செயலோ - அந்த நிலத்தினுடைய செய்கையோ, புகலுமின் - [உலகத்தவரே] சொல்லுங்கள். எ-று.

பொ-ள். தன்னை நேசித்துப் பூசித்து வணங்குகின்ற சில விவேகிகளுக்குப் பிறரால் அடைதற் கருமையாகிய புண்ணியத்தையும் தன்னை இகழ்ந்து வருத்துகின்ற சில அவிவேகிகளுக்கு நீக்குதற்கருமையாகிய பாவத்தையும் பிரஹ்ம ஞானத்தையுடைய ஜீவன் முக்தன் கொடுப்பானுயின், அந்த ஜீவன் முக்தன் விவேகி அவிவேகியாகிய யாவரையும் ஒரு தன்மையாகப் பார்க்கும் திருஷ்டி இல்லாதவனென்று சொல்லவேண்டாம். ஓர் நிலத்தில் நெல்லினை விதைத்தவன் அந்த நெல்லினையே பெறுதலும் பேசாநின்ற மற்றோர் தானியத்தை விதைத்திடின் அந்தத் தானியத்தைப் பெறுதலும் அந்த நிலத்திற் சென்று விதைத்தவனுடைய செய்கையோ, அந்த நிலத்தினுடைய செய்கையோ, உலகத்தவரே சொல்லுங்கள். எ-று.

சொல்லே என்பதிலுள்ள ஏகாரம் பிரித்துக்கூட்டப்பட்டது.

நெல் விதைத்தோன் நெல்லையடைதலும் வேறொன்றை விதைத்தோன் அவ்வேறொன்றை யடைதலும் எங்ஙனம் விதைத்தவன் செயலோ அங்ஙனம் ஞானியினிடத்து வணக்கமுதலியவற்றைச் செய்தவன் அவற்றின் பயனாகிய புண்ணியத்தையும் நிந்தை முதலியவற்றைச் செய்தவன் அவற்றின் பயனாகிய பாவத்தையும் அடைதல் அவ்

வணக்கமாதி கிரியைகளைச் செய்தவர் செயலேயாமென்பதும் நிலம் தன்னிடத்து எந்தெந்த வித்தினை யார்யார் விதைக்கின்றனரோ, அவ்வவர் செயலுக்கேற்ப அவ்வத் தானியங்களைக் கொடுத்தல்போல, ஞானியுந் தன்னிடத்து எவ்வெச்செயல்களை யார் யார் செய்கின்றனரோ, அவ்வவருக்கு, அவ்வச் செயலின் பயனைக் கொடுத்தலால் நிலம் போன்றவனிடத்துவிஷமதிருஷ்டி யின்றென்பதும் கண்டு கொள்க.

௧-ரை. ஜீவன் முத்தன் எல்லாரிடத்துஞ் சம திருஷ்டியுடையவனாவன். எ-ம். [௬]

௧௪. அண்டோர் விடய மாதாவிற் புசித்தா னேனு மதிலழுந்தான்
தண்டா மரையி னிலைநீரிற் சாரா வியல்போல் வேறாகக்
கண்டே யிருந்து தனதுநிலை கழலான் ஞானி யவன்கருணைக்
கண்டான் படுமிக் கிழிஞருமெய்க் கதியே முறையி னடைகுவரே. [௭]

இ-ள். அண்டு ஓர் விடயம் - [பிராரத்தவலியாற்] கிட்டுகின்ற ஒரு விஷயத்தை, ஆதாவில் - விருப்பத்துடன், புசித்தானேனும் - அநுபவித்தானாயினும், அதில் - அவ்விஷயத்தில், அழுந்தான் - [அஞ்ஞானிகளைப்போல அந்தக்கரணத்தில வாசனையேறுமாறு] மூழ்கமாட்டான், தண் – குளிர்ச்சிபொருந்திய, தாமரையின் இலை - தாமரையினது இலையானது, நீரில் - ஜலத்தினிடத்து, சாரா இயல்போல் – சம்பந்தியாத தன்மைபோல, வேறாகக் கண்டு இருந்து - [அநுபவிக்கப்படும் விஷயத்தினைத் தனக்கு] அயலாகப்பார்த்து [தான் நிருவிகாரசாக்ஷியா] யிருந்து, ஞானி – ஜீவன் முத்தன், தனதுநிலை – தன்னுடைய சுபாவ நிலையினின்றும், கழலான் – நீங்கான், அவன் – அந்த ஜீவன் முத்தனுடைய, கருணைக்கண்படும் - கிருபா நோக்கத்திற் தெரிப்

ப்பம், மிக்க இழிஞரும் - கொடிய சண்டாளரும், முறையின் - [சித்த சுத்தியடைந்து] பூமிக்ரமமாக, மெய்க்கதியே - உண்மையாகிய மோக்ஷத்தையே, அடைகுவர் - பெறுவார், எ-று.

பொ-ரை, பிராரத்தவலியாற் கிட்டுகின்ற ஒரு விஷயத்தை விருப் பத்துடன் அநுபவித்தானாயினும், அவ்விஷயத்தில் அஞ்ஞானிகளைப் போல, அந்தாக்கரணத்தில் வாசனையேறுமாறு மூழ்கமாட்டான். குளிர்ச்சிபொருந்திய தாமரையினுடையஇலையானது ஜலத்தினி டத்துச் சம்பந்தியாத தன்மைபோல, அநுபவிக்கப்படும்விஷயத்தி னைத் தனக்கு அயலாகப் பார்த்துத் தான்நிருவிகார சாக்ஷியாயிருந்து ஜீவன் முத்தன் தனது சுபாவ நிலையினின்றும் நீங்கான். அந்த ஜீவன் முத்தனுடைய கிருபாநோக்கத்திற்கெதிர்ப்படும் கொடியசண்டா ளருஞ் சித்தசுத்தியடைந்து பூமிக்ரமமாக உண்மையாகிய மோக்ஷத் தையே பெறுவார். எ-று.

மிக்க என்பதின் அகரங்குறைந்து நின்றது.

க-ரை, ஞானியினது கிருபாதிருஷ்டியின் மகிமையைப் புகழ்ந்தது, எ-ம். [எ]

௬௭. சேற்றிற் றாளி படிந்தழுந்து திறம்போ லஞ்ஞன் சித்த மெதிர்
தோற்றும் விடயங் களிலழுந்திச் சுகிக்க மயங்கும் ஞானியுளம்
பாற்றி னிழலே நிகராகப் படிந்தும் படியா ததுவா கி
யேற்றத் தாழ்வு கருதாம லெங்குஞ் சமமா யியங்கிடுமால் [அ]

இ-ள், சேற்றில் - சேற்றினிடத்தில், தாளிபடிந்து - புழுதியானது சேர்ந்து, அழுந்துதிறம்போல் - [அச்சேற்று வடிவமாக அதில்] மூழ்

குந்தன்மைபோல, அஞ்ஞன் சித்தம் — அஞ்ஞானியினுடைய மனம், எதிர்தோற்றும் விடயங்களில் - தனக்கு நேர்படுகின்ற சத்தாதி விஷயங்களில், அழுந்தி — மூழ்கி, சகிக்க— அவற்றைய நுபவித்தற்கு,மயங் கும்—மோகமடையும், ஞானி உளம்— ஞானியினுடைய மனமானது, [அவ்வாறின்றி], பாற்றின் நிழல் நிகர் ஆக - பருந்தினுடைய நிழலுக் கொப்பாக, படிந்தும்படியாதது ஆகி—பொருந்தினும் பொருந்தாததாய், ஏற்றம்தாழ்வு கருதாமல் — அவற்றின் உயர்வு தாழ்வுகளை எண்ணமல், எங்கும்-எவ்விடயத்தும், சமம் ஆய் - ஒரேவிதமாக, இயங்கும் - சஞ் சரிக்கும், எ—று.

பொ-ரை. சேற்றினிடத்திற் புழுதியானது சேர்ந்து அச்சேற்று வடிவமாக அதில் மூழ்குந்தன்மைபோல, அஞ்ஞானியினுடைய மன மானது, தனக்கு நேர்படுகின்ற சத்தாதி விஷயங்களில் மூழ்கி அவற் றையநுபவித்தற்கு மோகிக்கும் ஞானியினுடைய மனமானது அவ்வா றின்றிப் பருந்தினுடைய நிழலுக்கொப்பாகப் பொருந்தினும் பொருந் தாததாய் அவற்றின் உயர்வு தாழ்வுகளை எண்ணமல் எவ்விடயத்தும் ஒரே விதமாகச் சஞ்சரிக்கும், எ று.

பருந்தினது நிழலானது சுத்த நிலத்தில் இது நல்லதென்றும் புத் தியால் பரிசித்து விரும்பி நிற்றலும், அசுத்த நிலத்தில் இது தீயதென் றும் புத்தியால் பரிசிக்காமல் வெறுத்து நீங்குதலுமாகிய, பேதச்செய லின்றி எவ்விடத்தும் ஒரே விதமாகப் பரிசித்துச் செல்லுதல் போல், ஞானியின் அந்தக்கரண விருத்தியானது தனக்கு எதிர்ப்படுகின்ற சத்தாதி விஷயங்களுள் ஒன்றை இது நல்லதென்று விரும்பி, அவ் விடயமயமாய் அழுந்திநிற்றலும் ஒன்றை இது தீயதென்று வெறுத்து நீங்குதலுமாகிய பேதச்செயலின்றிச் சர்வவிடயங்களிலுமுள்ளாமலும் பேதங்களைக் கருதாது விடுத்து, அவற்றிற் கதிட்டான மாயுள்ள சச்சி

தானந்த வடிவ ஒரு பரம்பொருளையே கண்டு செல்லுமென்பார் "பாத்தினிழலே கிராசப் படிந்தும் படியாததுவாகி, ஏற்றத் "தாழ்வு கருதாமலெங்குஞ் சமமாயியங்கும்" என்று கூறினர்.

சு-ரை, விடயங்களை அஞ்ஞானியினுடைய மனம் விருப்புவெறுப் புற்றுக் காணும். ஞானியினுடைய மனம் ஒரே விதமாகக் காணும், எ-ம். [அ]

௯௮. கூத்தில் வேட மின்பதுன்பங் குறிப்போ னவ்வவ் வி
யல் படைவா ன்
கூத்தன் றனைவே றறிந்தோனக் குறிப்பாற் றனது நிலை
யழி யா
னூர்த்த வுடற்புந் தியனதற்கேய் துன்பா திகளா லழுங்
குவன்மெ ய்
பார்த்தோ னங்ஙனாகாது பரம சாந்த னுருவனே [௯]

இ-ள், கூத்தில் - [முன்னடந்த ஒரு சரித்திரத்தைக் காட்டுவதாகிய] நாடகத்தில், வேடம் - [ஒருநடன் அச்சரித்திரத்திற் கூறியமற்றொருவனைப் போலக் கொண்ட] கோலத்தையும், இன்பம் துன்பம் - [அக்கோலத்திற்கியைய அவ்விடத்து அந்நடன்மித்தையாயடையுஞ்] சுகதுக்கங்களையும் [கண்டு], குறிப்போன் - [முறையே அவற்றை அந்நடனது சொரூபமென்றும் அவனது சுபாவ அநுபவமென்றும்] கருதுவோன், அவ்வவ்வியல்பு அடைவான் - [அவனடையுஞ் சுகதுக்கங்களைக் கண்டு அவ்வக்காலத்துத்தானும்] அச்சுகதுக்கங்களை யடைவான், கூத்தன் தனை வேறு அறிந்தோன் - [வேட முதலியவை கூத்திற்குரிய மித்தைகளென்றும் இந்த மித்தியா வேட முதலியவற்றினும்] நடன் வேறென்றுங் கண்டவன், அக்குறிப்பால் - [மித்தையா

கிய வேட முதலியவற்றினும்] வேடதாரி வேறு என்னும் எண்ணத்தால், தனது நிலை அழியான் - தன்னுடைய சுபாவத்தினின்றும் வேறுபட்டு அவனடையுஞ் சுகாதிகளைத் தானடையான்; [அத்திருட்டாந்தம்போல], ஆர்த்த உடல்புந்தியன் - தன்னைப் பந்தித்திருக்கின்ற தேகமேதானென்னும் புந்தியையுடையவன், அதற்கு எய்தன்பு ஆதிகளால் - [பிராரத்தகன்மப்படி] அத்தேகத்துக்கு வந்து பொருந்துகின்ற துக்க முதலியவைகளால், அழுங்குவன் - வருந்துவன், மெய்பார்த்தோன் - உண்மையாகிய தனது ஆன்மசொருபத்தைத் தரிசித்தவன், அங்ஙன் ஆகாது - அவ்வாறு வருந்தாமல், பரமசாந்தன் ஆகுவன் - மேலாகிய உபசாந்தியையுடையவனுவன், எ-று.

பொ-ரை, முன்னடந்த ஒரு சரித்திரத்தைக் காட்டுவதாகிய நாடகத்தில் ஒரு நடன் அச்சரித்திரத்திற்கூறிய மற்றொருவனைப்போலக் கொண்ட கோலத்தையும், அக்கோலத்திற்கியைய அவ்விடத்து அந்நடன் மித்தையாயடையுஞ் சுகதுக்கங்களையுங் கண்டு, முறையே அவற்றை அந்நடனது சொருபமென்றும் அவனது சுபாவ அநுபவமென்றும் கருதுவோன், அவனடையுஞ் சுகதுக்கங்களைக் கண்டு அவ்வக்காலத்துத்தானும் அச்சுகதுக்கங்களை யடைவான். வேட முதலியவை நாடகத்திற்குரிய மித்தையென்றும் இந்த மித்தையாகிய வேட முதலியவற்றினும், அந்நடன் வேறென்றுங் கண்டவன் மித்தையாகிய வேட முதலியவற்றினும், வேடதாரி வேறென்னு மெண்ணத்தால் தன்னுடைய சுபாவத்தினின்றும் வேறுபட்டு, அவனடையுஞ் சுகாதிகளைத் தானடையான், அத்திருஷ்டாந்தம்போலத் தன்னைப் பந்தித்திருக்கின்ற தேகமேதானென்னும் புத்தியையுடையவன், பிராரத்த கன்மப்படி, அத்தேகத்துக்கு வந்து பொருந்துகின்ற துக்க முதலானவைகளால், வருந்துவன். உண்மையாகிய, தனது ஆன்ம சொருபத்

தைத் தரிசித்தவன் அவ்வாறு வருந்தாமல், மேலாகிய உபசாந்தியை யுடையவனுவன், எ-று.

க-ரை. தேகத்தைக்கு வருந்துன்பத்தால் அஞ்ஞானி வருந்துவன் ஞானி வருந்தான். எ-ம். (௯)

(௪) வது அடைந்தாரியல் முற்றிற்று.

## (௫)-வது பொய்வேட வொழிபியல்.

[கட்டளைக் கலித்துறை]

௧௧. விடயமன் ளுதகண் டாகாரந் தன்னில் விருத்தி நிலைத்
திடையற் றிருப்பது வோநுதன் மேல்விழி யேற்றி
நித்த ந்
திடவா சனத்துற் றுடறறி யோனிற்கத் தீய்மன த்
துடனே புழல்வது வோநிட்டை கூறுமி 'னாமர்
களே (௧)

இ-ள். ஊமர்களே - ஊமைகளே, நிட்டை - ஞான நிட்டையெனப் படுவது, விருத்தி - அந்தக்கரண விருத்தியானது, விடயம் மன்றுத-யாதொரு விஷயாகார (வடிவ) த்தையும் தரிக்காமல், அகண்ட ஆகாரம் தன்னில் - பிரஹ்மமாகிய ஒரே சொரூபத்தில், நிலைத்து - நிலைபெற்று, இடை அற்று - மத்தியில் இலய முதலிய பிரதி பந்தங்களின்றி, இருப்பதுவோ - நிற்பதோ, [அல்லது], நுதல்மேல் விழி ஏற்றி - புருவத்தின் மீது கண்ணை ஏறச்செய்து, நித்தம் - அநுதினமும், திட ஆசனத்து உற்று - [தியானத்திற்கு] உறுதியைத் தருகின்ற [பதும முதலிய] ஆதனத்தைப் பொருந்தி, உடல் தறிபோல்

நிற்க - சரீரமானது தூணைப்போல் அசைவற்றிருக்க, நிய மனத்துடனே - கேட்டைத்தருகின்ற ஆசை பொருந்திய மனதோடே, உழல்வதுவோ - விடயங்களிற் சுழல்வதோ, கூறுமின். சொல்லுங்கள். எ—று.

பொ-ரை. ஊமைகளே, ஞான நிட்டையெனப் படுவது, அந்தக்கரண விருத்தியானது யாதொரு விஷயாகாரங்களையுந் தரிக்காமல் பிரஹ்மமாகிய ஒரே சொருபத்தில் நிலைபெற்று மற்றியில் இலய முதலிய பிரதி பந்தங்களின்றி நிற்பதோ அல்லது புருவத்தின்மீது கண்ணையேறச் செய்து அனுதினமுந் தியானத்திற் குறுநிலையைத் தருகின்ற பதும முதலிய ஆதனத்தைப் பொருந்திச் சரீரமானது தூணைப்போலசைவற்றிருக்கக்கேட்டைத் தருகின்ற ஆசை பொருந்திய மனதோடே விஷயங்களிற் சுழ்ல்வதோ? சொல்லுங்கள். எ—று.

கூ—ரை ஞான நிட்டையின்றி அஃதுடையார் போலத் தம்மைக் காட்டுவோர்க்கு அஃதனங் காட்டற்கவென்று அறிவுறுத்தியது. எம். (௪)

க00. படிப்பார் சிவாலயஞ் சென்றருட் பாக்கள்பகலி விலிடிப்பா ரதுகன்னக் கோலாற்பட் டாடை யிடையிலங் க
நடிப்பா ருயர்ந்தசை வாசா ரியரி னகர்ப்புறம்போய்க்
குடிப்பார்கட் சுள்ளுண் டிவரே நாகக் குடிமனரே.(௨)

இ-ள். பகல் - பகற்காலத்தில், சிவாலயம்சென்று - தேவாலயத்திலே போய், அருள்பாக்கள் — அருள் நிறைந்த [தேவார திருவாசக முதலிய] பாட்டுக்களை, படிப்பார் - பாடுவோர்கள், இரவில் - இராத்திரியில், அது - அத்தேவாலயத் திருமதிலில், கன்னக்கோலால் - கன்னமிடுங் கருவியினாலே, இடிப்பார்- [அதிலுள்ள தேவத் திரவியங்களைக் கவரும் பொருட்டு உள்ளே நுழைதற்குத்] துவாரமிடுவோர்கள், பட்டு ஆடை— பட்டு வஸ்திரமானது, இடைஇலங்க - இடுப்பில் பிரகாசிக்க,

உயர்ந்த - மாட்சிமை பொருந்திய, சைவாசாரியரின் - சைவ சமயக் குருக்கள் போல, நடிப்பார் - வெளிப்படுவோர்கள், நகர்ப்புறம் போய் - ஊருக்குப் பக்கத்தே சென்று, சுன் உண்டு - உலர்ந்து தீயிற் காய்ந்த மீனைத்தின்று, கள் குடிப்பார் - கள்ளைப்பருகுவார்கள், இவரே நரகக் குடிமனர்- இச்செயலுடையவரே நரகமாகிய பட்டினத்திற்கு அரசராவார். எ—று.

பொ—ரை. பகற்காலத்தில் தேவாலயத்திலே போய் அருள் நிறைந்த தேவார திருவாசக முதலிய பாட்டுக்களைப் பாடுவோர்கள். இராத்திரியில் அத்தேவாலயத் திருமதிலிற் கன்னமிடும் கருவியினாலே அதிலுள்ள தேவத்திரவியங்களைக் கவர்தற் பொருட்டு உள்ளே நுழைவதற்குத் துவாரமிடுவோர்கள். பட்டு வஸ்திரமானது இடுப்பில் பிரகாசிக்க மாட்சிமை பொருந்திய சைவசமயக் குருக்கள் போல வெளிப்படுவோர்கள் ஊருக்குப்பக்கத்தே சென்று உலர்ந்து தீயிற் காய்ந்த மீனைத்தின்று கள்ளைக் குடிப்பார்கள். இச்செயலுடையவரே, நரகமாகிய பட்டினத்திற்கு அரசராவார். எ—று.

மன்னர் என்னும் உயர்வுமொழி குறிப்பால் அவரது இழிவையுணர்த்தி நின்றது.

க—ரை திருட்டு முதலிய கூடாவொழுக்க முடையோர், நரகத்துன்பமடைவர். எ—ம். [உ]

௧0௧. எல்லிலெல் லாமங் கையரையுந் தாயென் றெணுவமென் பா
ரல்லிலன் றூரிட மின்பநல் கிரென் பரையமிட ச்
சொல்லிடு வாரொரு சொல்லு மிடாரிவர் காலனன்று
வல்லிடி போலெதிர் வந்திடி லென்செய வல்லுநரே (௩)

இ-ள். எல்லில் – பகற்காலத்தில், எல்லா மங்கையரையும் - சகல பெண்களையும், தாய் என்று - மாதாவென்று, எணுவம் என்பார் - நினைப்போ மென்று சொல்லுவார், அல்லில் – இராக்காலத்தில், அன்னரிடம் - அப்பெண்களிடத்தில் [சென்று], இன்பம் நல்கீர் என்பர் - சுகபோகத்தைக் கொடுக்கவென்று கெஞ்சுவார்கள், ஐயம் இடச் சொல்லிவோர் - [பிறரை ஏழைகளுக்குப்] பிச்சையீயுமாறு சொல்வார்கள், ஒரு சொல்லும் இடார் - தாம் ஒரு நெல்லும் பிறர்க்கீயோர்கள், இவர் - இங்கள வொழுக்க முடையவர், வல்இடிபோல் – பலம் பொருந்திய இடியையொப்பாகக் [கர்ச்சித்து], காலன் – இயமன், அன்று - மரண சமயத்தில், எதிர் வந்திடில் - தம்முன்வரின், என்செய வல்லுநர் - யாது செய்ய வல்லவராவர். எ—று.

பொ-ரை, பகற்காலத்திற் சகல பெண்களையும் மாதாவென்று நினைப்போமென்று சொல்வார்கள். இராக்காலத்தில் அப்பெண்களிடத்திற்சென்று சுகபோகத்தைக் கொடுக்கவென்று கெஞ்சுவார்கள். பிறரை ஏழைகளுக்குப் பிச்சை யீயும்படி சொல்வார்கள். தாம் ஒரு நெல்லும் பிறர்க்கீயோர்கள். இக்களவொழுக்கமுடையார் பலம்பொருந்திய இடியை யொப்பாகக் கர்ச்சித்து இயமன் மரண சமயத்தில் தம் முன்வரின். யாது செய்ய வல்லவராவர், எ-று.

க-ரை, களவொழுக்கமுடையார். இயம தண்டனையினின்றும் மீளார். எ-ம். (௩)

[ வெண்பா ]

௪0௨ புலியின்றோல் போர்த்துப் புலப்பைங்கூழ் தின்னும்
வலியில் பசு வென்றான் மாறே—மெலிவார்க்கல்
வேட்டியசன் கண்மணியே வெண்ணீறே வேதமொழி
காட்டிச் சுகம்பறிப்பா ரை. [௪]

இ-ள்; மெலிவால் - [ஊர்தோறும் மனைதோறுஞ் சென்றேற்பதாகிய மெய்த் துறவிகளுக்குரிய பிச்சாசன முதலியவற்றால் ஜீவித்தற் கேதுவாகிய வைராக்கியத்தின்] குறைவால், கல்வேட்டி - உடுத்திருக்கின்ற] காவி வஸ்திரத்தினாலும், அரன்கண்மணி - [அணிந்திருக்கின்ற] உருத்திராக்கமணியினாலும், – வெண்ணீறு - [தரித்திருக்கின்ற] விபூதியினாலும், வேதமொழி - [உபதேசிக்கின்ற] வேதவாக்கியங்களாலும், காட்டி - [தம்மை மெய்த்துறவிகள்போலப் பிறருக்குக்] காண்பித்து, சகம் - [பிறர்க்குரிய] விஷய இன்பங்களுக்குச் சாதனமாகிய திரவியத்தை, பறிப்பாரை - அபகரிப்பவர்களை, புலியின்தோல் - [தான் புலிபோலப் பிறர்க்குத் தோன்றுமாறு] அப் புலியினுடைய தோலை, போர்த்து - மூடிக்கொண்டு, புலப்பைங்கூழ் - வயலில் விளைவித்திருக்கின்ற பிறர்க்குரிய பயிரினை, தின்னும் - [எளிதின்] மேய்கின்றதும், வலியில் – [சேய்மைக்கட்சென்று தனக்குரிய புல்மேயப்] பலமற்றதுமாகிய, பசு என்றால் - பெற்றம் என்று சொன்னால், மாறோ - அச்சொல்விரோதமோ [அல்ல உண்மையே]. எ-று.

பொ-ரை, ஊர்தோறும் மனைதோறுஞ் சென்றேற்பதாகிய, மெய்த் துறவிகளுக்குரிய பிச்சாசன முதலியவற்றால், ஜீவித்தற்கேதுவாகிய வைராக்கியத்தின் குறைவால், உடுத்திருக்கின்ற காவி வஸ்திரத்தினாலும், அணிந்திருக்கின்ற உருத்திராக்கமணியினாலும், தரித்திருக்கின்ற விபூதியினாலும், உபதேசிக்கின்ற வேதவாக்கியங்களாலும், தம்மை மெய்த்துறவிகளைபோலப் பிறருக்குக் காண்பித்துப் பிறர்க்குரிய விஷய இன்பங்களுக்குச் சாதனமாகிய திரவியத்தை அபகரிப்பவர்களைத் தான் புலிபோலப் பிறருக்குத்தோன்றுமாறு, அப்புலியினுடைய தோலை மூடிக்கொண்டு வயலில் விளைவித்திருக்கின்ற பிறர்க்குரிய பயிரினை எளிதின்மேய்கின்றதும், சேய்மைக்கட்சென்று

தனக்குரிய புல் மேயப் பலமற்றதுமாகிய பெற்றம் என்று சொன்னால் அச்சொல் விரோதமோ அல்ல உண்மையே, எ-று.

க-ரை, தமக்குரிய தருமத்தை விட்டுப் பிறர்க்குரியவைகளை அபகரிப்பவர் துறவறத்தாரல்லர், எ-ம். [௪]

௧0௫ திருட்டிற் றிரிந்தடுத்த தேக வனுர்ச்சூரா ன்
மருட்டி வயிறோம்ப வேடந் —தரித்தவ ரே
வித்தார மன்னியர்பாற் பேசி விழைந்தவலி ந்
தெத்திப் பிழைக்கு மிவர். [௫]

இ-ள். வித்தாரம் - விரிவான வாக்கியங்களை, அந்நியர்பால் - அயலாரிடத்தில், பேசி - சொல்லி, விழைந்த - தம்மாலிச்சிக்கப்பட்ட பொருள்களை, வலிந்து எத்தி - வலாற்காரமாக வஞ்சித்துக் கவர்ந்து, பிழைக்கும் இவர் - ஜீவிக்கின்ற இப்பொய் வேஷத்தவர்கள், திருட்டில் - களவுத்தொழிலில், திரிந்து - நாடெங்குமலைந்து, அடுத்த தேக அனுர்ச்சூரால் — [அக்களவுத் தொழிலால் தமது சரீரத்திற்கு முன் இராஜ தண்டனையால்] உண்டாகிய துன்பத்தின் பயத்தால் [அத்தொழிலைக் கைவிட்டு], மருட்டி — அயலாரை மயக்கி, வயிறு ஓம்ப [ஏ] - தமது சரீரத்தைப் பாதுகாக்கவே, வேடம் தரித்தவர் — வேஷத்தைப் பூண்டவர்களாவர் [அஃதன்றிப் புருஷார்த்தத்தின் பொருட்டுப் பூண்டவராகார்]. எ-று.

பொ-ரை, விரிவான வாக்கியங்களை அயலாரிடத்திற் சொல்லித் தம்மாலிச்சிக்கப்பட்ட பொருள்களை வலாற்காரமாக வஞ்சித்துக் கவர்ந்து ஜீவிக்கின்ற இப்பொய் வேஷத்தவர்கள் களவுத்தொழிலால் நாடெங்குந் திரிந்து அக்களவுத்தொழிலால் தமதுசரீரத்திற்கு முற்காலத்தில் இராஜ தண்டனையாலுண்டாகிய துன்பத்தின் பயத்தால் அத்தொழிலைக் கைவிட்டு அயலாரை மயக்கித் தமது சரீரத்

தைப் பாதுகாக்கவே வேடம் பூண்டவராவர் அஃதன்றிப் புருஷார்த் தத்தின் பொருட்டுப் பூண்டவராகார். எ-று.

பிரித்துக் கூட்டப்பட்ட எகாரந்தேற்றப் பொருளது பிரிநிலை யெனினுமமையும்.

புருஷார்த்தத்தின் பொருட்டுப் பூண்டயதி தருமத்திற்குதாரணம்,

"கந்தையா யிரங்க ளுடைக் கெளபீனவுடைநடுப் பக லிலே தா னே
வந்த பிச்சை யூண்காடு சுடுகாட்டுப் படுக்கைக ணன் மார்க்க சித்த ம்
பந்த மற்றுத் திரிதல் சிவயோக நிட்டைப் பழக்கம்"
எனப் பர்த்துரு கரியும்,

"உச்சியம் போதின் மீதரும் பசிக்கவ் வூர்வல மாயிலர் தோறு ம்
பிச்சைகை யிடையிற் காடிகூ ழேனும் பெற்றது பற்றி யுள் வெறுப் போ
டிச்சையற் றருந்திப் பொருந்த வேகாந்தத் திடையி னுந் தாகம்வந் தடை யி
னச்சிரீ ரூரிற் புகுந்துரு தேரி யாதியி லருந்துத லன்றே"

எனவைராக்கிய தீபத்தில் சாந்தலிங்க சுவாமிகளும் கூறியிருத்தல் காண்க.

க-ரை. பிரகஸ்தரை மருட்டி அவர்பால் தமக்கு விருப்பமாகிய வஸ் துக்களை அபகரிப்பவர் துறவிகளல்லர். எ-ம். [௫]

(௫) வது பொய்வேடவொழிபியல் முற்றிற்று.

## (௬) வது அவிவேகியியல்

[விருத்தம்]

௧0௪. விடய மொன்றுமில் லாதசுழுத்தியிற் றன்சுக வடிவா
விளங்கக் கண்டும்
மிடிதரு மாயையின் புணர்ப்பா லதைவிட யந்தொறு
ந்தேடி வீழ்ந்து மாய்வோன்
படியினிற் றன்றனைக் காணான் றேடி யொருகிணற்
றறலுட் பார்த்து மெய்ச்சி
முடிபிடித் தீர்த்திட விழுந்து மாய்ந்த முழுமூடனுக்கு
முன்னோனாமே (௧)

இ-ள் விடயம் ஒன்றும் — சத்தாதி விஷயங்களுள் யாதொரு விஷயமும், இல்லாத சுழுத்தியில் - சுழுத்தியவஸ்தையில், சுகவடிவா - ஆனந்த சொருபமாக, தான்விளங்கக்கண்டும் - தான் தோன்றப்பார்த்தும், மிடிதரும் - [சுகம்] இன்மையை (துக்கத்தை)க்கொடுக்கின்ற, மாயையின் புணர்ப்பால் - அவித்தியா சம்பந்தத்தால், அதை - அந்தத் தனது சொருபத்தை, விடயந்தொறும் - ஒவ்வொரு விஷயங்களிலும், தேடி - இருப்பதாகப் பார்த்துப்பார்த்து, வீழ்ந்து - அவ்விஷயங்களுள் மூழ்கி, மாய்வோன் - இறப்போன், படியினில் - உலகத்தில், தனைக்காணான் - தன்னைக் காணவில்லையென்று மயக்கமடைந்தவொருவன், தேடி - பலவிடங்களிலும் விசாரித்துச்சென்று, ஒரு கிணற்றறலுள் பார்த்து - [பின்பு] ஒரு கிணற்று நீரினுள்ளே [தோன்றும் தனது பிரதிவிம்பத்தைத்தானென்று] கண்டு, மெய்ச்சி - [அவ்வளவு கண்டுகொண்டதன்னைப்] புகழ்ந்து, முடிபிடித்து — [அப்பிரதி

விம்பத்தின்] குடுமியைப் பற்றி, ஈர்த்திட - இழுத்துக்கரை யேற்று தற்காக, விழுந்து - [அக்கிணற்று நீரினுள்ளே] வீழ்ந்து, மாய்ந்த- பிராணனைவிழந்த, முழு மூடனுக்கும் - அற்பமும் அறிவிலானுக்கும், முன்னோன் ஆம் - முதல்வனுவன். எ-று.

பொ-ரை சத்தாதி விஷயங்களுள், யாதொரு விஷயமுமில்லாத சுழுத்தியவஸ்தையில் ஆனந்தசொருபமாகத் தான்தோன்றப்பார்த் தும் துக்கத்தைக்கொடுக்கின்ற அவித்தியாசம்பந்தத்தால் அந்தத்த னது சொருபானந்தத்தை ஒவ்வொரு விஷயங்களிலும் இருப்பதாகப் பார்த்துப்பார்த்து, அவ்விஷயங்களுள் மூழ்கியிறப்போல் உலகத்தில் தன்னைக்காணவில்லையென்று மயக்கமடைந்த வொருவன் பல விடங்களிலும் விசாரித்துச்சென்று, பின்பு ஒரு கிண ற்று நீரினுள்ளே தோன்றுந்தனதுபிரதிவிம்பத்தைத்தானென்றுகண் டு, அவனைக் கண்டுகொண்ட தன்னைப் புகழ்ந்து அப்பிரதி விம்பத் தின் குடுமியைப்பற்றி இழுத்துக் கரையேற்றுவதற்காக, அக்கிணற்று நீரினுள்ளே விழுந்து, பிராணனை விழந்த அற்பமும் அறிவிலானுக்கும் முதல்வனுவன். எ-று.

காணுன் என்பது வினைபாலனையும் பெயர்.

க-ரை தான் ஆனந்தசொருபமென்று சுழுத்தியவஸ்தையில் அனுபவித்தறிந்தும் அவிவேகி அவ்வானந்தத்தை விடயத்திலிருப்ப தாகப் பிராந்தியடைந்து வருந்துகின்றுன். எ-ம். (௯)

௧0௰. அட்டினும் பால்சுவை குன்றுமை யெனவவித்தை
யுற்று மான்மா வின்ப க்

கட்டியென் றானஞ் சொலவும் காணும லுடலெ
னவேகானுநோக்கை க்

கெட்டிறந்து பிறந்துதுய ருறுகின்றே மெனவருந்
திக் கிளக்க வுங்க ட்
கிட்டமுற வுணர்த்தினதஞ் ஞானமே பிறிதுண்டே
லிசைத்திடீரே (௨)

இ-ள் பால் அட்டிடினும் - பாலைத் தீயின்கட் காய்ச்சினாலும், சுவை குன்றாமையென - உருசி குறையாமை போல, ஆன்மா அவித்தை உற்றும் - ஆன்மாவானது அவித்தையைப் பொருந்தினும், இன்பக்கட்டிஎன்று - சச்சிதானந்தகனமாயிருப்ப[தன்றி அதினின்றும் வேறுபடுவதில்லை] யென்று, ஆரணம்சொலவும - வேதங்கள் முறையிடவும், காணாமல் — அவ்வாறு ஆன்மா சச்சிதானந்த கனமென்பதை யறியாமல், உடல் எனவே காணும் நோக்கை — ஆன்மாதேகமே [யாவதன்றி இதற்கு வேறாகவில்லை] யென்று அறியும் அறிவை, கெட்டு இறந்து - [ஆன்மாவாக வறிந்த தேகம்] அழிய மரித்தும், பிறந்து - [தேகமுண்டாக] ஜனித்தும், துயர் உறுகின்றேம்என - துன்பப்படுகின்றோ மென்று, வருந்தி — கவலைப்பட்டு, கிளக்க - சொல்லுமாறு, உங்கட்கு - [அவிவேகிகளே] உங்களுக்கு, இட்டம்உற - விருப்பமுண்டாக, உணர்த்தினது - அறிவித்தது, அஞ்ஞானமே — அஞ்ஞானமே [யன்றிப்பிறிதில்லை], பிறிது உண்டேல் - அந்நிய வஸ்துவதாயின், இங்கு - இவ்விடத்து, இசைத்திடீர் — அதனைச் சொல்லுங்கள். எ—று.

பொ—ரை பாலைத்தீயின்கட் காய்ச்சினாலும் உருசி குறையாமை போல ஆன்மாவானது அவித்தையைப் பொருந்தினும் சச்சிதானந்த கனமாயிருப்பதன்றி அதினின்றும் வேறுபடுவதில்லையென்று வேதங்கள் முறையிடவும் அவ்வாறு ஆன்மா சச்சிதானந்த கனமென்பதை

யறியாமல் ஆன்மா தேகமேயாவதன்றி இதற்கு வேறாகவில்லை யென்று அறியும்அறிவை ஆன்மாவாக வறிந்ததேகம் அழிய மரித்தும் தேகமுண்டாக ஜனித்தும் துன்பப்படுகின்றோமென்று கவலைப் பட்டுச் சொல்லுமாறு அவிவேகிகளே உங்களுக்கு விருப்பமுண்டாக அறிவித்தது அஞ்ஞானமேயன்றிப் பிறிதில்லை அந்நிய வஸ்துளதாயின் இவ்விடத்து அதனைச் சொல்லுங்கள், எ-று.

நோக்கு அறிவின்மேல் நின்றது கெட்டு என்பது செயவெனெச் சத்திரிபு. கெட என்றதால் உண்டாகவென்பது வருவிக்கப்பட்டது. அறிவிக்காத அஞ்ஞானத்தை அறிவித்ததாகக் கூறியது மாபு வழுவமைதி.

க—ரை, ஆன்மா சச்சிதானந்த வடிவமென்று சருதிகூறக் கேட்கப்படினும் அவித்தியா மோகிதர்களுக்குத்தேகான்மபுத்தி நீங்காது. எ-ம், [௨]

௧௦௬ எங்குநிறை பாற்கடலுள் ளனவாதங் கள்வெறிய னிருந்தா னேனும்
அங்கதனை யருந்தாமல் விரும்புகள்ளே துருவியழுங் குறுமா றொப்பக்
கங்குல்பக லறுஞான சுகத்திருந்து மஞ்ஞானக் கட்டுட் பட்டோர்
பங்கமறு விடயமெங்கே யெனத்தேடித் தேடிமனம் பதைக்கின் றாமே (௩)

இ-ள் கள் வெறியன் - கள்ளினையே பருகிப்பருகி உன் மத்தங் கொண்ட வொருவன, எங்கும் - எவ்விடத்தும், நிறை - பூரித்திருக்கின்ற, பால் கடலுள் - பாற்சமுத்திரத்தினிடத்து, அனவரதம் - எக்

காலமும், இருந்தானேனும் - வசித்தானுயினும், அங்கு - அவ்விடத்து நிறைந்துள்ள, அதனை - அப்பாலினை, அருந்தாமல் – பருகாமல், விரும்புகள்ளே - [முன்பருகிய பழக்கத்தால் தன்னால்] இச்சிக்கப்பட்ட கள்ளினையே, தருவி - தேடி, அழுங்குறும் ஆறு ஒப்ப – வருத்தமடையுந் தன்மைபோல, கங்குல் பகல்அறு - மறப்பு நினைப்பில்லாத, ஞானசுகத்து இருந்தும் - அறிவு மயமாகிய பூரணானந்தத்தின்கண்ணே வசித்தும், அஞ்ஞானக்கட்டுள் பட்டோர் - அஞ்ஞானத்தாலாகிய ஜனனுமி பந்தத்தின்கண் அகப்பட்டுக்கொண்டவர்கள் [பூர்வ ஜன்மப்பழக்கத்தால்], பங்கம் அறு - [சகமாறு படுதலாகிய] குற்றமற்ற, விடயம் – சத்தாதி விஷயங்கள், எங்கேஎன - எவ்விடத்திருக்கின்றன வென்று, தேடித்தேடி - விசாரித்து விசாரித்து, மனம் பதைக்கின்றார் - இருதயந் துடிக்கின்றார்கள். எ—று.

பொ—ரை. கள்ளினையே பருகி உன்மத்தங் கொண்டவொருவன் எவ்விடத்தும் பூரித்திருக்கின்ற பாற்சமுத்திரத்தினிடத்து எக்காலமும் வசித்தானுயினும் அவ்விடத்து நிறைந்துள்ள, அப்பாலினைப் பருகாமல் முன் பருகிய பழக்கத்தால் தன்னாலிச்சிக்கப்பட்ட கள்ளினையே தேடி வருத்தமடையுந் தன்மைபோல, மறப்பு நினைப்பில்லாத அறிவு மயமாகிய பூரணானந்தத்தின் கண்ணே வசித்தும் அஞ்ஞானத்தாலாகிய ஜனனமிபந்தத்தினுள்ளே அகப்பட்டுக்கொண்டவர்கள், பூர்வ ஜன்மப்பழக்கத்தால் சகமாறுபடுதலாகிய குற்றமற்ற சத்தாதிவிஷயங்கள் எவ்விடத்திருக்கின்றன வென்று விசாரித்து விசாரித்து இருதயந்துடிக்கின்றார்கள். எ-று,

"ஞானசுகத்து இருந்தும்" என ஆசிரய ஆசிரித பாவங் கூறினது ஆனந்த வடிவப்பிரஹ்மத்தின் கண் ஆபாச சகித அந்தக்கரண வடிவ ஜீவன் அத்தியஸ்தமாயுளனென்பது தோன்றுதற்கென்க.

க-ரை. ஜீவர்கள் ஆனந்த வடிவப் பிரஹ்மத்தின்கண் இருந்தும் அதனை அநுபவிக்காமல் பூர்வவாசனையால் விடயத்தை விரும்புகின்றார். எ-ம். (௫)

௬௰௭. பழுதறநிட் காமகன்மம் பண்ணி நண்ணும் பலத்
தாலே பரிபாகப்பட்
டெழுதலிலா தொளிருமன முடையவர்க ளநுபவிக்கு மின்
போ ராதார்
தொழிலறிலின் புறு மெனல்கேட் டுளதொழிலு மொழித்
தயின்று தூங்கின் பாவ
விழுமிதென வியப்புறுவா ரிவர்விலங்கோ டனையரென
விளம்ப லாமே (௪)

இ-ள். பழுதற-குற்றமில்லாமல், நிட்காம கன்மம் பண்ணி-பலேச்சையை விடுத்து எஞ்ஞாதி சற்கிரியைகளைச்செய்து, நண்ணும்-அக்கிரியைகளாற் பொருந்தும், பலத்தால்-புண்ணியத்தினால், பரிபாகப் பட்டு-பக்குவமடைந்து, எழுதல் இலாது-[அதனால் விஷயங்களிற்] செல்லுதலின்றி, ஒளிரும்மனம்-[பிரஹ்மாகாரமடைந்து] விளங்கா நின்றஅந்தக்கரணத்தை, உடையவர்கள், அநுபவிக்கும்-[இரவினும் அற்பகால நித்திரை செய்தெழுந்து சமாதியிலிருந்து] அநுபோகஞ் செய்கின்ற, இன்பு ஓராதார்-பிரஹ்மானந்தத்தை யுணராதவர்கள், தொழில் அறில்-கிரியை நீங்கியவிடத்து, இன்பு உறும எனல் கேட்டு-[சும்மாவிருக்கிற் சுகஞ்சுகமென்று சுருதியெல்லாம், அம்மாநிரந்தரஞ் சொல்லவுங்கேட்டும் என்று பெரியோர்வாக்கியங்கள்] ஆனந்தமுண்டாகுமென்று சொல்வதைக் கேட்டு, உளதொழிலும் ஒழித்து-[முன் செய்துவந்த அற்பமா]யுள்ள கருமங்களையும் பயனைக் குறித்துஞ் செய்யாது விடுத்து, அயின்று-[வேளைதோறும் வயிறு நிரம்ப]வுண்டு,

தூங்கி [பகலிலும்] நித்திரை செய்து, இன்பு - அந்நித்திரையாலுண்டா குஞ்] சுகம், ஆஅ விழுமிது என - ஆவ [மிக] மேலாகியதென்று, வியப்பு உறுவர் - ஆச்சரியமடைவார்கள், இவர் - இம்மனுடரை, விலங்கோடு - மிருகங்களுடன், அனையரென - ஒப்பாவரென்று, விளம்பலாம் - சொல்லலாம். எ - று.

பொ-ரை, குற்றமில்லாமல் பலேச்சையை விடுத்து எஞ்ஞான சற்கிரியைகளைச் செய்து, அக்கிரியைகளாற் பொருந்தும் புண்ணியத்தினால் பக்குவமடைந்து, அதனால் விஷயங்களிற் செல்லுதலின்றிப் பிரஹ்மாகாரமடைந்து விளங்காநின்ற அந்தக்கரணத்தையுடையவர்கள் இரவினும் அற்பகால நித்திரை செய்தெழுந்து சமாதியிலிருந்து அனுபோகஞ் செய்கின்ற பிரஹ்மானந்தத்தை யுணராதவர்கள் கிரியை நீங்கியவிடத்துச் சும்மாவிருக்கிற் சுகஞ்சுகமென்று சநுஷியெல்லாம் அம்மாநிரந்தாஞ் சொல்லவுங் கேட்டும் என்று பெரியோர் வாக்கியம் ஆனந்தமுண்டாகுமென்று சொல்வதைக் கேட்டு, முன்செய்துவந்த அற்பமாயுள்ள கருமங்களையும் பயனைக்குறித்துஞ் செய்யாது விடுத்து வேளைதோறும் வயிறு நிரம்பவுண்டு, பகலிலும் நித்திரைசெய்து அந்நித்திரையாலுண்டாகுஞ் சுகம் ஆவமிகமேலாகியதென்று ஆச்சரியமடைவார்கள், இம்மனுடரை மிருகங்களுடன் ஒப்பாவரென்று, சொல்லலாம். எ—று

தூங்கி என்பதின், இகரவிகுதி நோக்கு நின்றது.

பகலிலுந் தூங்குந் தூக்கத்தையும் அதனாலுளதாகுஞ் சுகத்தையும் பரலோக புத்தியில்லாதமிருகங்கள் விரும்புவனவேயல்லாமல் பரலோகபுத்தியுடைய மக்கள் அதனையடைதற்குரிய சற்கருமங்களைச்செய்ய வொட்டாதுதடுக்கும் பிரதிபந்த ரூபமாயிருக்கின்றதென்றறிந்து இரவிலுங்கூடமிகுதியாகத்தூங்கார், இயா தமக்கு விதித்து

ள்ள நித்தியாதி அற்பகருமங்களையும் துக்கமெனக் கருதிப்பயனைக் குறித்துஞ் செய்யாமல் விடுத்துக்ஷேமப் பிரதிபந்த ரூபமாயிருக்கின்ற அந்நித்திரையை இரவிலும் பகலிலும் விரும்பிச் செய்து அதனாலுளதாகுஞ் சுகத்தையநுபவித்து வியப்புறுதலின் அவரை மனிதரோ டொப்பிடுத லாகாதென்பார் "இவர் விலங்கோ டனையரெனவிளம்பலாம்" என ஒப்பில்லாத விலங்கோடு ஒப்புக்கூறினர் இஃது விலங்கொடு மக்களனையர்" என்றாற்போல ஒப்பல்லொப்புப் பொருளென்றறிக.

பகலில் நித்திரை செய்யலாகாதென்பதற்குதாரணம்,

வைராக்கிய தீபம்.

"தென்பா வையினுட் கழிவட பாவைசேர்நுகத் துணையினிற் செலல் போ
லொன்பதிற் றென்ப தோடுமூ விலக்க முளவியோனியும்பிழைத் தேறிப்
பின்பிறப் பிதுபெற் றிதனினும் பாதி பிறப்புறு நாளதாக் குனி
னின்பமீ தெனமிக் குறங்கலர் பிறவிக் கறவெரீஇ யுளங்துளங் கிடுவார்"

என்று கூறுதல் காண்க-

இதில் இரவின்மிக்குறங்கலர் என்றமையால் பகலிற்றூங்கலாகாதென்பது சொல்லாமே யமையும்.

க. வை நித்திரையிலுளதாகுஞ் சுகத்தை மோக்ஷசுகமெனக்கருதி எப்பொழுதுந் தூங்குபவர் மிருகத்தோடொப்பாவர். எ—ம். (௪)

௧0அ. ஆனந்த மாம்பிரஹ்மத் திருந்துமுயிர் மலமறைப்பா லதனை நீக் கி
யீனந்தங் கியவிடயர் தொறுஞ்சார்த னல்லாவி னினிமை வாய்ந் த

பானந்தி யழகொழுதம் பருமடிவாழ் வுறுமுணியப்
பாலுணுச்செம்
பானினைந்தே யுரியதென வறிவிழந்து தமக்கருந்தும்
பான்மை யாமே (௫)

இ-ள். உயிர் - ஜீவர்கள், ஆனந்தம் ஆம் பிரஹ்மத்து - [அஸ்தி பாதிப்] பிரிய சொருபமாகிய பிரஹ்மத்தினிடத்தில், இருந்தும் - வாசஞ் செய்தும், மல மறைப்பால் - அஞ்ஞான மறைப்பினாலே, அதனை நீக்கி - அவ்வானந்தத்தை அநுபவியாது விடுத்து, ஈனம் தங்கிய - அழியும் தன்மையுடைய, விடயர்தொறும் - ஒவ்வொரு விஷயங்களிலும், சார்தல் - [சுகத்தை விரும்பிப்] பொருந்துதல், [எதுபோலெனில்], நல் ஆவின் - நல்ல பசுவினுடைய, இனிமைவாய்ந்த - மதுரத்தைப் பொருந்திய, பால் - பாலானது, நந்தி - மிகுதலால், அழகு ஒழுகும் - அழகு அதிகரிக்கின்ற, பருமடி - பெரியமுலைமடியின்கண், வாழ்வுறும் - வசித்திருக்கும், உணி - உண்ணிகள், அப்பால் உணு - அம்முலைமடியிலுள்ள பாலைப்பருகாது விடுத்து, செம்பால் [ஏ] - அதிலுள்ள இரத்தத்தினையே, தமக்கு உரியது என - தமக்குப்பருகவுரியதென்று, நினைந்து - எண்ணி, அறிவு இழந்து - புத்தி கெட்டு, அருந்தும்பான்மைஆம் - பருகுகின்ற தன்மை போலவாம். எ—று.

பொ—ரை ஜீவர்கள் அஸ்திபாதிப்பிரிய சொருபமாகிய பிரஹ்மத்தினிடத்தில் வாசஞ்செய்தும் அஞ்ஞான மறைப்பினாலே அவ்வானந்தத்தை அநுபவியாது விடுத்து அழியுந்தன்மையுடைய ஒவ்வொரு விஷயங்களிலும் சுகத்தை விரும்பிப் பொருந்துதல் எதுபோலெனில், நல்ல பசுவினுடைய மதுரத்தைப்பொருந்திய பாலனதுமிகுதியால அழகு அதிகரிக்கின்ற பெரிய முலைமடியின்கண் வசித்திருக்கு முண்ணிகள் அம்முலை மடியிலுள்ள பாலைப் பருகாது விடுத்து அதிலுள்ள

இரத்தத்தினையே தமக்குப் பருக வுரியதென்றுஎண்ணிப் புத்தி கெட்டுப் பருகுகின்ற தன்மை போலவாம். எ—று.

பிரித்துக் கூட்டப்பட்ட ஏகாரம் பிரிநிலை.

க—ரை. ஜீவர்கள் ஆனந்த சொரூபத்திலிருந்தும் விஷயத்தை நாடுதல் அஞ்ஞான மயக்கமாம். எ—ம். (ரு)

[வெண்பா]

௧0௬ வாக்குமனு தீதமென்று மாமறைகள் வத்துவினை
நீக்கமற்ற தென்று நிகழ்த்தவுங்கேட்—டாக்கியவோ
ராலயத்தி னுள்ளே யமைத்தகுறி மட்டிலுணர்
சிலரெந்நா ளுய்வார் தெளிந்து (௬)

இ-ள். மாமறைகள் - மகத்தாகிய வேதங்கள், வத்துவினை - பரம் பொருளை, வாக்குமன அதீதம் என்றும் - வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததெனவும், நீக்கம் அற்றது என்றும் - பிரிவற்று எவ்விடத்தும் பூரணமாயுள்ளதெனவும், நிகழ்த்த - கூற, கேட்டு [உம்] - கேள்வியுற்றும், ஆக்கிய - கல் முதலியவற்றாற் கட்டப்பட்ட, ஓர் ஆலயத்தினுள்- ஒப்பற்ற கோவிலினுள்ளிடமாகிய கருப்பக் கிரகத்தில், அமைத்த- பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்ற, குறிமட்டில் - விக்கிரகத்தளவில், உணர்- [இருப்பதாக] அறிகின்ற, சிலர் - மந்தபுத்தியினர், தெளிந்து - [அதன் எதார்த்த சொரூபத்தை ஐயந்திரிபற] அறிந்து, எந்நாள் — எந்தக்காலத்தில், உய்வார் - ஈடேறுவார்கள், [அஃது அருமை] எ-று.

பொ-ரை. மகத்தாகிய வேதங்கள் பரம்பொருளை வாக்குக்கும் மனதுக்கும் எட்டாததெனவும் பிரிவற்ற எவ்விடத்தும் பூரணமாயுள்ள தெனவும் கூறக் கேள்வியுற்றும் கல் முதலியவற்றாற் கட்டப்பட்ட ஒப் பற்ற கோவிலின் உள்ளிடமாகிய கருப்பக் கிரகத்தில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கின்ற விக்கிரகத்தளவிலிருப்பதாக அறிகின்ற மந்த

புத்தியினர் அதன் எதார்த்த சொருபத்தை ஐயந்திரிபறவறிந்து எந்தக்காலத்தில் ஈடேறுவார்கள் அஃதருமை. எ-று.

பிரித்துக் கூட்டப்பட்டவும்மை சிறப்புப் பொருளது.

க—ரை. பரமேசுரனைச் சிவலிங்கமூர்த்தியளவாக அறிகின்ற மந்தபுத்தியுடையவர் எப்போதுய்வார். எ-ம். (௬)

௧௧0. உள்ளந் தனைநே ருறும்விடய முண்பித் து
மெள்ளக் கெடுத்துவிட நினைத்தீர்—தெள்ளியர்நீ ர்
ஓங்குவிக்கு நெய்விறகா லுற்ற வழலொழிப் ப
வீங்கு நினைப்பாரினும் (எ

இ-ள். நேர்உறும் - [சுரோத்திராதி இந்திரியங்களுக்கு] எதிர்ப்படுகின்ற, விடயம் உண்பித்து — [சத்தாதி] விஷயங்களைப் புசிப்பித்து, உள்ளந்தனை மனத்தினை, மெள்ள - மிருதுவாக, கெடுத்துவிட — நாசஞ் செய்வதற்கு, நினைத்தீர் - எண்ணினீர்கள், உற்ற அழல் - [விறகினைப்] பற்றியெரிகின்ற அக்கினியை, ஓங்குவிக்கும் — மேலும் வளரச் செய்கின்ற, நெய்விறகால் - நெய்யோடு கூடிய விறகினாலே, ஒழிப்ப - கெடுக்க, ஈங்கு நினைப்பாரினும் - இவ்வுலகத்தின்கட்கருதுகின்றவர்களினும், நீர் தெள்ளியர் - நீவிர்மிகத் தெளிந்த புத்தியுடையவராவீர். எ-று.

பொழி-. சுரோத்திராதி இந்திரியங்களுக்கு எதிர்ப்படுகின்ற சத்தாதிவிஷயங்களைப் புசிப்பித்து, மனத்தினை மிருதுவாக நாசஞ்செய்வதற்கு எண்ணினீர்கள், விறகினைப் பற்றியெரிகின்ற அக்கினியை மேலும் வளரச் செய்கின்ற நெய்யோடுகூடிய விறகினாலே கெடுக்க இவ்வுலகத்தின்கட்கருதுகின்றவர்களினும், நீவிர் மிகத்தெளிந்த புத்தியுடையவராவீர். எ-று.

தெள்ளியர் என்பது குறிப்புச்சொல் அது, அவரது அறிவின்மையையுணர்த்தியது.

௪௱. விடயானுபவத்தால் மனந்துலிப்பதன்றிக் கெடாது எ ம்.[எ]

௧௧௧. பஞ்சவரைச் சேருமகப் பன்னியரை யடக் இ
யஞ்சும் பழியை யழியீரே — துஞ்சுசுக ம்
இல்லாரே போல விணக்கா திருக்கின்றீ ர்
நல்லாரா வீரெந்த நாள் அ

இ-ள். பஞ்சவரை — [மனிதர்களே சத்த பரிச ரூப ரச கந்த வடிவவிஷயங்களென்னும்] ஐவர்களாகிய சாரபுருஷரை, சேரும் — [முறையே சுரோத்திர தொக்கு சக்ஷுசிங்கு வைகிராண வடிவ ஞானேந்திரியங்களென்னும் ஐவர்களின் சகாயத்தால்] கூடியநுபவிக்கின்ற, அகப்பன்னியரை - [உங்களுடைய] மனமாகிய மனைவியரை, அடக்கி - [வெளியிடத்துச் செல்லாமல்] அடங்குமாறு செய்து, அஞ்சும் - [முன்செய்த அந்த வியபிசாரத்தால்] வெருவுமாறு, பழியை — [வந்த ஜனன மரணமாகிய] நிந்தையை, அழியீர் — தொலைத்திலீர், துஞ்சு சுகம் — [நம் மனைவியரைப் புசிக்கச்செய்து வசமாக்கத் தகுந்த] நிலைபெற்ற ஆனந்தம், இல்லார்போல - தம்மிடத்தில்லாத வறியர் போல, இணக்காது — [நம்மோடு] உடன்படுத்தாமல், இருக்கின்றீர் - [அவித்தியா மயக்கமாகிய நித்திரையில்] இருக்கின்றீர், எந்த நாள் - [இங்ஙனமிருக்கின்ற நீவிர் இனி] எக்காலத்தில், நல்லார் ஆவீர் — [ஞானமாகிய விழிப்பை யடைந்து] ஆனந்த சொரூபராவீர். எ - று.

பொ — ரை மனிதர்களே சத்த பரிச ரூப ரச கந்த வடிவ விஷயங்களென்னும் ஐவர்களாகிய சாரபுருஷரை முறையே, சுரோத்திர தொக்கு சக்ஷுசிங்கு வைகிராண வடிவ ஞானேந்திரியங்களென்னும் ஐவர்களின் சகாயத்தால், கூடியநுபவிக்கின்ற உங்களுடைய மனமாகிய மனைவியரை வெளியிடத்துச் செல்லாமல் அடங்குமாறுசெய்து முன்செய்தஅந்தவியபிசாரத்தால் வெருவுமாறுளதாகிய ஜனன

மரணமென்று கூறுகின்ற நித்திரையைத் தொலைத்திலீர், நம் மனைவியரைப் புசிப்பிக்கச்செய்து வசமாக்கத்தகுந்த நிலைபெற்ற ஆனந்தம் தம்மிடத்தில்லாத வறியர்போல நம்மோடு உடன்படுத்தாமல் அவித்தியாமயக்கமாகிய நித்திரையிலிருக்கின்றீர் இங்ஙனமிருக்கின்றநீவிர் இனி எக்காலத்தில் ஞானமாகிய விழிப்பை யடைந்து ஆனந்தசொரூபராவீர். எ-று.

ஆன்மாவை மணாளனாகவும் மனஞ்சத்தியினம்சமாதலால் அதனை மனைவியாகவும் அம்மனம் ஆன்மாவாகிய பதியை நோக்கி அடங்காமல் துக்ககாரணங்களாகிய விடயங்களை நோக்கிச்செல்லுதல் மாறுதலால் அச்செல்லுதலை வியபிசாரமாகவும் விடயங்களைச் சாரபுருஷராகவும் உருவகம் பண்ணப்பட்டமைபற்றி அம்மனதுக்கும் விடயங்களுக்கும் நேரேசம்பந்தங் கூடாமையின் அவற்றிற்கிடையே இந்திரிகள் சந்தாக வருவிக்கப்பட்டன.

க—து, மனிதர்களே நும்மனத்தை விஷயங்களிற் செல்லவொட்டாதடக்கிப் பிரஹ்மானந்தத்தை யடைந்து பிறப்பையொழிமின் எ—ம், [அ]

ககஉ. இன்பநும் பாலே யிருக்க வதைவிடயத்
துன்பத்திற் றேடிச் சுழலுகின்றீர் — தென்பே
ரளக்கர் புடைசூழ வனியின்கணீரே
விளக்கிருக்கத் தீத்தேடுவீர் க

இ-ள். இன்பம்-பேரானந்தமானது, நும்பால்-ஆன்மாவாகிய உம்மிடத்தில், இருக்க-[உமது சொரூபமாக] இருக்கவும், அதை-அவ்வானந்தத்தை, துன்ப விடயத்தில் - துக்கத்தைத் தருவனவாகிய விஷயங்களின் கண், தேடி-சம்பாதிக்க முயன்று, சுழலுகின்றீர் - [பிறப்பிறப்பின் கண்ணே] திரிகின்றீர்கள், நீரே - [இப்படிப்பட்ட] நீங்களே, தென்பேர் அளக்கர் புடைசூழ் - அழகும் பெருமையும் பொருந்

,ிய சமுத்திரத்தால் நான்கு பக்கமுஞ் சூழப்பெற்ற, அவனியின்கண்-உலகத்தினிடத்து, விளக்கு இருக்க -[தம்மிடத்தே] தீபமிருக்கவும், தீ தேடுவீர் - நெருப்பினை அஃதில்லாத விடங்களிற் சென்று விசாரித்தலைகின்ற அவிவேகிகளாவீர். எ - று.

பொ - ரை, பேரானந்தமானது ஆன்மாவாகியவும்மிடத்தில் உமது சொரூபமாக விருக்கவும் அவ்வானந்தத்தைத்துக்கத்தைத் தருவன வாகிய சத்தாதி விஷயங்களின்கண்சம்பாதிக்க முயன்று பிறப்பிறப் பின்கண்ணே திரிகின்றீர்கள் இப்படிப்பட்ட நீங்களே அழகும் பெருமையும் பொருந்திய சமுத்திரத்தால் நான்கு பக்கமுஞ் சூழப் பெற்றவுலகத்தினிடத்துத் தம்மிடத்தே தீபமிருக்கவும் நெருப்பினை அஃதில்லாத விடங்களிற் சென்று விசாரித்தலைகின்ற அவிவேகிகளாவீர். எ—று.

க—ரை, மனிதர்களே நீவிரேஆனந்த சொரூபிகளாயிருந்தும் அதனை அஃதில்லாதவிடயங்களில் அநுபவிக்க முயலுதல் மடமை. எ—ம் [க]

[கட்டளைக் கலித்துறை]

௪௧௩. கல்லாவி னின்பால் கறந்தே பருகிக் கடும்பசிநோய்
நில்லா தொழிக்க நினைக்கின்ற வெண்ணமு நீரின்றி
வில்லழ னெய்கொண்டு வீட்டு மெணுமொப்ப வின்விடய
மெல்லா மருந்திமுத் துக்கமும் போக்கநீ ரெண்ணுதலே (௧0)

இ—ள். கல் ஆவில் - சிலையினாற் செய்யப்பட்ட பசுவினிடத்து, பால் கறந்து, பருகி - உண்டு, கடும்பசிநோய் - கொடிய பசிப்

பிணியை, நில்லாது ஒழிக்க - தன்னிடத்து நிற்காமற் போக்க, நினைக்கின்ற - எண்ணுகின்ற, எண்ணமும் - நினைப்பும், வில் அழல் — ஒளி பொருந்திய அக்கினியை, நீரின் அன்றி - ஜலத்தி னாலவிக்காமல், நெய்கொண்டு - [அதனை விருத்திபண்ணுகின்ற]நெய் யைச் சொரிந்து, வீட்டும் எனும் — அவிக்க நினைக்கிற நினைப்பும், ஒப்ப - எவ்வாறு ஒருவனுக்குப் பயனற்றனவோ அவ்வாறு, விடயம் எல்லாம் - எதிர்ப்பட்ட விஷயங்களனைத்தையும், அருந்தி - புசித்து, முத்துக்கமும் - [அத்தியாத்துமம் அதிதெய்வம் அதிபூதம் என்னும்] மூவகைத் துக்கங்களையும், போக்க — கெடுக்க, நீர் எண்ணுதல் —[உல கத்தவரே] நீவிர் நினைத்தல், வீண் - பயனற்றதாம், எ—று.

பொ--ரை. சிலையினாற் செய்யப்பட்ட பசுவினிடத்துப் பாலினைக் கறந்து பருகிக் கொடிய பசிப்பிணியைத் தன்னிடத்து நிற்காமற் போக்க எண்ணுகின்ற எண்ணமும் ஒளிபொருந்திய அக்கினியை ஜலத்தாலவிக்காமல் அதனை விருத்திபண்ணுகின்ற நெய்யைச் சொரிந்து அவிக்க எண்ணுகின்ற எண்ணம் ஒருவனுக்கு எவ்வாறு பய னற்றனவோ அவ்வாறு எதிர்ப்பட்ட விடயங்களனைத்தையும் புசித்து அத்தியாத்துமம் அதிதெய்வம் அதிபூதம் என்னும் மூவகைத் துக்கங் களையுங் கெடுக்க உலகத்தவரே நீவிரெண்ணுதல் பயனற்றதாம்.எ—று.

கற்பசுவிற் பாலில்லாமையால் அதனைக் கறந்து பருகிப் பசி நீக்கு தல் கூடாமைபோல விடயங்களிற் சுகமின்மையால் அவ்விஷயங்க ளைப் புசித்துச் சுகமடைதல் கூடாதென்பார் "கல்லாவினின் பால் கறந்தே பருகிக் கடும் பசிநோய், நில்லாதொழிக்க நினைக்கின்ற வெண் ணமும்" எனவும், அக்கினியை நீராற்கெடுக்கவேண்டுமேயன்றி நெய் யாற் கெடுக்கப்புகின் அது கெடாமல் வளருதல்போல விஷயவிச்சை யைத்தோட திருஷ்டிவாயிலாக வுண்டாகும் வைராக்கியத்தாற் கெடுக் கவேண்டுமேயன்றி, ஒவ்வோரிச்சையுண்டாகுந்தோறும் அவ்வவ்விச்

லைகளை அவ்வவ்விடயங்களைப் புசித்துக் கெடுக்கப்புகின் அவை வளரு மேயன்றிக்கெடாவென்பார் 'நீரினன்றி, வில்லழனெய்கொண்டு வீட்டு மெனுமொப்ப' எனவும் அவ்வெண்ணம் உபாயமல்லாமையாற் பயன் தராதென்பார் "வீண்" வேறு வேறுதாரணங்களாற் பிரித்தோதினு ரெனவறிக.

௬ஊ. விடயானந்தத்தை அநுபவித்து மூவகைத் துக்கங்களையும் போக்க எண்ணுதல் பயனற்றது. எ-ம். (௧0)

(௬)-வது அவிவேகிபியல் முற்றிற்று.

## [எ]-வது இரங்கலியல்]

### [கட்டளைக் கலித்துறை]

௬௧௪. மாதா ரகமைந் தரும்பொருள் கூட்டி வளர்க்குமட்டு
நீதா ரகமென் றருமைசெய் வாரது நீங்கினடா
போதா ரகமற் றவனேசெத் தென்னப் புலப்பரிங்
ஙன்
றீதா ரகத்தினும் வைகுவ ரோநன்கு தேறினரே (௧)

இ-ள். மாது — மனைவியும், ஆர்அகமைந்தரும் — அருமையாகிய தனது மனதை யொத்த புத்திரர்களும், பொருள்கூட்டி - திரவியங்க ளைச் சம்பாதித்து, வளர்க்குமட்டும் - [அவர்றை] விருத்திசெய்யுமள வும், நீதாரகம் என்று - நீ எமது கண்மணி போன்றவனென்று, அருமைசெய்வார் - மேன்மைப்படுத்துவார், அது நீங்கின் - முன் போற் பொருளீட்டமுடியாவிடின், அடா — பயலே, தாரகம் அற்ற வனே - [எவ்வித] ஆதாரமுமில்லாதவனே, செத்து போ என்ன - இறவாது என் உயிரோடிருக்கின்றாயென்று, புலப்பர் — வெறுத்துத்

தன்ளுவார்கள், இங்ஙன் - இவ்வாறு, தீதுஆர்அகத்தினும் - தீங்கினைப் பொருந்திய இல்லறத்திலும், வைகுவரோ - தங்கிவாழ்வரோ, (வாழார்) நன்கு தேறினர் - மோக்ஷ மார்க்கத்திற் றெளிந் தொழுகுபவர். எ-று.

பொ-ரை. மனைவியும் அருமையாகிய தனது மனதை யொத்த புத்திரர்களுந் திரவியங்களைச் சம்பாதித்து அவற்றை விருத்திசெய்யுமளவும் நீ எமது கண்மணி போன்றவனென்று மேன்மைப்படுத்துவார், முன்போற் பொருள் சம்பாதிக்கமுடியாவிடின், பபலே எவ்வித ஆதாரமுமில்லாதவனே இறவாது என் உயிரோடிருக்கின்றாயென்று வெறுத்துத் தள்ளுவார், இவ்வாறு தீங்கினைப் பொருந்திய இல்லறத்திலுந் தங்கி வாழ்வரோ (வாழமர்), மோக்ஷ மார்க்கத்திற றெளிந் தொழுகுபவர்- எ-று.

க-ரை. மோக்ஷ விருப்புடையார் இல்லறத்தைத் துறப்பர். எ-ம். (௪)

௧௧௫. இல்லாத கானலி லுண்ணீரென் றெண்ணி யெழுந்தரிண ஞ்
செல்லா விரைந்து விரைந்தோடி மாயுஞ் செயலெனவே
யல்லா விடயஞ் சுகமெனத் தேடி யறிவிழந்தார்
பொல்லா மனுடரை யோவெந்த நாளின்பம் புல்லுவரே. [2]

இ-ள். அரிணம்-மானானது, இல்லாத-[புனல்]இல்லாதா, கானலில் -[உஷ்ண நிலத்திற்றோன்றும] பேய்த்தேரினகண், உண்நீர் என்று-[தாகந்தீரப்] பருகுதற்குப் புனல் [உளது] எனறு, எண்ணி - நினைத்து, எழுந்து - தன்னிடப்பைவிட்டுக் கிளம்பி, விரைந்து விரைந்து ஓடிச் செல்ல — மிகவேகமாயோடிச் சென்று, மாயும் செயல என - வருந்துகின்ற செய்கையைப் போல பொலலாமனுடர் - நிஷ்காமரரு

மஞ் செய்யாத மனிதர், அல்லாவிடயம் — இன்பத்திற் கேதுவல்லாத விஷயத்தின் கண், சுகம் என - இன்பமுண்டென்று [கருதி],- தேடி- அவற்றையே சம்பாதித்து, அறிவு இழந்தார் - தம்மையறியுமஉண்மை ஞானத்தைப் போக்கடித்தனர், ஐயோ - அந்தோ, எந்நாள் - இனி எந்தக் காலத்தில், இன்பம் புல்லுவர் — மோக்ஷ சுகத்தை யெய்துவர் (எய்துதலரிது). எ-று.

பொ—ரை. மானானது புனலில்லாத உஷ்ணநிலத்திற் றோன்றும் பேய்த்தேரின்கண் தாகந்தீரப் புனலுளதென்று நினைந்துத் தன்னிருப்பை விட்டுக் கிளம்பி மிகவேகமா யோடிச்சென்று வருந்துகின்ற செய்கையைப் போல நிஷ்காமகருமஞ் செய்யாதமனிதர்கள் சுகத்திற் கேதுவல்லாத விஷயத்தின்கண் சுகமுண்டென்று கருதி அவற்றையே சம்பாதித்து தம்மையறியும் உண்மை ஞானத்தைப் போக்கடித்தனர். அந்தோ? இனி எக்காலத்தில் மோக்ஷ சுகத்தை யெய்துவர் (எய்துதலரிது). எ—று.

உளது என்பது சொல்லெச்சம்.

க—ரை, விடயவிச்சையுடையவர் மோக்ஷசுகமடையார். எ-ம். (2)

௧௧௬ இன்பே வடிவுற் றிருக்கின்ற நீரு மறிவிழப்பாற்
றுன்பா ழியின்கட் சுழலுகின் றீரித் துணையுமந் தோ
வின்பணை யுற்று மிலவண னன் மாவிற் புலைச்சிதன் னை
வன்பிற் புணர்ந்து மகப்பெற் றடைந்த வருத்தமொத்தே (௩)

இ-ள். இலவணன் - இலவணனென்னும் பெயரினையுடைய ஓரரசன், அணை இன்பு உற்றும் - சிங்காதனத்தின்மீது சுகமாக வீற்றிருந்தும், [இந்திரஜால வித்தைக்காரன் செய்த மாயாவினையாற் பண்ணப்பட்ட], மாவில் - மயக்கத்தினால், [அறிவை யிழந்தமையால்], புலைச்சி - ஒரு

புலைச்சியானவள், தன்னை - இலவணனாகிய தன்னை, வன்பில் - பலாற் காரமாய், புணர்ந்து — கூடி, மகப்பெற்று — புத்திரர்களைப் பெற்றத னால், அடைந்த - அநுபவித்த, வருத்தம் ஒத்து - துன்பத்தைப் போல, இன்பே வடிவு - [உலகத்தவரே) சச்சிதானந்தமே சொரூப மாக, உற்று இருக்கின்ற நீர் - அநாதியே அடையப் பெற்றிருக்கின்ற நீங்கள், உம் - உம்முடைய, அறிவு இழப்பால் - [சொரூப] ஞானமா கிய [கப்பலை] யிழந்தமையால், துன்பு ஆழியின்கண் - [ஜனனமரண மாகிய] துக்க சமுத்திரத்தினிடத்து, இத்துணையும் — இதுவரையும், அந்தோ - ஐயோ, சுழலுகின்றீர் - திரிகின்றீர்கள், [இஃதென்னை இனியாயினும் அந்த ஞானக் கப்பலிலேறிப் பிறவிக் கடலினின்றும் வெளிப்பட்டு மோக்ஷமாகிய கரையிலேறுமின் என்பது எஞ்சி நின் றது]. எ-று.

பொ—ரை. இலவணனென்னும் பெயரினையுடைய ஓரரசன் சிங்கா தனத்தின் மீது சுகமாக வீற்றிருந்தும் இந்திரனது ஏவலனாகிய மாயா வியினாற் பண்ணப்பட்ட மயக்கத்தினால் அறிவை யிழந்தமையால் ஒரு புலைச்சியானவள் தன்னைப் பலாற்காரமாக மணந்து புத்திரர்களைப் பெற்றதனால் அநுபவித்த துன்பத்தைப் போல? உலகத்தவரே, சச்சி தானந்தமே சொரூபமாக அநாதியே அடையப்பெற்றிருக்கின்ற நீங் கள் உமது சொரூபஞானமாகிய கப்பலையிழந்தமையால் ஜனனமரண மாகிய துக்க சமுத்திரத்தினிடத்து இதுவரையும் ஐயோ திரிகின் றீர்கள் இஃதென்னை? இனியாயினும், அந்த ஞானக் கப்பலிலேறிப் பிறவிக் கடலைக் கடந்து மோக்ஷமாகிய கரையிலேறுமின். எ—று.

இன்புசத்து முதலியவற்றின் உபலக்ஷணம் மகப்பெற்று என்பது செயவெனெச்சத்திரிபு.

க-ரை. உலகத்தவரே நீங்கள் உங்கள் எதார்த்த சொரூபத்தை அறியாமையால் பிறவித்துக்கத்தில் வருந்துகின்றீர்கள். எ-ம். [௩]

௯௧௭. அஞ்ஞானஞ் சற்று மணுகா நிருமல ராகியு நீ
ருஞ்ஞான நீத்துட லுற்றே யுழன்றநி ரோதரு மோ
செஞ்ஞாயி றன்னவத் தேசடைந் தாலுமைச் சேர்
துயரம்
பைஞ்ஞீலு காள்கரு டன்கண்ட பாம்பழி பண்பு
றுமே (௪)

இ-ள், பைஞ்ஞீலுளாள் - மனிதர்களே, நீர் - நீங்கள், அஞ்ஞானம்- அஞ்ஞானத்தை, சற்றும் - கொஞ்சமேனும், அணுகா - பொருந்தாத, நிருமலர் ஆகியும் - பரிசுத்தசைதன்னிய சொரூபிகளாயிருந்தும், உம் ஞானம் - உமது சொரூப ஞானத்தை, நீத்து – இழந்து, உடல் உற்று -தேகத்தையான் எனது என்று அபிமானித்தலால், உழன்றநீர் - [பிறந்து மிறந்து] திரிந்தீர்கள், ஒதருமோ - ஒஇது தக்கதல்லவே, செஞ்ஞாயிறு அன்ன – செந்நிறமுடைய சூரியன் போன்ற, அத்தேசு அடைந்தால் – அந்த ஞானப்பிரகாசமானது அடையப்பெயாயின், [அதனால்], உமைச் சேர்துயாம் - உங்களைப் பொருந்தியிருக்கின்ற [ஜனனமரண] துக்கங்கள், கருடன் கண்ட-கலுழனாற் பார்க்கப்பட்ட, பாம்பு அழிபண்பு உறும் - சர்ப்பம் நாசமாகின்ற தன்மையைப் போல நாசமாகும், எ—று.

பொ - ரை, மனிதர்களே? நீங்கள் அஞ்ஞானத்தைக் கொஞ்சமேனும் பொருந்ாத பரிசுத்த சைதன்னிய சொரூபிகளாயிருந்தும் உமது சொரூப ஞானத்தை யிழந்து தேகத்தையானெனதென்றபிமானத்தால் பிறந்திறந்து திரிந்தீர்கள், ஒ இது தக்கதல்லவே, செந்நிறமுடைய சூரியன் போன்ற அந்த ஞானப்பிரகாசமானது அடையப்பெறாயின்

அதனாலே உங்களைப் பொருந்தியிருக்கின்ற ஜனனமரண துக்கங்கள் கருடனாற் பார்க்கப்பட்ட சர்ப்பம் நாசமாகின்ற தன்மையைப் போல, நாசமாகும். எ-று.

உடலுற்று என்பது செயவெனச்சத்திரிபு.

க-ரை. மனிதர்களே! உமது சொருப ஞானத்தைப் பெற்றுப் பிறவித் துன்பத்தினின்றும் நீங்குமின. எ-ம். (ச)

ககஅ. என்று மழிவில் பரானந்த மாகி யிருக்குமும்மை ப்
பொன்றுட லென்றும் பிறரும வென்னவும் போற்
றியந்தோ
கொன்றீரத் தாற்சுகப் பேறிழுந் தீரக் கொடுந்
தொழில்விட்
டொன்றுமுன் னுதென் றிருப்பீர்க ளோவின்
புறுவதற்கே (ரு)

இ-ள். என்றும் - [மனிதர்களே] எக்காலத்தும், அழிவு இல் - நாசமில்லாத, பரானந்தம் ஆகி - பேரின்பசொருபமாய், இருக்கும்உம்மை - இருக்கின்ற வுங்களை, பொன்றுஉடல் என்றும் - [அற்ப காலத்தில்] அழிந்து போகிற தேகம் [நீவிர்] என்றும், பிற - தேகத்திற்சம்பந்தமானவை, தமஎன்னவும் - உம்முடையவென்றும், [நினைத்து], போற்றி - பாதுகாத்து, அந்தோ - ஐயோ, கொன்றீர் - கெடுத்துக் கொண்டீர், அத்தால் - அவ்வெண்ணத்தால், சுகப்பேறு இழந்தீர் - மோக்ஷானந்தமாகிய இலாபத்தை இழந்திருக்கின்றீர், அக்கொடுந்தொழில்விட்டு - அந்தக் கொடிய செய்கையை ஒழித்து, இன்புறுவதற்கு - மோக்ஷ சுகத்தைப் பெறுவதற்கு, ஒன்றும் உன்னுது -

யானெனதென்பவற்றுள் ஒன்றினையும் நினையாமல், என்று இருப்பீர்களோ. எக்காலமிருப்பீர்களோ. எ-று.

பொ-ரை. மனிதர்களே! எக்காலத்தும் நாசமில்லாத பேரின்ப சொரூபமாயிருக்கின்ற வுங்களை அற்பகாலத்திலழிந்து போகின்ற தேகம் நீவிரென்றும், அதற்கந்நியமானவை உம்முடையவென்றும், நினைத்துப் பாதுகாத்து ஐயோ கெடுத்துக்கொண்டீர். அவ்வெண்ணத்தால், மோக்ஷானந்தமாகிய இலாபத்தை இழந்திருக்கின்றீர், இந்தக் கொடிய செய்கையை யொழித்து மோக்ஷசுகத்தைப் பெறுவதற்கு யானெனதென்பவற்றுள் ஒன்றினையும் நினையாமல் எக்காலமிருப்பீர்களோ. எ-று.

கொன்றென்பது "எந்நன்றி கொன்றார்க்கும்" என்றாற்போலக் கெடுத்தற் பொருளது, உபமைக்கொன்றீர் எனக்கூட்டுக.

தேகாதியையானெனதெனக் கருதுதல் பிறவித் துன்பத்துக்கேதுவாதல்பற்றிக் கொடுந்தொழில் என்றார். யானெனதென்னும் எண்ணம் ஒழித்தவர் மோக்ஷமடைதலை "யானெனதென்னுஞ்செருக்கறுப்பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்" என்று கூறுந்திருக்குறளானுமறிக.

உம்மை நீவிரே கெடுத்துக்கொண்டீர் என்பதற்குதாரணம்.

பகவற் கீதை

"தானலதி யாவர்தன் மேன்மை செய்தக்கார்
தானலதி யாவர்தன் கீழ்மை சமைப்பார்
தானலதி யாவர்தன் மெய்ப் பகையாவார்
தானலதி யாவர் தனக்குற வாவார்"

என்று கூறுதலானும் அறிக.

க-ரை. மனிதர்களே! தேகாதிகளையானெனதென்றபிமானித்த அதனால், உங்களை நீங்களே கெடுத்துக்கொள்ளாமல், அவ்வபிமானத்தைக் கெடுத்து மோக்ஷ சுகத்தை யடையுங்கள். ஏ-ம். (௫)

[விருத்தம்]

௧௧௯. இன்பப் பிரஹ்மோ ததிபெருகி யெங்குங் கிடப்ப
வதைப் பருகித்
துன்பந் துடையா ரக்கடலிற் றோன்றும் வெறிய புற்
புதமென்
றுன்ப விடயங் களைமுழுதுஞ் சூழா தின்பந் தருபொ
ருள்க
ளென்புத் தியினாற் றவித்தவ்வி யிளைத்தார் களைத்தா
ரிதுகொடிதே (௬)

இ-ள், இன்பப்பிரஹ்ம உததி - ஆனந்த மயமாகிய பிரஹ்ம சமுத்திரமானது, எங்கும் - எவ்விடத்தும், பெருகிகிடப்ப - பூரித்திருக்க, அதை - அப்பூரணானந்தத்தை, பருகி - புசித்து, துன்பந்துடையார் — [பிறப்பிறப்புகளாலுண்டாகுந்] துக்கத்தை வறியாத அவிவேகயொழிக்க ஜனங்கள், அக்கடலில் - அவ்வானந்த சமுத்திரத்தில், தோன்றும் - கற்பிதமாக வுண்டாகின்ற, வெறிய - பயனில்லாதெனவும், துன்பம் - துக்கத்தைத் தருவனவுமாகிய, புற்புதம் என் - குமிழியென்று கூறுகின்ற, விடயங்களை - சத்தாதி விஷயங்களை, முழுதுஞ் சூழாது - முற்றிலும் ஆராயாமல், இன்பம் தருபொருள்கள் என் புத்தியினால் - சுகத்தைக் கொடுக்கின்ற வஸ்துக்களென்றெண்ணும் விபரீதவுணர்ச்சியால், தவித்தவ்வி - அவ்விஷயங்களில் பாய்ந்துபாய்ந்து, இளைத்தார் களைத்தார் - மெலிந்து வருந்தினார்கள், இது கொடிது - இது மிகவும் தீது. எ-று.

பொ-ளா. ஆனந்தமயமாகிய பிரஹ்ம சமுத்திரமானது எவ்விடத்தும் பூரித்திருக்க, அப்பூரணானந்தத்தைப் புசித்துப் பிறப்பிறப்புகளாலுண்டாகுந் துக்கத்தை யொழிக்க வறியாத அவிவேக ஜனங்கள், அவ்வானந்த சமுத்திரத்திற் சப்பிரமாக வுண்டாகின்ற பயமில்லாதனவுந் துக்கத்தைத் தருவனவுமாகிய குமிழியென்று கூறுகின்ற சத்தாதி விஷயங்களை முற்றிலும் ஆராயாமல் சுகத்தைக் கொடுக்கின்ற வஸ்துக்களென்றெண்ணும் விபரீத வுணர்ச்சியினால் அவ்விஷயங்களிற் பாய்ந்து பாய்ந்து மெலிந்து வருந்தினார்கள், இது மிகவும் நீது. எ-று.

இளைத்தார் என்பது முற்றெச்சம்.

க-ளா. ஜீவர்கள், தாம் ஆனந்த சொரூபிகளாயிருந்தும் அப்படிப்பட்டதன்னை அநுபவிக்கவறியாமல் அவிவேகத்தால் விடயங்களை விரும்பிப்பற்றுகின்றார். எ-ம். [கசு;

(எ)-வது இரக்கவியல் முற்றிற்று.

## (அ)-வது உற்றதுரைத்தலியல்

[வெண்பா]

கஉ௭ ஒன்று நினையாத துத்தமநெஞ் சம்பிரஹ் ம
மொன்றினையே யோர்வதிடை யுள்ள—முன்பு
கண் ட
வெல்லா நினைப்ப திழிவுளமீ தொன்று பந் த
மல்லனமுத் திக்கேது வாம் (க)

இ-ள். ஒன்றும் நினையாதது-(ஆன்மா னான்மாக்களுள்) யாதொன்றையு மெண்ணாதது, உத்தம நெஞ்சம் [ஆம்] - உத்தமமாகிய மனமாம், பிரஹ்மம் ஒன்றினையே ஓர்வது-பிரஹ்மம் ஒன்றையே நினைப்பது, இடை

உள்ளம் [ஆம்] மத்திமமனமாம், முன்பு கண்ட – முற்காலத்தில் [இந்திரியவாயிலாக] விஷயீகரித்த, எல்லாம் நினைப்பது – எல்லா விஷயங்களையுமெண்ணுவது, இழிவு உளம் [ஆம்] – அதமமனமாம், ஈது ஒன்று பந்த [ஏது ஆம்] - இவ்வதம மனமொன்று மாத்திரம் பந்தத்திற்குக் காரணமாம்; அல்லன - உத்தமமத்திம மனங்கள், முத்திக்கு ஏது ஆம் - மோக்ஷமடைதற்குக் காரணமாம். எ-று

பொ-ரை. ஆன்மா நான்மாக்களுக்கு யாதொன்றையும் எண்ணாதது உத்தமமனமாம். பிரஹ்மம் ஒன்றையே நினைப்பது மத்திம மனமாம். முற்காலத்தில் இந்திரியவாயிலாக வறித்த எல்லா விஷயங்களையுமெண்ணுவது அதமமனமாம். இவ்வதம மனமொன்றுமாத்திரம் பந்தத்திற்குக் காரணமாம். உத்தமமத்திம மனங்கள் மோக்ஷமடைதற்குக் காரணமாம் எ-று

ஏது என்பது பாதமென்பதுடனுங் கூட்டப்பட்டது ஆம் என்பது கடைநிலைத் தீபகம்.

க-ரை. முமுக்ஷுக்கள் மனத்தை விஷயசிந்தனம் பண்ணுவதினின்றுந்தகைந்து, முதலிற் பிரஹ்ம சிந்தனத்திலும், பின்னர் நிச்சிந்தனத்திலும், பழக்கவேண்டும். எ-ம் (க)

௨௨௪. சச்சிதா னந்தமய வத்துவின் கட் சற்று மி லா
விச்சக முண் டாயழித லெங்ஙனெனி—னிர்ச்சன மா ங்
காட்டிருளச் சத்தாற்பேய் காண்டலுமென் னிர்ப்பயத்தா ன்
மீட்டிலதாப் போதலும்போன் மே (௨)

இ-ள். சச்சிதானந்தமயவத்துவின்கண் - அஸ்திபாதிப்பிரியரூபமாகிய பிரஹ்ம சொரூபத்தினிடத்து; சற்றும் இலா – அற்பமும்

[உண்மையாய்] இல்லாத; இச்சகம் - இப்பிரபஞ்சமானது; உண்டாய் அழிதல் - தோன்றிநாசமாகுதல், எங்ஙன் எனில் - எவ்விதமெனக் கேட்கில்; நிர்ச்சனம் ஆம் காட்டு - மனித சஞ்சாரமில்லாத காட்டினிடத்து, இருள் அச்சத்தால் - இருட்டினாலும் பயத்தினாலும், பேய் காண்டலும் - பிசாசு தோன்றுதலையும், எல் - சூரியோதயத்தினாலும், நிர்ப்பயத்தால் - பயமின்மையினாலும்; மீட்டு - திரும்ப; இலதா - [அப்பேய்த்தோற்றம்] இல்லாமல், போதலும் போன்ம் - நீங்குதலையு மொக்கும். எ-று.

பொ-ரை. அஸ்திபாதிப்பிரிய ரூபமாகிய பிரஹ்ம சொரூபத்தினிடத்து அற்பமும் உண்மையிலில்லாத இப்பிரபஞ்சமானது தோன்றி நாசமாகுதல் எவ்விதமென்று கேட்கில், மனித சஞ்சாரமில்லாத வனத்தினிடத்து இருட்டினாலும் பயத்தினாலும், பிசாசு தோன்றுதலையும் சூரியோதயத்தினாலும் பயமின்மையினாலும் திரும்ப அப்பேய்த்தோற்றமில்லாமல் நீங்குதலையும் போலும். எ-று

க-ரை. ஒருவனுக்கு இருளினாலும் பயத்தினாலும் கற்பிதமாகப் பேய் தோன்றிச் சூரியோதயத்தினாலும் பயமின்மையினாலும் அது நசித்தல்போல, அஞ்ஞானத்தாற் கற்பிதமாக ஜகத்துத்தோன்றி பிரஹ்ம ஞானத்தால் அது நீக்கும். எ-ம (௨)

௧௨௨ ஆத்துமா விற்றோன் றவனிசத்தா மேலழி யா
நீத்திடசத் தேற்றோன்று நேசெறிராம்—பார்க் கில வை
யந்தவிரண் டிற்கு மயலபின பின்னவய ல்
தொந்தந்தா தான்மியமாஞ் சூழ்ந் து (௩)

இ-ன். ஆத்துமாவில் - ஆன்மவடிவப் பிரஹ்மத்தினிடத்து, தோன்று - உண்டாகிய, அவனி - பிரபஞ்சமானது - சத்துஆமேல்,

உள பொருளானல், அழியா — [எந்த ஞானத்தினலும் எக்காலத்தும்] பாதமாகமாட்டாது, நீத்திடு - தள்ளத்தக்க, அசத்தேல் - இல்பொருளானல், தோன்ரு — [எக்காலத்தும் மலடி மகன்போலக்] காணப்படாது, நேர் எதிர் ஆம் - பிரத்தியக்ஷத்தில் அவற்றிற்கு மாறும், (ஞானத்தாற் பாதிக்கப்படுவதும் காணப்படுவதுமாகிய பாவபதார்த்தமாம்), சூழ்ந்து பார்க்கில் - அதனை ஆலோசித்தறியுமிடத்து, அந்த இரண்டிற்கும் - முற்கூறிய சத்துக்கும் அசத்துக்கும், அயல் — வேரும், அவை - [ஆனல்] அப்பிரஹ்மத்திற்குஞ் சகத்துக்கும், தொந்தம் - சம்பந்தம் [யாதெனில்], அபினபின்ன அயல் - [அவ்விரண்டினையும் பேதமாகவாயினும் அபேதமாகவாயினுங் கூறவியலாமையால்] அபேதபேதங்களுக்கு வேருகிய, தாதான்மியம் ஆம் - கற்பிததாதான்மியமாம். எ-று,

பொ-ரை. ஆன்ம வடிவப் பிரஹ்மத்தினிடத் துண்டாகிய பிரபஞ்சமானது உள் பொருளானல், எந்த ஞானத்தினலும் எக்காலத்தும் பாதமாகமாட்டாது. தள்ளத்தக்க இல்பொருளானல், எக்காலத்தும் மலடி மகன்போலக் காணப்படாது. பிரத்தியக்ஷத்தில் அவற்றிற்கு மாறும் (ஞானத்தாற் பாதிக்கப்படுவதுங் காணப்படுவதுமாகிய பாவ பதார்த்தமாம்). அதனை ஆலோசித்தறியுமிடத்து முற்கூறிய சத்துக்குமசத்துக்கும் வேரும். ஆனல் அப்பிரஹ்மத்துக்கும் ஜகத்துக்கும் சம்பந்தம் யாதெனில், அவ்விரண்டினையும் பேதமாகவாவது அபேதமாகவாவது கூற வியலாமையால் அபேதபேதங்களுக்கு வேருகிய கற்பித தாதான்மியமாம். எ-று.

அவை என்பது நான்காம் வேற்றுமைத்தொகை அழியாது தோன்ருது என்பவற்றின் றுவ்வீறு குறைந்து நின்றது,

ஜகத்துச்சத்தல்ல வென்பார் "அவனி சத்தா மேலழியா" என்றும் அசத்தல்ல வென்பார் "அசத்தேற்ருேன்ரு" என்றும் சதசத்து விலக்ஷணமென்பார் "அந்த விரண்டிற்குமயல்" என்றும் பிரஹ்மத்

தக்கும் ஜகத்துக்கும் பேதாபேதவிலக்ஷணதாதான்மிய சம்பந்த மூள தென்பார் "அபின்னபின்னவயல் தொந்தர்தாதான்மியம்" என்றுங் கூறினர்.

ஜகத்துச்சத்தின் வேறும் அசத்தின் வேறுமாகிய பாவபதார்த்தம் என்பதின் பொருள் கூறப்படுகிறது. இதிலோர் சங்கை சத்தென்பது உள்ள பொருள். அதனின் வேறென்பது இல்லாத பொருள். அதுமலடிமகன் முதலியன. அசத்தென்பது இல்லாத பொருள். அதனின் வேறென்பது உள்ள பொருள் அது பிரஹ்மம் சத்தும் அசத்துமாகிய இவ்விரண்டு பொருள்களைத் தவிர மூன்றாவதான பொருள்கிடையாது. அங்ஙனமிருக்க அவற்றின் வேறு என்று சொல்லின் அச்சொல் பொருளற்றதாம்.

சங்கையின் சமாதானம் - சத்த சத்துக்களுக்கு வேறு என்ற சொல் பொருளற்றதன்று. பிரபஞ்சமாகிய பொருளையுடையதேயாம். சத்திற்கு எதிர் அசத்தும் அசத்திற்கு எதிர் சத்தும் ஆவனவன்றி சத்தின் வேறு அசத்தும் அசத்தின் வேறு சத்துமல்ல. வேறெங்ஙனமெனின், சத்தென்பதற்கு எந்தஞானத்தாலும் எக்காலத்தும் பாதிக்கப் படாதது என்று பொருள். அதனின் வேறென் பதற்கு ஞானத்தால் பாதிக்கப் படுவது என்பது பொருள். ஆகவே சத்தின வேறு என்னும் இவ்வளவு வாக்கியத்திற்கு ஞானத்தால் பாதிக்கப்படுவது (மித்தை யென்று நிச்சயிக்கப்படுவது) என்பது பொருள். அசத்தென்பது மலடி மகன் போலச் சொரூபமில்லாதது. அதனின் வேறென்பது சொரூபமுடையது ஆகவே அசத்தின் வேறென்பதற்குச் சொரூபமுடையதென்பது பொருள். இவ்வாறு சதசத்துக்களுக்கு வேறென்பதின் திரண்ட பொருள் பாதிக்கப் படத்தக்க சொரூபமுடையது. (ஞானத்தால் பாதிக்கப்படுவதும் பிரத்தியக்ஷமாகக் காணக்கூடிய சொரூபமுடையது)மாம்.

இனிப் பாவபதார்த்த மென்பதன் பொருள் கூறப்படுகிறது. பாவப தார்த்த மென்றால், சத்துவஸ்து என்றர்த்தமாம். முன் சத்தின்வேறெனவும், பாதிக்கப்படுவதெனவும் கூறிப் பின்னர் அதனையே சத்துவஸ்து வென்று கூறின் வியாகாத (முன்னுக்குப்பின் விரோத மென்னும்) தோஷமுண்டாமெனச் சங்கைவரின் அதற்குச் சமாதானம். அச் சத்து பாதிக்கப்படுவது பாதிக்கப்படாதது என்னும் பேதத்தாலிரு வகைப்படும். அவற்றுள் ஜகத்துப் பாதிக்கப்படுஞ்சத்து பிரஹ்மம். பாதிக்கப்படாத சத்துசத்தென்பதற்கு இருப்பு மாத்திரத்தைப் பொருளாகக் கொள்ளல் வேண்டும். எக்காலத்தும் அழியாதிருக்கும் பொருளைப் பாதிக்கப்படாத சத்து வஸ்து வென்பர். அது பிரஹ்மமாம். சில காலமிருந்து பிரஹ்ம ஞானத்தாலழியும் பொருளைப் பாதிக்கப்படுஞ் சத்து வஸ்து வென்பர். அது பிரபஞ்சமாம் ஆகவே சத்துவஸ்து பிரஹ்மம். அசத்து வஸ்து மலடிமகன் முதலியன. சத்சத்தின் வேறான வஸ்துபிரபஞ்ச முதலியன. இம்மூவகை வஸ்துக்களுள் பிரபஞ்சமானது பிரஹ்மஞானத் தாற்பாதிக்கப்படுவதும் பிரத்தியக்ஷமாகக் காணக் கூடிய சொரூபமுடையதும் பிரஹ்மஞானம் வருமளவும் உள்ளது போன்றிருப்பது மாயிருத்தலால், சத்த சத்துக்களுக்கு வேறாகிய பாவபதார்த்தம் எனப் பொருள்படுதல் காண்க.

இனிப்பேதாபேத விலக்ஷண மென்பதன் பொருள் கூறப்படுகிறது. ஜகத்தைப் பிரகிருதியின் காரியமாகக் கூறியிருத்தலாற் காரியத்தின் சுபாவ மெதுவோ, அதுவே காரணத்தின் சுபாவமாமென்பது நியமம். ஆகவே பிரஹ்மத்தோடு பிரகிருதிக்குள்ள சம்பந்தமே, ஜகத்துக்குமாம். காரணமாகிய அப்பிரகிருதியானது சமமாயுள்ள சத்துவாதி முக்குணவடிவ மெனச் சாங்கிய மதத்திலும், ஈசசக்தியென அத்துவைத வாதத்திலும், கூறப்பட்டிருத்தலால் குணமுஞ் சக்தியுமாகிய, அப்பிரகிருதி குணியையுஞ் சக்தனையுமிடமாகக் கொண்டிருப்ப தன்றித்

தனித்திராது. ஆனால் யாதேனுமோ ரந்நியவஸ்துவையே இடமாகக் கொண்டிருத்தல் வேண்டும். அங்ஙனமிருத்தற்குப் பிரஹ்மத்தைத் தவிரவேறு உள்பொருளில்லாமையால் பிரஹ்மத்தினிடத்திலேயே இருப்புக் கூறவேண்டியதாகிறது. பிரஹ்மமோ நிர்க்குணமும் அசங்கமும்ஆம் எனச் சுருதியிற்கூறப்பட்டிருத்தலால் அதனிடத்துப் பிரகிருதிக்கு வாஸ்தவ இருப்புக் கூறுதல் பொருந்தாது. ஆதலால், கயிற்றினிடத்துக் கற்பிதமாகத்தோன்றிய சர்ப்பத்திற்குக் கூறுகின்ற கற்பித இருப்புப் போலக் கற்பித இருப்பே கூறவேண்டியதாகிறது. அந்த இருப்பினையே கற்பித சம்பந்தமென்று கூறுவர். அச்சம்பந்தம் ஸம்யோகம் தாதான்மியம் என இருவகைப்படும். வேறு வேறாயுள்ள இரண்டு பொருள்கட்கு அவ்விரண்டின் கிரியையாலாவது அவற்றில் ஒன்றன் கிரியையாலாவது உண்டாவது ஸையோக சம்பந்தமாம். ஒருவன் கைகுவிக்குமிடத்து அவ்விரண்டு கைகட்கு முளதாகுஞ் ஸையோகம் அவ்விரண்டுகைகளின் கிரியையாலாகியதாம். ஒரு விருக்ஷத்திற்குப் பக்ஷிக்கும் உளதாகுஞ் ஸையோகம் பக்ஷியாகிய ஒன்றன் கிரியையாலாகியதாம். இங்கே கூறிய பிரஹ்மத்துக்கும் பிரகிருதிக்குமுள்ள சம்பந்தம் ஆதார ஆதேய வஸ்துக்களுடைப் போன்றிருத்தலால் குணகுணிகட்கும் கிரியைசர்த்தாக்களுக்கும் போலத்தாதான்மிய சம்பந்தமாம். ஆகவே, கற்பிததாதான்மிய சம்பந்தமென்றாயிற்று இனி அவ்விரண்டினையும் பேதமென்றாவது அபேதமென்றாவது கூறுதல் [முறையே அத்துவைத சுருதிக்கு விரோதமாதலினாலும் சேதன சடங்கட்கு அபேதம் கூடாமையாலும்] கூடாதென்றறிக. ஆனால் அவ்விரண்டிற்குமுள்ள பேதம் கயிற்றிற்கும் அதனிடத்துக் கற்பிதமாகக் காணப்படும் பாம்பிற்கும்போலக்கற்பிதமாதலின் வாஸ்தவபேதத்திற்கு விலக்ஷணமாம். அபேதமும் பாதத்தாலாகியதாதலின் அபேதத்திற்கு விலக்ஷணமாம். ஆகவே பேதாபே

தங்களுக்கு விலக்ஷணமா (வேறா)கிய கற்பித தாதான்மிய சம்பந்தமாம். ஜகத்துப்பிரகிருதியின் காரியமாதலால், அதற்கும் பிரஹ்மத்திற்கும் இதுவே சமபந்தமாமெனத் தெரிந்துகொள்க.

ஆழ்ந்து பார்க்கிலவை நேரொதிராம் - விசாரித்துப்பார்க்கின் [அழியாமை தோன்றுமைகளுக்கு] மாறும் அதாவது அழிவதும் காணப்படுவதுமாம். அந்த விரண்டிற்கும் அயல் - சத்துக்கும் அசத்துக்கும் (சதசத்து விலக்ஷணம), அபின்ன பின்னவயல் - அபேத விலக்ஷணமும, பேத விலக்ஷணமும, தொர்ந்ததாதான்மியம் - சம்பந்தம் தாதான்மியமாம்.

க-ரை. ஜகத்து சத்த சத்துக்களுக்கு வேறாகிய பாவபதார்த்தமும், பிரஹ்மத்தோடு பேதா பேதங்களுக்கு வேறாகிய கற்பிததாதான்மிய சம்பந்தமுடையதுமாம். எ-ம் (௩)

[விருத்தம்.]

கஉக சர்க்கரையைப் புலிவடிவா யறியினது துக்கசா தன
மாய்ப் பின்னர்ச்
சர்க்கரையென் றறியினின்ப சாதனமாந் தனக்கய
லாந் தன்மையாலே
துக்கசா தனமுமென்றன் சொருபமுல கெனுமறி
வாற் பிரஹ்ம மென்னுந்
தக்கவறி வாலின்ப சாதனமு மானதிந்தத் தன்மை
யென்னே (௪)

இ-ன். சர்க்கரையை - [புலிவடிவாகச் செய்து வைத்திருக்கின்ற] சருக்கரையினை, புலி வடிவாய் - [நாமரூப கற்பனையால் வாஸ்தவமாகிய] புலியென்று, அறியின் - [ஒருவன்] பார்த்தால், அது - அச்ச

ருக்கரைப் புலியானது, துக்கசாதனமாய் - [அவனுக்கு] த் துக்கத்துக்குக் காரணமாயும், பின்னர் - பின்பு, சர்க்கரை என்று அறியின் - [இதுபுலியன்று தித்திப்புடைய] சருக்கரை யென்றறிந்தால், இன்ப சாதனம் ஆம் - சுகத்துக் கேதுவுமாகும், தனக்கு அயல் ஆம் தன்மையால் - அச்சருக்கரையானது தனக்கு வேறுயுள்ள ஓர் விஷயமாயிருத்தலால், [அஃது அங்ஙனமாதல் கூடும்,] என் தன் சொரூபம் - [அவ்வாறு எனக்கு வேறாகாத சச்சிதானந்தமாகிய] என்னுடைய சொரூபமானது, உலகு எனும் அறிவால் - [நாமரூப கற்பனையால் இது] பிரபஞ்ச மென்றறியும் அறிவினாலே, துக்க சாதனமும் - [எனக்குத்] துக்கத்துக்குக் காரணமும், பிரஹ்மம் என்னும் தக்க அறிவால் - நான் பிரஹ்மம் என்றறிகின்ற [மோக்ஷத்திற்கு] உரிய சாதனமாகிய பிரஹ்ம ஞானத்தினாலே, இன்ப சாதனமும் - பிரஹ்மானந்தத்துக்குக் காரணமும், ஆனது - ஆயிற்று, இந்தத் தன்மையை - இங்ஙனமாய சுபாவமானது, என்னே - ஆச்சரியமாம். எ—று

பொ — ரை. புலிவடிவமாகச் செய்துவைத்திருக்கிற சர்க்கரையினை நாமரூப கற்பனையால் வாஸ்தவமான புலியென்று ஒருவனறிந்தால், அச்சர்க்கரைப் புலியானது அவனுக்குத் துக்கத்துக்குக் காரணமாயும், பின்பு இது புலியன்று தித்திப்புடைய சருக்கரை யென்றறிந்தால் சுகத்துக்குக் காரணமாகும். அச்சர்க்கரையானது தனக்கு வேறுயுள்ள ஓர் விஷயமாயிருத்தலால், அஃது அங்ஙனமாதல் கூடும். அவ்வாறு எனக்கு வேறாகாத சச்சிதானந்தமாகிய என்னுடைய சொரூபமானது நாமரூபமாகிய கற்பனையால் இது பிரபஞ்ச மென்றறியும் அறிவினாலே எனக்குத் துக்ககாரணமும், நான் பிரஹ்மம் என்று அறிகின்ற மோக்ஷத்திற்குரிய பிரஹ்மஞானத்தினாலே பிரஹ்மானந்தத்திற்குக் காரணமும் ஆயிற்று. இங்ஙனமாய சுபாவம் ஆச்சரியமாம். எ—ம்.

க-ரை. தனது சொரூபமே தனக்கு ஒருகாற்றுக்கத்துக்குக காரணமும் ஒருகாற் சுகத்துக்குக் காரணமுமாயிருந்தது ஆச்சரியம். எ-ம். (௪)

௩௨௪. ஒட்டாத போதா முறக்கமதை யேனுமுள் ள
மொட்டில் வம்மதன துற்பவமுங் கெட்டனவி ப்
பந்தநிலை நீங்கியொன்றும் பற்றுப் பகற்படி க
வந்தநிலை நல்லதுவீ டாம். (௫)

இ-ள். உள்ளம் – மனமானது, ஒட்டாத போது - [யாதொரு விஷயத்தையும்] பற்றாத காலத்தில், ஆம் - உண்டாகின்ற, உறக்கம் - நித்திரையும், எதையேனும் ஒட்டில் - எந்த விஷயத்தையாவது பற்றுமாயின், வரும் - அதனாலுண்டாகின்ற, அதன் உற்பவமும் – பற்றப்பட்ட அப்பொருளின் தோற்றமும், கெட்டன - ஆகிய இரண்டும் பிறவித்துக்கத்தைத் தருவனவாம் [ஆதலால்] இப்பந்த நிலை நீங்கி – இந்தப் பிறப் பிறப்பாகிய சமுசாரத்திற் கட்டுப்படுத்து கின்ற கேவல சகலங்களினின்று விலகி, ஒன்றும் பற்று - யாதொரு பொருளையும் பொருந்தாத, பகல் படிகம் - மத்தியான சூரியனுக்கெதிரில் வைக்கப்பட்டபடிகத்தினது [ஜசங்கமாய் (ஒன்றோடும் சம்மந்தப்படா, மல்) நிற்கின்ற,] அந்த நிலை நல்லது - அந்த நிலை மேலானது, வீடு ஆம் - அந்நிலையால் மோக்ஷமுண்டாகும். எ—று

பொ – ரை. மனமானது யாதொரு விஷத்தையும் பற்றுதகாலத்தில் உண்டாகின்ற நித்திரையும் எந்த விஷயத்தையாவது பற்றுமாயின், அதனாலுண்டாகின்ற பற்றப்பட்ட அப்பொருளின் தோற்றமும் ஆகிய இரண்டும் பிறவித்துக்கத்தைத் தருவனவாம். ஆதலால் இந்த ஜனன மரண சமுசாரத்திற் கட்டுப்படுத்துகின்ற கேவல சகலங்களினின்று விலகி யாதொருபொருளையும் பொருந்தாத மத்தியான சூரி

யனுக்கெதிரில் வைக்கப்பட்டபடி சத்தினது அசங்கமாய் நிற்கின்ற அந்த நிலை மேலானது. அந்நிலையால் மோக்ஷமுளதாகும். எ—று,

க-ரை. மனமானது கேவல சகலங்களிற்றாக் கற்று நின்றால் அந் நிலையால் மோக்ஷமுளதாம். எ-ம். [௫]

௧௨௫. சத்தாதி நோக்காஞ் சகநோக்கே சன்ம வித் தா
மித்தை யொழித்தெங்கு மேகமாம்—புத்துணர் வு
தன்சொருப ஞான மிஃதடையிற் சாதலுட ன்
பின்பிறப்புச் சாராமை பேறு [௬]

இ-ள். சத்த ஆதி நோக்காம்—[சரோத்திராதி யிந்திரியங்களால்] சத்த முதலாகிய விஷயங்களைக் காணுதலாகிய, சகநோக்கே-பிரபஞ் சத்தின் காட்சியே, சன்ம வித்து ஆம்-பிறப்புக்குக் காரணமாம், இத் தை ஒழித்து-இப்பிரபஞ்சக் காட்சியை விடுத்து, எங்கும் ஏகம் ஆம் புத்துணர்வு-எவ்விடத்தும் பூரணமாய் ஏகமாயுண்டாகின்ற அற்புத வறி வே, தன் சொருப ஞானம்-சச்சிதானந்தகனமாகிய தனது சொருப ஞானமாம், இஃது அடையில்-இச்சொருப ஞானத்தை ஒருவன் பெற றால்,பின்—இச்சொருப ஞானத்தைப் பெற்ற பின்பு, சாதலுடன்-மர ணத்துடன், பிறப்பு-ஜனனத்தையும், சாராமை பேறு-அடையாமை அவனுக்குப் பயனும. எ—று.

பொ—ரை. சரோத்திராதி இந்திரியங்களால் சத்த முதலாகிய விஷயங்களைக் காணுதலாகிய பிரபஞ்சத்தின் காட்சியே பிறப்புக்குக் காரணமாம். இப்பிரபஞ்சக் காட்சியை விடுத்து எவ்விடத்தும் பூரண மாய் ஏகமாயுண்டாகின்ற அற்புத வறிவே சச்சிதானந்த கனமாகிய தனது சொருப ஞானம். இச்சொருப ஞானத்தை ஒருவன் பெற்றால், பெற்ற பின்பு மரணத்துடன் ஜனனத்தையும் அடையாமை அவனுக் குப் பயனும். எ—று.

ச-ரை. இந்திரிய ஞானத்தை யொழித்துப்பரிபூரண ஞானம் பெற்றவனுக்கு மோக்ஷம் பயனும். எ-ம். (சு)

௧௨௬. நெய்க்கடலைப் புக்கொருவெண் ணெய்ப்பூனைக் குட்டி குடித்
தொக்க விலதாக வொழித்ததென் ற—லொக்குமே
பேத மொன்று மில்லாப் பிரஹ்மந் தனைப் பே தா
பேத மிலஞ் ஞானம் பிரிப்பு (எ)

இ-ள். பேதம் ஒன்றும் இல்லா-சுவகதாதி பேதங்களுள் ஒன்று மில்லாத, பிரஹ்மந்தனை—[ஏக பரிபூரணமாயுள்ள] பிரஹமத்தை, பேத அபேதம் இல்-அதனிடத்துப் பேதமாகவாவது அபேதமாகவாவது இல்லாமல், [அவ்விரண்டிற்கும் வேறாய்க் கற்பிதமாயிருக்கின்ற], அஞ்ஞானம்-அஞ்ஞானமானது, பிரிப்பு-[கடல் மலை முதலிய நாநா வஸ்துக்களாகத் தோன்றுமாறு] பிரிவு செய்தது [எதனை யொக்குமெனக்கேட்டில்], ஒரு வெண்ணெய்-ஒரு வெண்ணெயென்று கூறுகின்ற, பூனைக்குட்டி-பூனைப்பறழானது, நெய்க்கடலைப் புக்கு-நெய்ச்சமுத்திரத்தையடைந்து, குடித்து-அதனைப்பருகி, ஒக்க இலது ஆக-அந்நெய் முழுதும் இல்லாததாக, ஒழித்தது என்றல்-கெடுத்தது என்று சொல்லுதலை, ஒக்கும்=ஒப்பாகும். எ-று.

பொ-ரை. சுவகதாதி பேதங்களுள் ஒன்றுமில்லாத ஏக பரிபூரணமாயுள்ள பிரஹ்மத்தை அதனிடத்துப் பேதமாகவாவது அபேதமாகவாவது இல்லாமல் அவ்விரண்டிற்கும் வேறாய்க் கற்பிதமாக விருக்கின்ற, அஞ்ஞானமானது, கடல் மலை முதலிய நாநாவஸ்துக்களாகத் தோன்றுமாறு பிரிவு செய்தது, எதனை யொக்குமெனக் கேட்டில், ஒரு

வெண்ணெயென்று கூறுகின்ற பூனைக்குட்டியானது நெய்சமுத்திரத்தை யடைந்து அதனைப் பருகி அந்நெய்முழுதும் இல்லாததாகக் கெடுத்ததென்று கூறுதலை யொப்பாகும். எ-று.

குளிர்ந்த காலத்திலும் நெய்யினிடத்தில் வெண்ணிறமும் வெண்ணெயென்னும் பெயரும் உண்மையாக இல்லையாயினும் பேதாபேத விலக்ஷணமாகக் கற்பிக்கப்பட்டிருத்தல்போலச் சிருஷ்டிகாலத்திலும் பிரஹ்மத்தினிடத்து மலை ஆறு முதலிய நாமரூபங்கள் உண்மையாகவில்லையாயினும் பேதாபேத விலக்ஷணமாகக் கற்பிக்கப்பட்டிருக்கின்றன கற்பனையாகிய அந்நாம ரூபங்களின் மறைப்பால் அறியாதவர்க்கு வாஸ்தவ சொரூபம் விளங்காமையால் அந்நாம ரூபங்களே மறைத்ததென்பார் "பேதமொன்று மில்லாப் பிரஹ்மந் தனைப்பேதா, பேதமிலஞ் ஞானம் பிரிப்பு, நெய்க்கடலைப் புக்கொருவெண்ணெய்ப் பூனைக் குட்டிகுடித், தொக்க விலதாக வொழித்ததென்றல் லொக்கும்" என்று கூறினர்.

க-ரை. நெய்யினிடத்து வெண்மை முதலிய நாமரூப பேதம் மித்தையாயிருத்தல் போலப் பிரஹ்மத்தினிடத்து மலை ஆறு முதலிய நாமரூபபேதம் மித்தையாயிருக்கின்றன. எ-ம். [எ]

உஉஎ புத்திமக வீன்று பொருட்சுகஞ்சே மித்தது தா
னெய்த்தும்மை நோக்கிலதற் கியாது—சத்தா தி
மண்ணோ யளித்துங்கண் மாண்பிழந்தீ ரீதவித்தைப்
பெண்ணினைப்பின் பற்று பிழை (அ)

இ-ள் புத்தி மகவு ஈன்று - புத்தியென்னுங் குழந்தையைப் பெற்று, பொருள்சுகம் - பொருளாகிய பிரஹ்மானந்தத்தை, சேமித்து - மறைத்துவைத்து, அதுதான் - அப்புத்தியென்னுங் குழந்தையானது எய்த்து - இளைத்து, உம்மை நோக்கில் - உங்களைப் பார்த்தால்,

அதற்கு - அப்புத்திரியென்னும் குழந்தைக்கு, ஈயாது - [பொருளா கிய பிரஹ்மானந்தத்தைக்] கொடாமல், சத்த ஆதிமண்ணே அளித்து - சத்தமுதலாகிய விஷயங்களென்னும் மண்ணையே உண்பித்து, உங் கள் மாண்பு இழந்தீர் - உங்களுடைய பெருமையை இழந்துவிட்டீர் கள், ஈது - இப்பெருமையிழப்புக்குக் காரணம், அவித்தைப் பெண் ணினை - அஞ்ஞானமாகிய மனைவியை, பின்பற்று பிழை - பின்பற் றிச் செல்லும் குற்றமாம் எ-று.

பொ-ரை. புத்திரியென்னும் குழந்தையைப்பெற்றுப் பொருளா கிய பிரஹ்மானந்தத்தை மறைத்துவைத்து அப்புத்திரியென்னுங் குழந்தையானது இளைத்து உங்களைப் பார்த்தால், அப்புத்திரியென்னும் குழந்தைக்குப் பொருளாகிய பிரஹ்மானந்தத்தைக் கொடாமல், சத்த முதலாகிய விஷயங்களென்னும் மண்ணினையே உண்பித்து, உங்களு டைய பெருமையை இழந்துவிட்டீர்கள். இப்பெருமையிழப்புக் குக் காரணம் அஞ்ஞானமாகிய மனைவியைப் பின்பற்றிச்செல லும் குறறமாம். எ-று.

க-ரை. மனோ துக்கத்துக்குக் காரணம், அஞ்ஞானத்தோடு கூடி யிருத்தல். எ-ம. [அ]

கூ௪அ. பந்தமித்தை நீவிர் பாப்பிரஹ்மங் துக்கமெலா ஞ்

சிந்தையவே கேட்டுந் தெளிமினே—குந்திமக ன்

றன்னையய லானெனவெண் டாழ்வொழிந்தா னெல் லெய் தி

முன்சொல்லக் கேட்டம் முறை (௧)

இ-ள். முன் - முற்காலத்தில், குந்திமகன் - குந்திதேவிக்குப் புத்திரனாகிய கன்னனென்னு மோரரசனை, தன்னை-[க்ஷத்திரியனாகிய] தன்னை, அயலான்என - க்ஷத்திரியனின் வேறான (இதிர்த) வனென்று,

என் - நினைத்திருந்த, தாழ்வு - இழிவினின்றும், ஒழித்தான் - நீக்கி னன், எல் - சூரியன், எய்தி - வந்து, சொல்ல - [நீ க்ஷத்திரியனென்று] உபதேசிக்க, கேட்டு - [தான் க்ஷத்திரியனென்று] அறிந்து, அம்முறை - அவ்விதம், நீவிர் - [மனிதர்களே நம்மைப் பிரஹ்மத்தினும் வேறாய்ப் பிறந்திறக்கின்ற ஜீவனாக எண்ணியிருக்கின்ற] நீங்கள், பரப்பிரஹ்மம் - [ஜீவனல்லீர்] பரிபூரணானந்தப் பிரஹ்ம சொருபமாயிருக்கின்றீர், [நாங்கள் பரிபூரணானந்த சொரூபப் பிரஹ்மமாயின் ஜனனமரண சமுசார பந்தத்தில் அகப்பட்டுத் துக்கமடைவானேன் என்று கேட்பீராயின் கூறுதும்], பந்தம் மித்தை - ஜனனாதி பந்தம் வாஸ்தவமாக இல்லை, துக்கம் எலாம் - தோற்றுகின்ற துன்பமனைத்தும், சிந்தையவே - மனத்துக்கேயன்றி [நமக்கில்லை], கேட்டும் - [இவ்வுண்மையைச் சுருதியும் குருவுங்கூறக்] கேட்டும், [அநுபூதியளவிற்கண்டும்], தெளிமின் - அறிந்து கொள்ளுங்கள். எ—று.

பொ - ரை. முற்காலத்திற் குந்திதேவிக்குப் புத்திரனாகிய கன்னனென்னு மோரரசன் க்ஷத்திரியனாகிய தன்னை க்ஷத்திரியனினும் இழிந்தவனென்று நினைத்திருந்த இழிவினின்றும், நீக்கினன். சூரியன்வந்து நீ க்ஷத்திரியனென்று உபதேசிக்கத் தான க்ஷத்திரியனென்று அறிந்து அவ்விதம் மனிதர்களே நம்மைப் பிரஹ்மத்தினும் வேறாய்ப் பிறந்திறக்கின்ற ஜீவனாக வெண்ணியிருக்கின்ற நீங்கள் ஜீவனல்லீர், பரிபூரணானந்தப் பிரஹ்ம சொரூபமாயிருக்கின்றீர். [நாங்கள் பரிபூரணானந்த சொரூபப் பிரஹ்மமாயின் ஜனன மரண சமுசார பந்தத்திற் கட்டுப்பட்டுத் துக்கமடைவானேன் என்று கேட்பீராயின் கூறுதும்] ஜனனாதி பந்தம் மித்தை தோற்றுகின்ற துன்பமனைத்தும் மனத்துக்கேயன்றி நமக்கில்லை, இவ்வுண்மையைச் சுருதியுங் குருவுங் கூறக்கேட்டும் அநுபூதியளவிற் கண்டும் அறிந்து கொள்ளுங்கள். எ—று.

றுக்கங்கள் அவ்வவ்வாகாமாகப் பரிணமிக்கின்ற மனத்துக்கே யன்றி அவற்றையறியுஞ் சாக்ஷி வடிவாயுள்ள நுமக்கில்லை யென்பார் "றுக்கமெலாஞ் சிந்தையவே" என்றார்.

க - ரை. மனிதர்களே சன்னன் சூரியனுற்றனது உண்மைப் பிறப்பையறிந்தாற்போல, நீவிர் சுருதி குருசுவாநுபவங்களால் உமது எதார்த்த சொரூபத்தை யறியுங்கள். எ—று, (க)

[கட்டளைக் கலித்துறை]

௨௨௬. எல்லோன் கிரணமதெல்லா விடத்து மிலங்குதல்கண்
ணில்லாதவர்க ளறியாத வாறெனவீங்குருப்பே ர்
புல்லா தொளிர்பரி பூரணந்தன்னை மெய்ப்போ
தவக் க
ல்லா தவரெவ்வி தத் தானுஞ் சற்று மறிவரிதே ௧௦

இ-ள், எல்லோன் கிரணம் - சூரியனுடைய வொளியானது, எல்லா இடத்தும் - சர்வதேசங்களிலும், இலங்குதல் - பிரகாசித்தலை, கண் இல்லாதவர்கள் - குருடர்கள், அறியாத ஆறு என - அறிந்து கொள்ளாத தன்மைபோல, ஈங்கு - இவ்வஞ்ஞான காலத்தில், உருப் பேர் புல்லாது - உருவநாமங்களைப் பொருந்தாமல், ஒளிர் - விளங்காநின்ற, பரிபூரணந்தன்னை - பிரஹ்மசொரூபத்தை, மெய்ப்போத அக்கர் அல்லாதவர் - உண்மையாகிய ஞான நேத்திரமுடைய ரல்லாத அஞ்ஞானிகள், எவ்விதத்தானும் - எந்தவகையினாலும், சற்றும் - கொஞ்சமும், அறிவு அரிது - அறிதலருமையாம். எ—று.

பொ—ரை சூரியனுடைய வொளியானது சர்வதேசங்களிலும் பிரகாசித்தலைக் குருடர் அறிந்துகொள்ளாத தன்மைபோல, இவ்வஞ்ஞானத்தைக் கண் உருவநாமங்களைப் பொருந்தாமல் விளங்காநின்ற பிர

ஹ்ம சொரூபத்தை உண்மையாகிய ஞான நேத்திரமுடைய ரல்லாத அஞ்ஞானிகள் எந்த விதத்தாலும் கொஞ்சமும் அறிதலருமையாம். எ—று.

க—ரை, சூரியப் பிரகாசம் குருடருக்குத் தோன்றுமைபோலப் பிரஹ்மப் பிரகாசம் அஞ்ஞானிகளுக்குத் தோன்றாது. எ-ம். (௬0)

௬0. எனக்கிது வேண்டு மெனக்கிது வேண்டுமென் றெ
ண்ணியெண்ணிக்
கனத்திடுமுள்ளந்தற் கட்டும்பகையதிக் காதலின்றித்
தினக்கான் போன்றது வாகி விடயத்திற் செல்லலொடு
வினைக்கட் டிலாத மனமுத்தி மேவுவிக் குந்துணையே
(௬௧)

இ—ள். எனக்கு இது வேண்டும் - எனக்கு இப்பொருள் வேண்டும், எனக்கு இது வேண்டும் - எனக்கு இப்பொருள் வேண்டும், என்று, எண்ணிஎண்ணி - நினைத்து நினைத்து, கனத்திடும் - தலிக்கின்ற, உள்ளம் - மனமானது, தன்கட்டும்பகை - தன்னைச் [சனன மரண சமுசாரத்திற்] பந்திக்கின்ற விரோதியாம், இக்காதல் இன்றி - இவ்வாசையில்லாமல், தினக்கான்போன்றது ஆகி - சூரியன் போலப் பிரகாசமுடையதாய், விடயத்தில் - சத்தாதி விஷயங்களில், செல்லலொடு - சென்று பற்றுதலும், வினை - கருமங்களால், கட்டு - தன்னைப் பந்தமுறுத்துதலுமாகிய தொழில், இல்லாத - ஒழிந்த, மனம் - [அருவ] மனமானது, முத்தி மேவுவிக்கும் - மோக்ஷத்திற் செலுத்தும், துணை - தோழனும், எ—று.

பொ—ரை, எனக்கு இப்பொருள் வேண்டும் எனக்கு இப்பொருள் வேண்டும் என நினைத்து நினைத்துத் தலிக்கின்ற மனமானது தன்னைச் சனனமரண சமுசாரத்திற் பந்திக்கின்ற விரோதியாம். இவ்வா

சை யில்லாமல் சூரியன்போலப் பிரகாசமுடையதாய்ச் சத்தாதி விஷயங்களிற் சென்று பற்றுதலும் கருமங்களால் தன்னைப் பந்தமுறத்துதலுமாகிய தொழி லொழிந்த அருவமன மானது மோக்ஷத்திற் செலுத்துந் தோழனும். எ—று.

வினைக்கட்டாவது தொழில்நிகழுங்காலத்தில் இத்தொழிலுக்கு நான் கர்த்தா வென்றெழுஞ் சங்கற்பமாம்.

க—ரை, ஆசையாற் றாவித்த மனம் தனக்குப் பகையும், அஃதின்றிச் சுருக்குமமாகிய மனம் தனக்குறவும், ஆம். எ—ம். (௧௧)

௧௨௧. மதுவாரி கானற் புனற்கடற் சார்ந்தம் மகிமையினைப்
புதிதா யடைந்ததென் பொய்யொக்கு மேபரி பூரணத்தாற்
றுதைதேச காலவத் தந்தமின் றூய சுகமெனுநான்
உதியாத பொய்விடயஞ் சார்ந்தபின் புற்ற துரைத்திடினே. (௧௨)

இ—ள். பரிபூரணத்தால் - தனது பரிபூரண சுபாவத்தால், துதைந்த - நெருங்கிய, தேசகாலத்து அந்தம் இன்று ஆய - தேசத்தினுலுங் காலத்தினுலும் வஸ்துவினுலும் முடிவில்லாததாகிய, சுகம் எனும் நான் - சச்சிதானந்த சொருபப் பிரஹ்மமென்று கூறுகின்ற நான், உதியாத பொய் விடயஞ் சார்ந்து - வாஸ்தவத்திலுண்டாகாத மித்தையாகிய விஷயங்களைக்கூடி, இன்பு உற்றது உரைத்திடின் - இன்பமடைந்ததாக நினைத்ததைச் சொல்லுமிடத்து, மதுவாரி — [உண்பவர்களுக்குப் பசிமாணங்களைப் போக்குவதாகிய] அமுத சமுத்திரமானது, கானல் புனல் கடல் சார்ந்து — கானல் நீரால் நிறைந்த சமுத்திரத்தைக் கூடி, அம்மகிமையினை - [தன்னைப் பருகுவார்க்குப் பசிமாணங்களைப் போக்

குவதாகிய] அப்பெருமையை, புதிதாய் - அக்கானல் நீர்ச் சமுத்திரத்தைக் கூடினபின், அடைந்தது என் பொய் ஒக்கும் - பெற்றது என்று சொல்லும் பொய்யை யொப்பாகும். எ-று.

பொ—ரை. தனது பரிபூரண சுபாவத்தால் நெருங்கிய தேசத்தினுலும் காலத்தினுலும் வஸ்துவினுலும் முடிவில்லாததாகிய சச்சிதானந்த சொரூபப் பிரஹ்மமென்று கூறுகின்ற நான், வாஸ்தவத்திலுண்டாகாத மித்தையாகிய விஷயங்களைக் கூடி இன்பமடைந்ததாக நினைத்ததைச் சொல்லுமிடத்து, உண்பவர்களுக்குப் பசி மரணங்களைப் போக்குவதாகிய அமுத சமுத்திரமானது, கானல் நீரால் நிறைந்த சமுத்திரத்தைக் கூடித் தன்னைப் பருகுவார்க்குப், பசி மரணங்களைப் போக்குவதாகிய அப்பெருமையை அக்கானல் நீர்ச் சமுத்திரத்தைக் கூடினபின் பெற்றது என்று சொல்லும் பொய்யை ஒப்பாகும். எ-று.

ஆனந்தம் சத்து முதலியவற்றிற்கு உபலக்ஷணம்.

க-ரை. சச்சிதானந்த சொரூபமாகிய நான் மித்தையாகிய விடயங்களைக் கூடி இன்பமடைந்ததாக நினைத்தது மயக்கம். எ-ம். (௧௨)

௧௩. பித்திகை யைச்சண மென் றோவிய மென்று பேதமுற
வத்திய சித்துக்கண் காணுங்கை பித்திகை யாயறியும்
புத்தி யிலானுல கென்றே ருவனிதைப் பொய்மை யென்று
பத்திசெய் ஞானி யறியான் பரமெனப் பார்த்திடுமே (௧௩)

இ—ள். பித்திகையை - [சுண்ணச்சாந்திருற் தீற்றிச் சித்திரமெழுதப்பட்டுள்ள] சுவரினை, [அதின் மீது தீற்றியுள்ள சுண்ணச் சாந்தினையும் அதின்மீது எழுதியுள்ள சித்திரத்தையும் ஒருங்கே சுவ

ரென்றறியாமல்], சுவம் என்று - இஃது சுண்ணச் சாந்தென்றும், ஓவியம் என்று - இஃது சித்திரமென்றும், பேதம் உற - வேறுவேறு பொருளாக, அத்தியசித்து - கற்பித்து, கண்காணும் - [ஒருவனுடைய] நேத்திரேந்திரியம் அறியும், கை - அஸ்தத்தின் கண்ணுள்ள தொக்கிந்திரியமானது, பித்திகையாய் அறியும் - [தனக்குச் சுண்ண முதலிய அக்கற்பிதங்கள் தோன்றாமையால் அவற்றை விடுத்து]ச் சுவர்மாத்திரமாக அறியும், [இத்திருஷ்டாந்தம்போல,] புத்தி இலான் - அஞ்ஞானியானவன் - உலகு என்று ஒருவன் — [பிரஹ்மம் பிரத்தியக்ஷமாகத் தோன்றாமையால் அதனை மலை ஆறு முதலிய நாநாபேதமாகத் தோற்றுகின்ற] பிரபஞ்சமென்று அறிவான், இதை — [நாமரூப பேதத்தால் நாநா கூறுபாடாயுள்ள] இப்பிரபஞ்சத்தை, பொய்மை என்று - [பிரஹ்மத்தில் கற்பிதமாகலின்] மித்தையென்று நிச்சயித்து, பத்தி செய் ஞானி - யாவரும் வழிபடுதற்குரிய ஞானியானவன், அறியான் - [அதனியஸ்தம் அதிஷ்டானத்தின் வேறாகாமையால் இதன் கண்ணுள்ள நாமரூப பேதங்களை]ப் பாராமல், பரம் எனப்பார்த்திடும - [இந்நாமரூபங்களில் அநுஸூதமாய் வியாபித்துள்ள சச்சிதானந்த சொரூபத்தைத் தனது அநுபூதியால்] பிரஹ்மமென்றறிவான். எ-று,

பொ-ரை. சுண்ணச்சாந்தினால் தீற்றிச் சித்திரமெழுதப்பட்டுள்ள சுவரினை அதன்மீது தீற்றியுள்ள சுண்ணச் சாந்தினையும் அதன் மீதுள்ள சித்திரத்தையும் ஒருவகே சுவரென்றறியாமல் இஃது சுண்ணச் சாந்தென்றும் இஃது சித்திரமென்றும வேறுவேறு பொருளாகக் கற்பித்து ஒருவனுடைய நேத்திரேந்திரியம் அறியும். கையின்கண்ணுள்ள தொக்கிந்திரியமானது தனக்குச் சுண்ணமுதலிய அக்கற்பிதங்கள் தோன்றாமையால் அவற்றை விடுத்து சுவர் மாத்திரமாக அறியும். இத்திருஷ்டாந்தம் போல, அஞ்ஞானியானவன் பிரஹ்மம் பிரத்தியக்ஷமா

கத்தேன்றுமையால் அதனை நானா பேரமாகத் தோன்றுகின்ற பிரபஞ்சமென்றறிவான். நாமரூப பேதத்தால் நானா கூறுபாடுள்ள இப்பிரபஞ்சத்தினைப் பிரஹ்மத்திற் கற்பிதமாகலின் மித்தையென்று நிச்சயித்து யாவரும் வழிபடுதற்குரிய ஞானியானவன் அத்தியஸ்தம் அதிஷ்டானத்தின் வேறாகாமையால், இதன் கண்ணுள்ள நாமரூப பேதங்களைப் பாராமல் இந்நாமரூபங்களிலநுகதமாய் வியாபித்துள்ள சச்சிதானந்த சொரூபத்தைத் தனது அநுபூதி வலியாற் பிரஹ்மமென்றறிவான். எ-று.

ஐ ஆகு பெயர், அறியான் என்பது முற்றெச்சம்.

க-ரை. ஒரே வஸ்துவை அஞ்ஞானியும் ஞானியும் முறையே. நாம ரூபக்காட்சியால் பிரபஞ்சமென்றும் சச்சிதானந்தக் காட்சியால் பிரஹ்மமென்றும் அறிவார்- எ-ம். (௧௩)

௧௪. உள்ளன் மினேமெய் யொழிவும் மிறப்பென வும் வடிவ ம்
கொள்ளப் படுவதுந் தாமா யிருக்கின்ற கொள்கையி ௵
லெள்ளப் படுவது மன்றீதன் றீதன் றெனவளைத்து ந்
தள்ளினங் கெஞ்சொரு மெய்யறி வானந்த சா க
ரமே (௧௪)

இ-ள். மெய் ஒழிவு-[மனிதர்களே உமது] சரீரத்தினது நாசத்தை, உம்இறப்பு என-உமது மரணமென்று, உள்ளன்மின்-நினையாதேயுங்கள்; ஏனெனிற் பற்றப்படுவதும் விடப்படுவதுமாகிய அந்நிய வஸ்துவாயிருத்தலாலென்க ஆனல் இச்சரீரம் எமது சொரூபமல்லவெனின் மற்றியாது எமது சொரூபமென்று கேட்பீராயின் கூறுதும்], உம் வடிவம்- உங்களுடைய சொரூபம், தாமாயிருக்கின்ற கொள்கையினுல்- [ உமது சரீரம்போல வுமக்கு வேறுகாமல் ] அன்னியமாக

விருக்கும் தன்மையால், சொன்னப்படுவதும் என்னப்படுவதும் அன்று-பற்றப்படுவதும் விடப்படுவது மல்ல, [மற்றெத்தன்மைத்தெனின் அதற்கு மேற்கூறுகின்றார்], ஈது அன்று ஈது அன்று என-[உம்மாற் பார்க்கப்படும் ஒவ்வொரு அனான்ம பதார்த்தத்தையும்] இஃது யானல்ல இஃது யானல்ல என்று நேதி பண்ணி, அனைத்தும் தள்ளின் - [இவ்வாறு] எல்லா அனான்ம வஸ்துக்களையும் நீத்தினால், அங்கு-[எதிரிட்டறிய அனான்ம வஸ்துக்களில்லாத] அவ்விடத்து, எஞ்சு-மிஞ்சியிருக்கின்ற, ஒரு-அகண்டைகாரசமாயுள்ள, மெய் அறிவு ஆனந்த சாகரம்-சத்தியஞானானந்த சமுத்திரமாம். எ-று.

பொ-ரை. மனிதர்களே! உமது சரீரத்தினது ராசத்தை உமது ராசமென்று நினையாதேயுங்கள். ஏனெனில், பற்றப்படுவதும் விடப்படுவதுமாகிய அன்னிய வஸ்துவாயிருத்தலாலென்க. ஆனால், இச்சரீரம் எமது சொரூபமல்லவெனின் மற்றியாது எமது சொரூபமென்று கேட்பீராயின். கூறுதும். உமது சொரூபம் உமதுசரீரம்போல உமக்கு வேறாகாமல் அன்னியமாயிருக்கும் தன்மையால் பற்றப்படுவதும் விடப்படுவதுமல்ல மற்றெத்தன்மைத்தெனின் அதற்கு மேற் கூறுகின்றார். உம்மாற் பார்க்கப்படும் ஒவ்வொரு அனான்மபதார்த்தத்தையும் இஃது யானல்ல இஃது யானல்லவென்று நேதிபண்ணி இவ்வாறு எல்லா அனான்ம வஸ்துக்களையும் நீக்கினால் எதிரிட்டறிய அனான்ம வஸ்துக்களில்லாத அவ்விடத்துமிஞ்சி யிருக்கின்ற அகண்டை காசமாயுள்ள சத்தியஞானானந்த சமுத்திரமாம். எ-று

க-ரை. மனிதர்களே உமது சொரூபஞ் சரீரமன்று சச்சிதானந்தம். எ—ம். [சஎ]

௯௨௪. அச்சுத மாகி யமலமு மாமெய் யறிவிடத் தே
யிச்சகந் தோற்றமட் டேயெனு ஞான மிழந்தமையே
நச்சுட ருனென்றுந் தன்ன வயலென்று நாடியவ் வை
வச்சுதன் போதன் வசத்தழிந் தாதற்குக் காரணமே. [௪௫]

இ—ள். நச்சு உடல் - ஒருவன் தன்னால் விரும்பப்படுகின்ற சரீரமே, தான் எனவும் - தனது சொரூபமெனவும், அயல் - சரீரத்திற்கு வேறாயுள்ள பொன் பூமி முதலியன, தன்ன என்றும் - தன்னுடையன வென்றும், [நிச்சயித்து], நாடி - அவற்றை யிச்சித்து, அ - அந்த இச்சையால், வைவச்சுதன் [வசத்து] - நமனிடத்துச் [சிக்கி], அழிந்து - இறந்து, போதன் வசத்து - அயனிடத்து [சிக்கி], ஆதற்கு - பிறத்தற்கு, காரணம் - ஏதுவானது, அச்சுதம் ஆகி - அழிவற்றதாகி, அமலமும் ஆம் - மலமற்றதுமாயிருக்கின்ற, மெய் அறிவு இடத்து - சச்சிதானந்தவடிவப்பிரஹ்மத்தினிடத்து, இச்சகம் - இப்பிரபஞ்சமானது, தோற்ற மாட்டேஎனும் - [கானற்சலம்போல]த் தோன்றுதல் மாத்திரமே யன்றி உள்ளதல்ல வென்றறியும், ஞானம் இழந்தமை - அறிவைப் பெற்றுக்கொள்ளாமையாம். எ—று.

வெ—ரை, ஒருவன் தன்னால் விரும்பப் படுகின்ற சரீரமே சொருபமென்றும், சரீரத்திற்கு வேறாயுள்ள பொன் பூமி முதலியன தன்னுடையனவென்றும், நிச்சயித்து அவற்றையிச்சித்து அந்த இச்சையால் நமனிடத்துச் சிக்கியிறந்து அயனிடத்துச் சிக்கிப் பிறத்தற்குக் காரணம். அழிவற்றதாயும் மலமற்றதாயுமிருக்கின்ற சச்சிதானந்த வடிவப் பிரஹ்மத்தினிடத்து இந்தப்பிரபஞ்ச மானது கானற் சலம்போலத் தோன்றுதல் மாத்திரமேயன்றி யுள்ளதல்ல வென்றறியும் அறிவைப் பெற்றுக் கொள்ளாமையாம். எ—று.

௪-வா. நருவனை பிறந்திறத்தற்குக் காரணம் பிரபஞ்சத்தில் மித்தியாபுத்தி யுளதாகாமை. எ—ம். (௪௫)

௪௬. சீவ சிருட்டியு ளோதுந்தன் சங்கற்பந் தீரவிட்டோ
னேவர் சிருட்டி யிமையினு முத்தன்கட் டேவர்செய்தார்
தாவி லிறையரு ளாளன்செய் யான்றனைத் தான்புரியான்
மேவுற் றிடாது சடத்துவத் தாலது மித்தையதே (௪௬)

இ-ள். எவர் சிருட்டி-பிரமா முதலியயாவருடைய சிருட்டிக்கப்படு பிரபஞ்சம், இமையினும்-பொருந்தியுள வெனினும், சீவ சிருட்டியுள்-ஜீவர்களுடைய சிருட்டிகளுள், தன்-தன்னுடைய, ஓதும்-[சிருட்டியென்ற] சொல்லப்படுகின்ற, சங்கற்பம்-[விருப்பு வெறுப்பு முதலியவாகக் கூறப்படுகின்ற] மனோவியாபாரங்களை, தீரவிட்டோன்-முற்றிலுமொழித்தவன், முத்தன்-முத்தி பெற்றவனாவன், கட்டு எவர் செய்தார்-[ஆனால் ஜீவர்களுக்குப்] பந்தத்தை யாவருண்டுபண்ணினவர் [என்று விசாரிக்கப்புகின்], இறை-ஈசுரன், தாஇல் - அழிவற்ற, அருள் ஆளன்-கருணையையுடையவன், செயான்-[ஆதலால் அவன் துக்க காரணமாகிய பந்தத்தை] உண்டுபண்ணான், தனைத்தான் புரியான்-ஜீவன் தன்னைத்தானே பந்தித்துக் கொள்ளான், அது-அப்பந்தம், சடத்துவத்தால் – சடத்தன்மை யுடைமையால், மேவுற்றிடாது-ஜீவனைத் தானே வந்து பற்றாது, [ஆகையால்], அது-[செய்தற்குக் கர்த்தாவின்றிய] அப்பந்தமானது, மித்தை - மயக்கத்தாலாகியதாம், எ—று.

பொழி. பிரமா முதலிய யாவருடைய சிருட்டிக்கப்படு பிரபஞ்சம் பொருந்தியுளவெனினும் ஜீவர்களுடைய சிருட்டிகளுள் தன்னு

டைய சிருட்டி யென்று சொல்லப்படுகின்ற விருப்பு வெறுப்பு முத லியவாகக் கூறப்படுகின்ற மனோவியாபாரங்களை முற்றிலுமொழித்த வன் முத்தி பெற்றவனாவன். ஆனால் ஜீவாகளுக்குப் பந்தத்தை யாவ ருண்டு பண்ணினவரென்று ஆராயப்புகின் ஈஸ்வரன் அழிவற்ற கரு ணையையுடையவ னாகையால் அவன் தக்க காரணமாயுள்ள பந்தத்தை யுண்டுபண்ணான் ஜீவன் தன்னைத்தானே பந்திதநுகொள்ளான். அப் பந்தஞ் சடத்தன்மையுடைமையால் ஜீவனைத்தானே வந்து பற்ருது. ஆகையால் செய்தற்குக் கர்த்தாவின்றிய அப்பந்தம் மயக்கத்தாலாகிய தாம். எ-று.

ஏனைய ஜீவர்களுடைய சிருட்டியுமடங்க எவர்எனப் பலர்பாலாற் கூறினர். சிருட்டி ஆகு பெயர்.

இங்கே மனத்தின் சங்கற்பம் ஜீவசிருட்டியென்று கூறியிருப்பது போலக் கைவல்லியத்தில் 'அகந்தையாமபிமானங்கள் கோபங்களாசை களிவை யெல்லா, மிகழ்ந்த ஜீவனார் சிருட்டிகளாகுங்காணீசனார் செய லன்றே' எனவும், சங்கற்ப நாசமே முத்தியெனக் கூறியது போல "மூவாம் பரன் சிருட்டிகளுயிர்க்கெலா முத்தி சாதனமாகுஞ், ஜீவனார் செயுஞ் சிருட்டிடடங்களைச் செனிப்பிக்கும் பிணியாகுந், தாவராதி கனை செத்திடிலொருவர்க்குஞ் சனனங்கணியாவாம், கோபமாதி கனைசித்தி டிற் பந்தமாங் கோமே பிறவிகள் போமே" எனவுங் கூறியிருத்தல் காண்க.

க-ரை, மித்தையாகிய பந்தம் ஒருவனுக்குத் தனது சங்கற்ப நாசத் தால் நாசமாம். எ-ம். [கக]

௧௩௪. மெய்யினை மெய்யெனும் புத்தி விடான்சன்மம் விட்டுவிடான்
மெய்யினைப் பொய்யெனும் புத்தி யுளானின்ப வீடுவிடான்
ஐயமின் ருய்மன மெய்ப்பொரு ளாகி யழுந்துமதன்
மெய்யுரு வாமென் றருமறை கூறும் விதியினன்றே [௧எ]

இ-ள். மெய்யினை - தேகத்தை, மெய் எனும் - உண்மை யென்று நிச்சயிக்கின்ற, புத்தி விடான் - நிச்சயத்தை யொழிக்காதவன், சன்மம் விட்டுவிடான் - பிறப்பிறப்பிற் சுழலுவான், மெய்யினை - தேகத்தை, பொய் எனும் - அசத்து என்று நிச்சயிக்கும், புத்தி உளான் - நிச்சயமுடையவன், இன்பவீடு விடான் - ஆனந்த மயமாகிய மோக்ஷத்தையடைவான், [இங்ஙனமாதற்குக் காரணம் என்னையெனின்], ஐயம் இன்று ஆய் - சந்தேகமில்லாமல், மனம் - எவனுடைய அந்தக்கரணமானது, எப்பொருள் ஆகி - எந்தவஸ்துவினுருவத்தையடைந்து, அழுந்தும் - பதிந்திருக்குமோ, [அந்த மனமுடையவன் மறுபிறப்பில்], அதன் மெய் உரு ஆம் என்று - அவ்வஸ்துவினுடைய எதார்த்த சொருபமாகுவனென்று, அருமறை - அருமையாகிய வேதத்தின்கண், கூறும் - விதிக்கப்பட்டுள்ள, விதியின் - நியமமாதலால். எ - று.

பொ—ரை, தேகத்தை உண்மை யென்று நிச்சயிக்கு நிச்சயமுடையவன் பிறப்பிறப்பிற் சுழலுவான். தேகத்தை அசத்தென்றெண்ணும் புத்தியையுடையவன் ஆனந்த மயமாகிய மோக்ஷத்தை யடைவான். இங்ஙனமாதற்குக் காரணம் என்னையெனின், சந்தேகமில்லாமல் எவனுடைய அந்தக்கரணமானது எந்த வஸ்துவினுருவத்தையடைந்து பதிந்திருக்குமோ அந்த மனமுடையவன் மறுபிறப்பில்

அவ்வஸ்துவினுடைய எதார்த்த சொரூபமாகுவனென்று அருமையாகிய வேதத்தின் கண் விதிக்கப்பட்டுள்ள நியமமாதலால்- எ—று

க — ரை. ஒருவன் பந்தமடைதற்கும் மோக்ஷமடைதற்கும் அவனது மனோவிருத்தியே காரணம். எ—ம் (கஎ)

[விருத்தம்]

கஅ. கானி லளிகள் வணங்கி மதுக்கமலத் தருந்தத் தவனி
யந்த த்
தான மிருந்து முணுமல் மரைதனையுங் குலையத் தாக்
குதல்போ ல்
ஞானி தனைப்பூ சனைபுரிந்து நல்லோ ரின்ப நலல் கண்டு
மீன ரிகழ்ந்து தனபுறப்ப ரெரிவாய் நாகத்
தினைவதற்கே (கஅ)

இ-ள். கானில் - [செய்மைக்கண் ணுள்ள] சோலைகளில்] வாசஞ் செய்கின்ற], அளிகள் - வண்டுகளே, [தடாகத்திற் சென்று], கமலத்து - [அங்கு மலர்ந்திருக்கின்ற] தாமரை மலரினிடத்து, வணங்கி - தலை குனிந்து, மது அருந்த — [அதன் கண்ணுள்ள] தேனைப்பருக, தவனி - மண்டேமானது, அந்தத்தானம் இருந்தும - அந்தத் தடாகத்தின்கண் வாசஞ்செய்தும், உணுமல் - அம்மலரினிடத்துள்ள தேனைப் பருகாமல், மரைதனையும - அத்தாமரை மலரையும், குலையத்தாக்குதல்போல் -வருந்தும்படி தாவித்தாவி மோதுதல்போல், நல்லோர் — மோக்ஷவிச்சையுடைய விவேகிகள், ஞானிதனை - ஜீவன்முத்தனை, பூசனை புரிந்து — [சாதேசத்திலிருந்துந் தெரிந்தவர்து புஷ்பபலாதிகளால் விதிப்படி] ஆராதித்து, [அவனு றுபதேசிக்கப் பெற்று], இன்பம் நலல்கண்டும் - பிரஹ்மானந்தமடைதலைத் தெரிந்திருந்தும், ஈனர் ◦

அவிவேகிகள், எரிவாய்நரகத்து - அக்கினிசுவாலிக்கின்ற நரகத்தின்கண் [வீழ்ந்து], இனைவதற்கு — வருந்துவதற்காக, இகழ்ந்து - [அச்சீவன் முத்தனை] நிந்தித்து, துன்புறுப்பர் - வருந்தச்செய்வர். எ-று.

பொ—ரை. செம்மைக்கண்ணுள்ள சோலைகளில் வாசஞ்செய்கின்ற வண்டுகள் தடாகத்தில் சென்று அங்கு மலர்ந்திருக்கின்ற தாமரைமலரினிடத்துத் தலை குனிந்து அதன்கண்ணுள்ள தேனைப் பருக, மண்டூகமானது அத்தடாகத்தின்கண் வாசஞ்செய்தும் அம்மலரினிடத்துள்ள தேனைப் பருகாமல் அத்தாமரை மலரையும் வருந்தும்படி தாவித்தாவி மோதுதல்போல, மோக்ஷவிச்சையுடைய விவேகிகள் ஜீவன்முத்தனைத் தூரதேசத்திலிருந்துந் தெரிந்துவந்து புஷ்பவாதிகளால் விதிப்படி ஆராதித்து அவனாலுபதேசிக்கப்பெற்றுப் பிரஹ்மானந்தமடைதலைத் தெரிந்திருந்தும், அவிவேகிகள் அக்கினி சுவாலிக்கின்ற நரகத்தின்கண் வீழ்ந்து வருந்துவதற்காக அச்சீவன்முத்தனை நிந்தித்து வருந்தச்செய்வர். எ-று.

க—ரை ஞானியைப் பூசித்தவர் மோக்ஷவின்பமுந் தூஷித்தவர் நரகத்துன்பமும் அடைவர். எ-ம். (கஅ)

கந௮. தேக மவத்தை யொன்றிலிருந் தொன்றி லுதாத்
தீர்ந்தொழிய த்
தேகி யொழியா தறிவாய்நித் தியமாய்த் திகழு விவை
யறி வி
வேக மில்லா ரவ் வுடலை மெய்யென் றகந்தை மமதை
யுற் று
மோகிக் கின்றார் துயர்க்கடலின் மூழ்கா தென்று
மீளுவரோ (கக)

இ-ள். தேகம் - தூலசரீரமானது, அவத்தை ஒன்றில் இருந்து - சாக்கிர மென்னும் ஓரவஸ்தையில் விளங்கியிருந்து, ஒன்றில் இலதா - சொப்பனா வஸ்தையில் விளங்குதலின்றி, தீர்ந்து ஒழிய - நீங்கிப் போக, தேகி - ஆன்மாவானது, ஒழியாது - [எல்லா அவஸ்தைகளிலும்] இல்லாததாகாமல், அறிவாய் - [அத்தேகத்தினது உண்மையையும் இன்மையையும் அறியும்] சாக்ஷியாய், நித்தியமாய் - அதனால் எக்காலமும் உள்ளதாய், திகழ - விளங்க, இவை அறி விவேகம் இல்லார் - இவற்றை யுணர்கின்ற ஞானமில்லாதவர், அவ்வுடலை - அந்த அநித்தியமாகிய தேகத்தை, மெய் என்று - நித்தியமென்று [நினைத்து], அகந்தை மமதை உற்று - அதையானென தென்றபிமானித்து, மோகிக்கின்றார் - மயங்குகின்றார் [இம்மயக்கமுடையார்], துயர்க்கடலில் - துக்க சமுத்திரத்தில், மூழ்காது - அழுந்திக்கிடப்பதன்றி, என்று மீளுவர் - எக்காலத்தில் சுகமாகிய கரை யேறுவர் [ஓர் காலத்துங்கரை யேறார்]. எ-று.

பொ-ரை. தூலசரீரமானது சாக்கிர மென்னும் ஓரவஸ்தையில் விளங்கியிருந்து சொப்பனாவஸ்தையில் விளங்காமல் நீங்கிப் போக, ஆன்மாவானது எல்லா அவஸ்தைகளிலும் இல்லாததாகாமல் அத்தேகத்தினது உண்மையையும் இன்மையையும் அறியுஞ்சாக்ஷியாய் அதனாலெக்காலமு முள்ளதாய் விளங்க, இவற்றையுணர்கின்ற ஞானமில்லாதவர் அந்த அநித்தியமாகிய தேகத்தை நித்தியமென்று நினைத்து அதையானெனதென் றபிமானித்து மயங்குகின்றார். இம்மயக்கமுடையார் துக்கசமுத்திரத்திலழுந்திக் கிடப்பதன்றி எக்காலத்திற் சுகமாகிய கரையேறுவர். ஓர் காலத்துங் கரையேறார். எ-று.

க-ரை. தேகான்ம புத்தியுடையார்க்கு அத்தேகான்மாக்களின் விவேகமின்மையால், துக்கமே பயனாம். எ-ம். (௪௧)

௩௰௩. குருட்டுக் கிழவி யொருத்திசற்றுங் குருடி லானை
வருந் தும் வண்ண
மருட்டினளென்பது போலும் வருந்து மாறின் சஞ்
ஞான ம
புரட்டித் துயரம் புரிந்ததென்றல் பொய்மெய்
யுமைத்துன் புறுத்தாது
இருட்டி லாநீ ருமையறியா திருந்த குறையே பிறி
தில்லை (௨௰)

இ-ள். [மனிதர்களே] இங்கு - இவ்வுலகத்தில், வருந்துமாறு - [பிறந்து மிறந்தும்] கஷ்டமடையுமாறு, அஞ்ஞானம் - [சடசபாவமுடைய] அவித்தையானது, புரட்டித்துயரம் புரிந்தது என்றல் - புத்தியை மாறு படுத்தி எம்மைத் துன்புறுத்தியது என்று கூறுதல், குருட்டுக் கிழவி ஒருத்தி, சற்றும் - அற்பமும், குருடு இலானை - குருடில்லாத சாமர்த்தியசாலியை, வருந்தும் வண்ணம் - துன்பமடையும்படி, மருட்டினளென்பது போலும் - மயக்கினளென்று சொல்லுகின்ற பிராந்தி வசனத்தை யொக்கும், [ஆனால் அஞ்ஞானம் எம்மைத் துன்புறுத்த வில்லையோ வெனின் அதற்குக் கூறுகின்றார்], பொய் மெய்யுமை - மித்தையாகிய அஞ்ஞானம் சத்தியமாகிய வும்மை, துன்பு உறுத்தாது - கஷ்டப்படுத்தாது, [ஆயின் எமக்கு இத்துன்பம் வருவானேனெனின், சற்றும்] இருட்டு இலாநீர் - அற்பமும் அஞ்ஞான சம்பந்தமில்லாத (அறிவு வடிவாயுள்ள) நீங்கள், உமை - உங்களை, அறியாது - [அப்பிறப்பிறப்புச் சுகதுக்காதி தருமங்களை யறியும் சாக்ஷி சொரூப ரென்று] விசாரித்தறியாது, இருந்த குறையே - [அத்தருமங்களையுடைய தேக மென்ற மயக்கி] யிருந்த குற்றமேயன்றி, பிறிது இல்லை - உமக்கு வேறாக ஓரஞ்ஞானமிருந்து வருத்தவில்லை. எ-று.

பொ-ரை. மனிதர்களே இவ்வுலகத்திற் பிரந்து மிறந்துங் கஷ்டமடையுமாறு சடசுபாவமுடைய அவித்தையானது புத்தியை மாறுபடுத்தி எம்மைத் துன்புறுத்தியது என்று கூறுதல், குருட்டுக் கிழவியொருத்தி அற்பமுங் குருடில்லாத சாமர்த்தியசாலியைத் துன்பமடையும்படி மயக்கினளென்று சொல்லுகின்ற பிராந்தி வசனத்தையொக்கும். ஆனால் அஞ்ஞானம் எம்மைத் துன்புறுத்தவில்லையோவெனின் அதற்குக் கூறுகின்றார். மித்தையாகிய அஞ்ஞானம் சத்தியமாகிய வும்மைக் கஷ்டப்படுத்தாது. ஆயின் எமக்கு இத்துன்பம் வருவானேன் எனின், அற்பமும் அஞ்ஞான சம்பந்தமில்லாத (அறிவு வடிவாயுள்ள) நீங்கள் உங்களை அப்பிறப்பிறப்புச் சுகதுக்க முதலிய தருமங்களையறியுஞ் சாக்ஷி வடிவமென்றறியாது அத்தருமங்களையுடைய தேகமென்று மயங்கியிருந்த குற்றமேயன்றி உமக்கு வேறாக ஓரஞ்ஞான மிருந்து மயக்கவில்லை. எ-று.

க-ரை. ஜீவர்களே நீங்கள் பிறவித் துன்பத்தில் வருந்துதற்குக் காரணம் அவிசாரமாம். எ-ம். (௨௰)

௧௪௦ காயா தீத மானசிதா காய வடிவா நீருதித் து
மாயா வணங்குற் றனமென்னன் மயக்கர் துக்க றும
தன்று
மாயா மயமா மஃதந்த மாயா மயமா மனத்தது
மை த்
தோயா தும்மைத் தோயினெரி சுடர்க்கா னலிநீ
ரவித்திடுமே (௨௧)

இ-ள்; காய அதீதமான — [தூல சூக்கும காரணமென்னு மூன்று] சரீரங்களிலுஞ் சம்பந்திக்காமல் [அநாதி நித்திய அசங்கபரிபூரணமா] யுள்ள, சிதா காயவடிவு ஆம் நீர் - சிதாகாய சொரூபராகிய

நீங்கள், உதித்து மாயா - பிறந்தும் இறந்தும், அணங்கு உற்றனம் என்னல் — துக்கமடைந்தோமென்று கூறுதல், மயக்கம் — [சரீரத்தின் தொழிலாகிய பிறப்பிறப்புக்களை உம்முடையனவாக மதித்தலால்] பிராந்தியாம், துக்கம் நமது அன்று — ஆதலால் அத்துக்கம் உம்முடையதன்று, [ஆனால் அத்துக்கம் யாவருடையதென்று கேட்பீராயின்], மாயா மயமாம் அஃது - மித்தையாகிய அத்துக்கமானது, அந்த மாயாமயம் ஆம்மனத்தது - அம்மித்தையாகிய மனத்தினுடையதேயாம், உமைத்தோயாது — [அக்காரணத்தால் அசங்கமாயுள்ள] உம்மைப் பற்றாது, [விளங்குகின்ற அத்துக்கமானது இருத்தற்கு வேறே ஆசிரயமின்மையால் எம்மையே ஆசிரயித்திருக்கிறதென்று கூறிய வாறு], உம்மைத் தோயின் - [நித்தியராயுள்ள வும்மிடத்து அநித்தியமாகிய அத்துக்கம் உண்மையாகச்] சம்பந்தித்திருக்குமாயின், எரிசுடர் - சுவாலிக்கின்ற அக்கினியை, கானலின்நீர் - [அவ்விடத்து அதனோடு சம்பந்தமுடையது போலக் காணப்படும்] கானற்சலமானது, அவித்திடும் - கெடுத்துவிடும். எ-று.

பொ-ரை. தூலசூக்குமகாரணமென்று மூன்று சரீரங்களிலுஞ் சம்பந்திக்காமல் அநாதி நித்திய அசங்க பரிபூரணமாயுள்ள சிதாகாய சொரூபராகிய நீங்கள் பிறந்தும் இறந்தும் வருத்தமடைந்தோமென்று கூறுதல் சரீரத்தின் தொழிலாகிய பிறப்பிறப்புகளை உம்முடையனவாக மதித்தலாற் பிராந்தியாம். ஆதலால, அத்துக்கம் உம்முடையதன்று. ஆனால் அத்துக்கம் யாவருடையதென்று கேட்பீராயின், மித்தையாகிய அத்துக்கமானது அம்மித்தையாகிய மனத்தினுடையதேயாம். அக்காரணத்தால் அசங்கமாயுள்ள வும்மைப்பற்றாது. விளங்குகின்ற அத்துக்கமானது இருத்தற்கு வேறே ஆசிரயமின்மையால் எம்மையே ஆசிரயித்திருக்கிறதென்று, நீர் சங்கித்தவாறு நித்தியராயுள்ள வும்மிடத்து, அநித்தியமாகிய அத்துக்கம் உண்மையாகச் சம்பந்தித்

துருக்குமாயின், சுவாலிக்கின்ற அக்கினியை அவ்விடத்து அதனோடு சம்பந்த முடையதுபோலக் காணப்படுங் கானற்சலமானது கெடுத்து விடும். எ-று.

க-ரை. ஜனனமரணாதி சமுசாரதுக்கங்கள் மனோ கற்பிதமே யன்றி நித்தியமாகிய ஆன்மாவினிடத்தின்று. எ-ம். [௨௧]

(அ)வது உற்ற துரைத்தலியல் முற்றிற்று.

## [௯] வது உறுவது கூறலியல்

[விருத்தம்]

௪௪௧. பையகம்பார்ப் பார்க்கமே தோன்றுமன்றிப் புறந்
தோன்று பக்கம் பார்ப்போர்க்
கையமின்றிப் புறந்தோன்று மல்லதகந் தோன்று
தவ் வடைவே போல
வையில்சற்சிற் சுகப்பார்ப்போர்க் கவ்வகண்டந்
தோன்றுமன்றி ஞாலந் தோன்று
வையகம்பார்ப் பார்க்கதுவே தோன்றுமன்றிப்
பரம்பொருடான் வயங்கிடாதே (௧)

இ-ள், பை அகம்பார்ப்பார்க்கு - ஒரு பையினது உட்பக்கத்தை நோக்குவோர்க்கு, அகமேதோன்றும் அன்றி - அதனது உட்பக்கமாத்திரம் விளங்குமல்லாமல், புறம் தோன்று - வெளிப்பக்கம் விளங்க மாட்டாது, பக்கம் பார்ப்போர்க்கு - அப்பையினுடைய வெளிப்பக்கத்தை நோக்குவோர்க்கு, ஐயம்இன்றி - சந்தேகமில்லாமல், புறம்

தோன்றும் அல்லது - வெளிப்பக்கம் விளங்குமல்லாமல், அகம்தோன்றாது – உட்பககம் விளஙகமாட்டாது, அவ்வடைவுபோல – அம்முறைமை யொப்பாக, நைவில் – கெடுதலில்லாத, சற்சிற்சுகம் - சச்சிதானந்த [அகண்டைகரச சொரூப] த்தை, பார்ப்போர்க்கு – தரிசிப்பவர்களுக்கு, அவ்வகண்டம் தோன்றும் அன்றி – அந்த ஏக பரிபூரண சொரூபமே விளங்குமல்லாமல், ஞாலம் தோன்று - பிரபஞ்சம் விளங்கமாட்டாது, வையகம் பார்ப்பார்க்கு – [நாமரூபமயமாகிய] பிரபஞ்சத்தைக் காண்பவர்களுக்கு, அதுவே தோன்றும் அன்றி – அந்தப் பிரபஞ்சமாத்திரம் விளக்குமல்லாமல், பரம்பொருள் - பிரஹ்ம சொரூபமானது, வயங்காது – விளங்காது. எ–று.

பொ–ரை. ஒரு பெயினுடைய உட்பக்கத்தை நோக்குவோர்க்கு அதனது உட்பக்கமே விளங்குமல்லாமல் வெளிப்பக்கம் விளங்மாட்டாது. அப்பெயிடைய வெளிப்பக்கத்தை நோக்குவோர்க்குச் சந்தேகமில்லாமல் வெளிப்பக்கம் விளங்குமல்லாமல் உட்பக்கம் விளஙகமாட்டாது. அந்த முறைமை யொப்பாகக் கெடுதலில்லாத சச்சிதானந்த அகண்டைகரச சொரூபத்தைத் தரிசிப்பவர்களுககு அந்த ஏக பரிபூரண சொரூபமே விளங்குமல்லாமல் பிரபஞ்சம் விளங்மாட்டாது. நாமரூபமயமாகிய பிரபஞ்சத்தைக் காண்பவர்களுக்கு அந்தப் பிரபஞ்ச மாத்திரம் விளங்குமல்லாமல் பிரஹ்ம சொரூபம் விளங்மாட்டாது. எ–று.

தோன்றுதென்பவற்றின் துவ்வீறு குறைந்த பின்றன.

க–ரை. அகநாட்ட முடையவர்க்குப் பரம்பொருளும் புறநாட்ட முடையார்க்குச் சகத்தும் தோற்றும். எ–ம். (௪)

௪௨. போக்கியலால வளிவானைப் பொருவுறா தெனினு
மந்தப் போக்கு நீங்கி
னீக்கமற்று வானுடனாய் நிற்குமது போனிறைந்து
நிமல மாகிப்
போக்குவா வறுபிரஹ்மத் துருவமனம் பிறிதெனி
னும் புணர்ப்பு நீங்கிற்
சூக்குமமா யுடனாகி யின்புதவுஞ் சமாதியின்கட்
டுலங்கு மீதே (உ)

இ-ள், வளி - காற்றானது, போக்கு இயலால் - சலித்துச் செல்லுந் தன்மையினால், வானைப் பொருவுறாது எனினும் - ஆகாயத்தை யொப்பாகாதென்றாலும், அந்தப்போக்கு நீங்கின் - அச்சலிக்குந் தன்மை யொழிந்தால், நீக்கம் அற்று - பிரிவின்றி, வான் உடனாய் நிற்கும் - ஆகாயத்தோடு கலந்திருக்கும், அதுபோல் - அதை யொத்து, நிறைந்து நிமலமாகி - பரிபூரணமாயும் நிருமலமாயும், போக்குவரவு அறு - அசலமாயுமுள்ள, பிரஹ்மத்து - பிரஹ்மசொருபத்தில், உருவமனம் - [விடய சம்பந்தமுடைய] தூலமனம், பிறிது எனினும் - வேறென்று கூறப்படினும், புணர்ப்பு நீங்கில் - [விஷய] சம்பந்த மொழிந்த விடத்து, சூக்குமம் ஆய் - [அம்மனம்] நுண்ணிதாய், உடன் ஆகி - [பிரஹ்மத்துடன்] ஏகமாய் [அடங்கி], இன்பு உதவும் - ஆனந்தத்தைக் கொடுக்கும், ஈது - இவ்வநுபவமானது, சமாதியின் கண் - நிருவிகற்பசமாதியினிடத்து, துலங்கும் - [அஃதுடையவனுக்கு] விளங்கும். எ-று.

பொ-ரை. காற்றானது சலித்துச்செல்லுந் தன்மையினால் ஆகாயத்தை யொப்பாகாதென்றாலும் அச்சலிக்குந் தன்மை யொழிந்தாற் பிரிவின்றி ஆகாயத்தோடு கலந்திருக்கும் அதையொத்துப் பரிபூரண

மாயும் நிருமலமாயும் அசலமாயுமுள்ள பிரஹ்ம சொரூபத்தில் விடய சம்பந்தமுடைய தூலமனம் வேறென்று கூறப்படினும், விடய சம்பந்தமொழிந்தவிடத்து அம்மனம் நுண்ணிதாய்ப் பிரஹ்மத்துடன் ஏகமாயடங்கி ஆனந்தத்தைக் கொடுக்கும். இவ்வநுபவமானது நிருவிகற்ப சமாதியினிடத்து அஃதுடையவனுக்கு விளங்கும். எ—று.

க - வா மனத்தூலத்தன்மை நீங்கிய விடத்துப் பிரஹ்ம சொரூபத்தைச்சார்ந்து சுகாநுபவந்தரும். எ—ம். [௨]

[வெண்பா]

௧௬௩ சற்றே யுளமசையிற் சாருஞ் சகானுப வ
மற்றக்கா லின்ப வநுபவமாம்—பெற் ற
வுடற்றொழிலாற் றுன்புமத னோய்வாலே யின் பு
மடுப்பதிங்கி யாரறியா தார் [௩]

இ—ள் பெற்ற - [மனிதர்களுக்குப் பிராரத்த வசத்தால்] கிடைக்கப்பட்ட, உடல்தொழிலால் — சரீரத்தாற்செய்யு முயற்சியினாலே, துன்பும் - துக்கமும், அதன் ஓய்வால் - அச்சரீரத்தாற் செய்யு முயற்சியின்மையால், இன்பும் - சுகமும், அடுப்பது - கிட்டுதலை, இங்கு - இவ்வுலகத்தில், யார் அறியாதார் — யாவருணராதவர்கள், [இத்திருஷ்டாந்தம்போல] உளம் சற்று அசையில் - மனமானது [விடயவாசனையால்] கொஞ்சமேனுஞ் சலிக்குமானால், சக அனுபவம் சாரும் - [அப்பொழுது] பிரபஞ்சத்தோற்றமுளதாம், அற்றக்கால் - [அம்மனதுக்குச்] சலிப்பு நீங்கியவிடத்து, இன்ப அநுபவம் ஆம் - பிரஹ்மாநந்தாநுபவம் உளதாம். எ—று.

பொ—ள்- மனிதர்களுக்குப் பிராரத்தவசத்தாற் கிடைக்கப்பட்ட சரீரத்தாற் செய்யு முயற்சியினாலே துக்கமும், அச்சரீரத்தாற் செய்யு

முயற்சி யின்மையாற் சுகமுங் கிட்டுதலே இவ்வுலகத்தில் யாவருணராத வர்கள். இத்திருஷ்டாந்தம்போல, மனமானது விடயவாசனையாற் கொஞ்சமேனுஞ் சலிக்குமானால் அப்பொழுது பிரபஞ்சத்தோற்றா வுளவாம். அம்மனதக்குச் சலிப்பு நீங்கியவிடத்துப் பிரஹ்மானந்தானு பவமுளதாம். எ-று.

க-ரை. மனமசைந்தாற் பிரபஞ்சானுபவமும் அஃது அசையாத விடத்திற் பிரஹ்மானந் தானுபவ முளவாம். எ-ம் (௩)

௪௪ புறப்போத மஞ்ஞன் புரிவா னுட் போத ஞ்
சிறப்பாய ஞானியிங்கிச் சிப்பா—னிறப்பா ங்
கடமாதிக் காட்சியாற் கட்டுமுத்தி தா னு
மிடவான்மக் காட்சியெய்த வே ]௪]

இ-ள். இங்கு - இவ்வுலகத்தில், புறப்போதம் - வெளிஞானத்தை, அஞ்ஞன் — அஞ்ஞானி, புரிவான் - விரும்புவான், உள்போதம் — ஆந்தர ஞானத்தை, சிறப்பாய - உயர்வாகிய, ஞானி - ஜீவன்முத்தன், இச்சிப்பான் - விரும்புவான், [ஏனெனின் முறையே], இறப்பு ஆம் - [பார்த்திருக்க] நாசமாகின்ற, கடம் ஆதிக்காட்சியால் - குடமுதலிய பிரபஞ்சப்பொருள்களைக்காணுதலால், கட்டும் - பந்தமும், இட - [பிர பஞ்ச வஸ்துக்களாகிய அத்தியஸ்தங்களுக்கு] ஆசிரயமாயுள்ள, ஆன்மக் காட்சி - ஆன்மாவைத் தரிசித்தலால், முத்தியும் - மோக்ஷமும், எய்த - அடைதற்கு. எ-று.

பொ-ரை. இவ்வுலகத்தில் வெளி ஞானத்தை அஞ்ஞானி விரும் புவான். ஆந்தர ஞானத்தை உயர்வாகிய ஜீவன் முத்தன் விரும்புவான். ஏனெனில், முறையே பார்த்திருக்க நாசமாகின்ற குட முதலிய பிரபஞ்சப் பொருள்களைக் காணுதலாற் பந்தமும், பிரபஞ்ச வஸ்துக்

களாகிய அத்தியஸ்தங்களுக்கு ஆசிரயமாயுள்ள ஆன்மாவைத் தரிசித்த லால் மோக்ஷமும் அடைதற்கு. எ-று.

உ-ரை. அஞ்ஞானி பிரபஞ்ச ஞானத்தை விரும்புவான் ஞானி பிரஹ்மஞானத்தை விரும்புவான். எ-று. (ச)

கசடு ஓடகமு நிற்குமெங்கு மொன்றுண் டெனவோரி
வீடுபல வென்றோரி னிற்காதே—ஓடுமே
அன்னியத்தைச் சார்கைக் கசையா தமையாது
தன்னிலைக்கேன் வேண்டுஞ் சலம் [ரு]

இ-ள். எங்கும் - எவ்விடத்தும், ஒன்று உண்டு என - [பரிபூரணமாகிய பிரஹ்மம்] ஒன்றேயிருக்கிறதென்று, ஓரின் - அறியின், ஓடு அகமும் நிற்கும் - [முன் விஷயங்களில்] ஓடித்திரிந்த மனமும் அவ்வாறு ஓடாமலடங்கும், வீடுபல என்று ஓரின் - [அங்கனமின்றிக் கட படமுதலியவாக] விரிந்துள்ள அநேகமிருக்கிறதென்றறியின், நிற்காது - அவ்வாறு நிற்காமல், ஓடும் - [விடயங்களைக்கண்டபொழுது அவ்வவ்விடயங்களிடத்துச்] செல்லும், [ஆனால் பிரஹ்மம் ஒன்றேயுள தென்றறிதற்கு மனஞ்சலிக்க வேண்டாவோ வெனின் அதற்குக்கூறு கின்றார்], அந்நியத்தைச் சார்கைக்கு - தனக்கு வேறாகிய வஸ்துக்களை யடைதற்கு, அசையாது அமையாது - சலிக்காமற் கூடாது, தன் நிலைக்கு - தனது எதார்த்த நிலையில் நிற்றற்கு, சலம் - அசைவு (தொழில்), ஏன் வேண்டும் - எக்காரியத்தின் பொருட்டு வேண்டும் [வேண்டா]. எ-று.

பொ-ரை. எவ்விடத்தும் பரிபூரணமாகிய பிரஹ்ம மொன்றே யிருக்கிறதெனறறிந்தால் முன் விடயங்களி லோடித் திரிந்த மனமும் அவ்வாறு ஓடாமலடங்கும். அங்கனமின்றிக் கடபட முதலியவாக

விரிந்துள்ள அநேகமிருக்கிறதென்றறியின், அவ்வாறு நிற்காமல் விடயங்களைக் கண்டபொழுது அவ்விடயங்களிடத்துச் செல்லும். ஆனால் பிரஹ்மம் ஒன்றே யுளதென்றறிதற்கு மனஞ்சலிக்க வேண்டாவோ வெனின், அதற்குக் கூறுகின்றார். தனக்கு வேறாகிய வஸ்துக்களை யடைதற்குச் சலிக்காமற் கூடாது. தனது எதார்த்த நிலையில் நிற்றற்கு அசைவு எக்காரியத்தின் பொருட்டு வேண்டும். வேண்டா. எ-று.

நிற்காது என்பது முற்றெச்சம்.

எல்லாம் பிரஹ்மமென் றறிதலும் மனத்தினது தொழிலாகயிருக்கத் தன்னிலைக்குச் சலிக்கவேண்டாவென்றது பொருந்துமாறு யாதெனின் எல்லாமென்றறிந்த கற்பித அறிவும் இறந்தவிடமே தனது நிலையாதலின் மனமிறந்த அவ்விடத்தில் மனத்தினது சலிப்பு இருக்காது. ஆதலால் "தன்னிலைக்கேன் வேண்டுஞ்சலம்" என்றார்.

க-ரை. பொருளொன்றெனக் காண்டல் மனம் அசையாமைக்கும், பலவெனக்காண்டல் மனம் அசைதற்கும், காரணங்கள். எ-ம் (௫)

கசசு மாற்ற மொழிய மனமொழிய நின்றார்க் கே
தோற்றுந் தமது சுகசொருப —மாற் ற
வருந்தி முயலாமன் மன்விடய மிச்சி த்
தருந்துமவர்க் குத்தோன்று தாங்கு. (௫)

இ-ள். மாற்றம் ஒழிய - வாக்கு விவகாரங்கெடவும், மனம் ஒழிய - மனோவிவகாரங்கெடவும், நின்றார்க்கே — [தனது நிலையில்] நின்றவர்களாகிய ஞானிகளுக்கே, தமது சுக சொருபம் — தம்முடைய பிரஹ்மானந்த சொருபம், தோற்றும் - விளங்கும், ஆற்றவருந்தி — மிகவுங் கஷ்டப்பட்டு, முயலாமல் - [அவ்வானந்தத்தையடையவதற்கு] முயற்சி செய்யாமல், மன் விடயம் - [தன்னிடத்தில் வந்து] பொருந்துகின்ற

விஷயபோகங்களை, இச்சித்து அருந்தும் அவர்க்கு - விரும்பிப் புசிப்ப வர்களுக்கு, தோன்றாது - [அவ்வானந்தம்] விளங்கமாட்டாது. எ-று.

பொ—ரை. வாக்கு விவகாரங்கெடவும் மனோ விவகாரங்கெடவும் தனது நிலையில நின்றவர்களாகிய ஞானிகளுக்கே தம்முடைய பிரஹ்மானந்த சொரூபம் விளங்கும். மிகவுங் கஷ்டப்பட்டு அவ்வானந்தத்தை யடைவதற்கு முயற்சி செய்யாமல் தன்னிடத்தில் வந்துபொருந்து கின்ற விஷயபோகங்களை விருமபிப் புசிப்பவர்களுக்கு அவ்வானந்தம் விளங்காது. எ-று

க—ரை. வாக்குமனங்களைக் கடந்து நின்றவர்க்கே பிரஹ்மானந்த மடையப்படும். எ-ம். (சு)

கசஎ நாமா ரெனவுளத்தி னாடார் பிறப்புட னே
சாமேவு மென்று சலிப்பினவை—போமோ பே
ரின்ப நயத்தா லியையுமோ மற்றிவர்க்கு த்
துன்பமே நீங்கா துறும் (எ)

இ-ள். நாம் ஆர் என — நாம் என்பது தேகமாதேகியாவென்று, உளத்தில் - அந்தக்கரணததின் கண், [நாடுவோர் — விசாரித்தறிந்தவர் ஞான வாயிலாகப் பிரஹ்மானந்த மனுபவிப்பார்], நாடார் - [அங்ஙனம்] விசாரித்தறியாதவர்கள், பிறப்புடன் சாமேவு மென்று — சனனமரண முளவாமென்று, சலிப்பின் — துக்கமடைந்தால், அவைபோமோ - அச் சனனமரணங்கள் ஒழியுமோ, பேர் இன்பம் நயந்தால் - [விசாரிலானு பவிக்கின்ற] பிரஹ்மானந்தத்தை விரும்பினுல், இயையுமோ - [அவ் வானந்தம்] கிடைக்குமோ, இவர்க்கு - [தம்மை விசாரித்தறியாத] இவர் களுக்கு, துன்பமே - முற்கூறிய ஜனன மரணமாகிய துக்கமே, நீங்கா துறும் - விலகாதிருக்கும். எ-று.

பொ-ளா. நாம் என்பது தேகமா தேகியா வென்று அந்தக்கரணத்தின் கண் விசாரித்தறிந்தவர்கள் ஞான வாயிலாகப் பிரஹ்மானந்த மனுபவிப்பார். அங்ஙனம் விசாரித்தறியாதவர்கள் ஜனன மரண மூளவா மென்று துக்கத்தையடைந்தால் அச்சனனமரணங்கள் ஒழியுமோ விசாரசீலானுபவிக்கின்ற பிரஹ்மானந்தத்தை விரும்பினுல் அவ்வானந்தங் கிடைக்குமோ, தம்மை விசாரித்தறியாத இவர்களுக்கு முற் கூறிய ஜனன மரணமாகிய துக்கமே விலகாதிருக்கும். எ-று.

நாட்டார் என்றதனுல் நாடுவார் என்பதும் அதன் பயனும் வருவிக்கப்பட்டன.

க-ரை. தம்மை விசாரித் தறியாதவர்க்குப் பிறவித்துக்கமே யுளதாம். எ-ம். (எ)

கசஅ சத்தாதியாம் விடயத் தொன்றாகிற் றன்மன து
பெத்தமுட னேதுக்கப் பேறுநல்கு—மித் தி
லொன் று
மாகா தசைவற் றிலங்கினன்றே முத்தி யெ னு
மேகாந்தப் பேறுநல்கு மே (அ)

இ-ள், தன் மனது - [ஒருவனுக்குத்] தன்னுடைய அந்தக்கரணமானது, சத்த ஆதியாம் - சத்த முதலாகிய, விடயத்து - விஷயங்களில், ஒன்று ஆகில் — யாதாயினுமோராகார (வடிவ) த்தையடைந்தால், பெத்தமுடன் - பந்தத்தைக் கொடுப்பதோடு, துக்கப்பேறும் நல்கும் - துன்பமாகிய பயனையுங் கொடுக்கும், இத்தில் — இவ்விஷயங்களில், ஒன்றும் ஆகாது - ஓர் வடிவத்தையுமடையாமல், அசைவு அற்று இலங்கின் - சலிப்பின்றி விளங்குமானுல், அன்றே - அத்தினமே, முத்தி எனும் - மோக்ஷமென்று சொல்லுகின்ற, ஏகாந்தப்பேறு - ஒப்பற்ற இலாபத்தை, நல்கும் - கொடுக்கும், எ-று.

பொ-ரை. ஒருவனுக்குத் தன்னுடைய அந்தக்கரணமானது சத்த முதலாகிய விஷயங்களில் யாதாயினுமோர் வடிவத்தையடைந்தால பந்தத்தைக் கொடுப்பதோடு துன்பமாகிய பயனையுங்கொடுக்கும். இவ்விஷயங்களில் ஓர் வடிவத்தையுமடையாமற் சலிப்பின்றி விளங்குமானல் அத்தினமே மோக்ஷமென்று சொல்லுகின்ற ஒப்பற்ற இலா பத்தைக் கொடுக்கும்- எ-று.

க—ரை. ஒருவனுக்குத் தன் மனது விஷயாகாரமடைந்தாற் பிறவித் துன்பத்தையும் நிராகாரமாயிருந்தால் முத்தியின்பத்தையும் கொடுக்கும், எ-ம். (அ)

௧௪௩ உள்ளிலகங் காரவரை யொவ்வொன்று கும்விடயத்
துள்ளமே பந்த முறுவிக்கும்—விள்ளுமிவ ற்
றோருருவுங் கேவலமுஞ் சாரா தொளிரும ன
மோரின்ப வீடுறுவிக் கும் (௯)

இ-ள். உள்ளில் - சரீரத்தினுள்ளே, விடயத்து - யாதாயினுமொரு விடயத்தைப்பற்றி, அகங்காரவரை - அகந்தை பரியந்தமாக, ஒவ்வொன்று ஆகும் — [சங்கற்ப விகற்பம் அல்லது நிச்சயம் அல்லது சிந்தனை அல்லது அகந்தையாகிய] ஒவ்வொரு வடிவமாகும், உள்ளம் - அந்தக்கரணமானது, பந்தம் உறுவிக்கும் - பந்தத்தையடைவிக்கும், விள்ளும் - சொல்லா நின்ற, இவற்று — [சங்கற்ப முதலிய] இவைகளில், ஓர் உருவும் - ஓராகாரத்தையும், கேவலமும் - நித்திரையையும், சாராது - பொருந்தாமல், ஒளிரும் மனம் — விளங்கா நின்ற அந்தக்கரணமானது, ஓர் இன்ப வீடு — ஒப்பற்ற ஆனந்த வடிவமாகிய மோக்ஷத்தை, உறுவிக்கும் - அடைவிக்கும். எ-று.

பொ-ரை. சரீரத்தினுள்ளே யாதாயினுமொரு விஷயத்தைப்பற்றி அகந்தைபரியந்தமாகச் சங்கற்ப விகற்பம அலலது நிசசயம் அலலது சிந்தனம் அல்லது அகந்தையாகிய ஒவ்வொரு வடிவமாகும். அந்தக்கரணமானது பந்தத்தை யடைவிக்கும். சொல்லாநின்ற சங்கற்ப முதலிய இவைகளில் ஓராகாரத்தையும் நித்திரையையும் பொருந்தாமல் விளங்காநின்ற அந்தக்கரணமானது ஒப்பற்ற ஆனந்தவடிவமாகிய மோக்ஷத்தையடைவிக்கும். எ-று.

க-ரை. சரீரத்தினுள்ளே விடய சங்கற்ப முதலிய பரிணாமமடைகின்ற மனமானது பந்தத்தையும இப்படிப்பட்ட சகலத்தையுங் கேவலத்தையும் பொருந்தாத மனம் மோக்ஷத்தையும் அடைவிக்கும். எ-ம. [க]

௱௫௰. ஈங்கு பொன்போ லாதிரப்போர்க் கீவோருக் கிம்மை
யினு ம்
வாங்கினர்க்கு மின்பால்கு மன்ஞான—மாங்குதி க்
கப்
பெற்றுரே சன்மப் பயன்பெற்றுர் பிறரெவ ரு
மற்றுரே யாவ ரது. [உ]

இ-ள். ஈங்கு - இவ்வுலகத்தில், பொன்போலாது - [யாசிப்பவருக்குத் தன்னைக் கொடுப்பவராகிய செல்வர்க்கு மறுமையிற் கொடுப்பதன்றி இம்மையிற் சுகங் கொடாத] பொன்னாகிய பொருளை யொப்பாகாமல், இரப்போர்க்கு ஈவோருக்கு - யாசிக்கின்றவராகிய முமுக்ஷுக்களுக்குத் தன்னைக் கொடுக்கின்றவராகிய ஞானிகளுக்கும், இம்மையினும் - [விதேகமுத்தியின் மாத்திரமின்றி] இச்சீவன் முத்தியினும், [பிரஹ்மானந்தத்தைக் கொடுப்பதோடு], வாங்கினர்க்கும் - தன்னைப்

பெற்றுக்கொண்டவராகிய சீடர்களுக்கும், இன்பம் நல்கும் - பிரஹ்மானந்தத்தைக் கொடுக்கின்ற, மன்ஞானம் - நித்தியமாகிய பிரஹ்ம ஞானத்தை, உதிக்கப்பெற்ரோரே - [தம்மிடத்து] உதயமாகப் பெற்றவரெவரோ அவரே, சன்ம பயன் பெற்றார் - [மானுடராகப் பிறந்த] பிறப்பின் பயனை அடைந்தவராவர், பிறர் எவரும் — அதனையடையா தவர் யாவரும், அது அற்றார் ஆவர் - அப்பிறப்பின் பயனையடையாதவராவர். எ—று.

பொ - ரை. இவ்வுலகத்தில் யாசிப்பவருக்குத் தன்னைக் கொடுப்பவராகிய செல்வர்க்கு மறுமையிற் கொடுப்பதன்றி இம்மையிற்சுகங் கொடாத பொன்னாகிய பொருளையொப்பாகாமல் யாசிக்கின்றவாகிய முமுக்ஷுக்களுக்குத் தன்னைக் கொடுக்கின்றவராகிய ஞானிகளுக்கும்,விதேக முத்தியினை மாத்திரமன்றி ஜீவன் முத்தியினும் பிரஹ்மானந்தத்தைக் கொடுப்பதோடு,தனனைப் பெற்றுக்கொண்டவராகிய சீடர்களுக்கும் பிரஹ்மானந்தத்தைக் கொடுக்கின்ற நித்தியமாகிய பிரஹ்ம ஞானத்தைத தம்மிடத்து உதயமாகப் பெற்றவரெவரோ, அவரே மானுடராகப் பிறந்த பிறப்பின் பயனையடைந்தவராவர். அதனையடையாதவர் யாவரும் அப்பிறப்பின் பயனையடையாதவராவர். எ—று.

க - ரை. பிரஹ்ம ஞானம் உதிக்கப் பெற்றவரே பிறப்பின் பயனையடைந்தவர். எ—ம். [௬]

௱௩௧. தேகமெனக் கண்டார் திகைப்புண்டார் தம்மையின் ப
மாகமெனக் கண்டார்மயலண்டார்—மோகமதான்
முன்னவரோ துக்கபந்த மூழ்குவார் முத்தியுற்றார்
பின்னோர் பெறுவாரப் பேறு. [௩௯]

இ-ள். தேகம் எனக்கண்டார் – [தம்மைத்] தேகமென்று கண்டவர் யாவரோ அவர், திகைப்பு உண்டார் - அஞ்ஞானத்தாலாகிய மயக்கத்தை யடைந்தவராவர், தம்மை - தங்களை இன்பமாகம் எனக் கண்டார் - ஆனந்தாகாயம் (பிரஹ்மம்) என்று கண்டவர் யாவரோ அவர், மயல் அண்டார் - அஞ்ஞானத்தாலாகிய மயக்கத்தையடையார், மோகமதால் – அம்மயக்கமுடைமையால், முன்னவரே - தம்மைத் தேகமெனக் கண்டவரே, துக்கபந்தம் மூழ்துவார் - துக்ககாரணமாகிய பந்தத்தினுள்ளே யழுந்துவார், முத்தியுறார் - மோக்ஷத்தையடையார், பின்னோ - தம்மைப பிரஹ்மமென்று கண்டவர், அப்பேறு பெறுவார் - [அஞ்ஞானத்தாலாகிய மயக்கம் நீங்கினமையால்] அந்த மோக்ஷமாகிய இலாபத்தை யடைவார். எ—று.

பொ-ரை. தம்மைத் தேகமென்று கண்டவர் யாவரோ அவர் அஞ்ஞானத்தாலாகிய மயக்கத்தை யடைந்தவராவர். தங்களை ஆனந்தாகாயம் (பிரஹ்மம) என்று கண்டவர் யாவரோ அவர் அஞ்ஞானத்தாலாகிய மயக்கத்தையடையார். அம்மயக்க முடைமையால் தம்மைத் தேகமெனக் கண்டவரே துக்க காரணமாகிய பந்தத்தினுள்ளே யழுந்துவார். மோக்ஷத்தையடையார். தம்மைப் பிரஹ்மம் என்று கண்டவர் அஞ்ஞானத்தாலாகிய மயக்கம் நீங்கினமையால் அந்த மோக்ஷமாகிய இலாபத்தை யடைவார். எ—று.

தம்மை என்பது முன்னுங் கூட்டப்பட்டது.

க–ரை. தம்மைத் தேகமெனக் காண்பவர் பந்தத்தையும் தம்மைப் பிரஹ்மமெனக் காணபவர் மோக்ஷத்தையும் அடைவர். எ-ம்.

[௰௧]

௩௰௨. பட்டிமா டொப்பப் படும்விடய முண்ணவெழுந்
துட்ட மனததைத் துறவாரே—கெட்டா
ரடங்கத் துறந்த வவரேயா னந்தத்
தடங்கடலாய் நிற்பார்க டாம். [௰௨]

இ-ள். பட்டிமாடு ஒப்ப-[தனக்கு எதிர்ப்படும்] பயிர்களையெல்லாந் தின்றழிக்கின்ற எருத்துக்கொப்பாக, படும்விடயம் - தனக்கு நேர்படுகின்ற சத்தாதி விஷயங்களை, உண்ணஎழும் - புசித்தற்குக் கிளம்புகின்ற, திட்டமனத்தை - கொடிய மனத்தை, துறவாரே - ஒழிக்காதவர்களே, கெட்டார் — [பிறந்து மிறந்தும்] கெடுவார்கள், அடங்கத் துறந்த அவர் - அம்மனத்தை முற்றிலு மொழித்தவர்கள், தடம் ஆனந்த கடலாய் - அபரிச்சின்னமாகிய சுக சமுத்திரமாக, நிற்பார்கள — [என்றுமழியாது] இருப்பார்கள். எ—று.

பொ-ரை. தனக்கு எதிர்ப்படும் பயிர்களையெல்லாந் தின்றழிக்கின்ற எருத்துக் கொப்பாகத் தனக்கு நேர்படுகின்ற சத்தாதிவிஷயங்களைப் புசிததற்குக் கிளம்புகின்ற கொடிய மனத்தை யொழிக்காதவர்களே, பிறந் து மிறந்துங் கெடுவார்கள். அம்மனத்தை முற்றிலுமொழித்தவர்சன் அபரிச்சின்னமாகிய சுக சமுத்திரமாக என்றுமழியாதிருப்பார்கள். எ—று.

கெடுவார் என எதிர்காலத்தாற் கூறற்பாலது சுருதிப்பிரமாணமாகிய தெளிவுபற்றிக் கெட்டார் என இறந்தகாலத்தாற் கூறப்பட்டது.

க-ரை. மனத்தைக் கெடாதவர், கெடுவார். கெடுத்தவர் சுகியாவார். எ—ம். [௰௨]

சஉ௰௩. எல்லாந்தா னென்றறிவான் ஞானி யிவைக டா
னல்லவய லென்றறிவா னஞ்ஞானி—தொல்லுலகர்
தோன்றும் பொழுது சுகவடிவர் தோன்று து
தோன்றுககாற் றோன்றுஞ் சுகம். [௰௩]

இ-ள். ஞானி - ஞானியானவன், எல்லாம் - [சாமும் அசாமுமாகத் தோன்றுகின்ற இப்பிரபஞ்சம்] அனைத்தும், தான் என்று

அறிவான் - பிரஹ்மமாகிய தனது சொரூபமென் றறிவான், அஞ்ஞானி - அஞ்ஞானியானவன், இவைகள் - இப்பிரபஞ்சங்கள், தான் அல்ல - தனது சொரூபமல்ல, அயல் என்று அறிவான் - தனக்கு வேறு என்று அறிவான், [ஆனால் ஞானிக்கு எப்பொழுதும் பிரபஞ்சந் தோன்றாதோவெனின அதறகுமேற் கூறுகின்றார்], தொல உலகம் - பழமையாகிய பிரபஞ்சமானது, தோன்றும்பொழுது - [பிரஹ்மவித்தாகிய ஞானிக்கு] விளங்குங் காலத்தில் சுகவடிவம் தோன்றாது - [தன்னுடைய] ஆனந்த சொரூபமானது விளங்கமாட்டாது, தோன்றாக்கால் - பிரபஞ்சம் விளங்காதபொழுது, சுகம் தோன்றும் - ஆனந்த சொரூபம் விளங்கும். எ—று.

பொ - ரை. ஞானியானவன் சாமும் அசாமுமாகத் தோன்றுகின்ற இப்பிரபஞ்சமனைத்தும் பிரஹ்மமாகிய தனது சொரூபமென்றறிவான். அஞ்ஞானியானவன் இப்பிரபஞ்சங்கள் தனது சொரூபமல்ல தனக்கு வேறு என்று அறிவான ஆனால் ஞானிக்கு எப்பொழுதும் பிரபஞ்சந் தோன்றாதோவெனின். அதறகுமேற் கூறுகின்றார் பழமையாகிய பிரபஞ்சமானது பிரஹ்ம வித்தாகிய ஞானிக்கு விளங்கும காலததில் தன்னுடைய ஆனந்த சொரூபம் விளஙகமாட்டாது. பிரபஞ்சம் விளங்காதபொழுது ஆனந்த சொரூபம் விளங்கும். எ-று.

க - ரை. பிரபஞ்சத்தை அஞ்ஞானி தனக்கு வேறாகவும் ஞானி தனது சொரூபமாகவுங் காண்பார். எ—ம். [௰௩]

ாஙௐ. கட்டற்ற நாய்போற கடுகி மனமோடுஞ்
சுட்டறிவு நீங்காத் துணையுமே—சுட்டிறந்தால்
வீக்கியநாண் பூட்டு விடுத்து மெழுந்தோடா
வாக்கன்றே போலு மது. [௰௪]

இ - ள. சுட்டு அறிவு — [ஒவ்வொரு விஷயங்களையும் இஃது கடம் இஃது படம் எனறு சுட்டியறிகின்ற] சுட்டுணர்வானது, நீஙகாத் துணையும் - ஒழியாதவளவும், கட்டு அற்ற நாய்போல் - கட்டு விடுத்த நாயைப்போல, கடுகி - வேகமாய், மனம் ஓடும் - மனம் [விஷயஙகளிற்] செல்லும், சுட்டு இறந்தால் — அவ்விஷயச் சுட்டுணர் வொழிந்தால்,

வீக்கிய - தன்னைக் கட்டியிருந்த, நாண் – கயிற்றினுடைய, பூட்டு விடுத்தும் - தும்பு தெரித்துவிட்ட பின்னரும், எழூஉத ஓடா - [எப்பொழுதுங் கட்டுற்றிருந்த வாசனையால்] எழுந்து தன் தாயிடத்துச் செல்லாத, ஆக்கன்றுபோலும் - பசுவின் கன்றை யொப்பாகும், அது - சுட்டுணர்வு நீங்கிய அம்மனது. எ—று.

பொ-ரை. ஒவ்வொரு விஷயங்களையும் இஃது கடம் இஃதுபடம் என்று சுட்டியறிகின்ற சுற்றுணர்வு ஒழியாதவளவும் கட்டு விடுத்த நாயைப்போல வேகமாய் மனம் விஷயங்களிற் செல்லும். அவ்விஷயச் சுட்டுணர்வொழிந்தால் தன்னைக்கட்டியிருந்த கயிற்றினுடைய தும்பு தெரித்து விட்ட பின்னரும் எப்பொழுதுங் கட்டுற்றிருந்த வாசனை யால் எழுந்து தன் தாயிடத்துச் செல்லாத பசுவின் கன்றை யொப்பாகும். சுட்டுணர்வு நீங்கிய அம்மனது. எ-று.

க-கா. மனது சுட்டுணர்வுள்ள வரையும் அடக்கினும் நில்லாது. சுட்டுணர்வு நீங்கிய பின்னர் விடயத்திற் செலுத்தினுஞ் செல்லாது எ-ம். (கச)

கஙயஎ தன்னிடத்தி லில்லாச் சராசரங்க ணிற்பன வு
மன்னவற்றிற் றானிருக்கு மற்புதமும்—பின்ன மற க்
காண்பானே யின்பநிலை காண்பானிக் காட்சியி லா
ஞாண்பாடுஞற்றி யுழலும் (கரு)

இ-ள். தன் இடத்தில் இல்லா - பிரஹ்மமாகிய தன்னிடத்திற் [பரமார்த்தமாக] வில்லாத, சர அசரங்கள நிற்பனவும் - சரம் அசர மென்னு மிருவகைப் பிரபஞ்சங்களும் [கயிற்றினிடத்துப் பாம்பு முத லியனபோல அத்தியஸ்தமாய்] இருப்பனவும், அனவற்றில்-[சர்ப்ப

தண்ட பூமாலை முதலிய அத்தியஸ்த வஸ்துக்களில் கயிறு வியாபித்திருத்தல் போல அத்தியஸ்தமாயுள்ள] அவ்விருவகைப் பிரபஞ்சங்களிலும், தான் இருக்கும் அற்புதமும் - பிரஹ்மமாகிய தான வியாபித்திருக்கின்ற ஆச்சரியமும், பின்னம் அற - பிரதி பந்தமில்லாமல், காண்பானே - [அபரோக்ஷமாகப்] பார்ப்பவனே, இன்ப நிலை காண்பான் - பிரஹ்மானந்த நிலையை அநுபவிப்பவனுவன், அக்காட்சி இலான் - அந்த ஞானமில்லாதவன், ஊண்பாடு உஞற்றி - [சரீர நிருவாகத்தின் பொருட்டுச் செய்கின்ற] உணவிற்குரிய முயற்சிகளைச் செய்து, உழலும் - [பிறந்து மிறந்து] திரிவான். எ-று.

பொ-ரை. பிரஹ்மமாகிய தன்னிடத்திற் பாமார்த்தமாகவில்லாத சரம் அசரம் என்னும் இருவகைப் பிரபஞ்சங்களும் கயிற்றினிடத்துப் பாம்பு முதலியனபோல அத்தியஸ்தமாயிருப்பனவும் சர்ப்பம் தண்ட பூமாலை முதலிய அத்தியஸ்தவஸ்துக்களில் கயிறு வியாபித்திருத்தல போல அத்தியஸ்தமாயுள்ள அவ்விருவகைப் பிரபஞ்சங்களிலும் பிரஹ்மமாகிய தான் வியாபித்திருக்கின்ற ஆச்சரியமும பிரதிபந்தமில்லாமல் அபரோக்ஷமாகப் பார்ப்பவனே பிரஹ்மானந்த நிலையை அநுபவிப்பவனுவன். அந்த ஞானமில்லாதவன் சரீர நிருவாகத்தின் பொருட்டுச் செய்கின்ற உணவிற்குரிய முயற்சிகளைச் செய்து பிறந்து மிறந்து திரிவான், எ-று.

இங்கே கூறியதுபோலப் பகவத் கீதையில் "ஒழியாவெல்லாவுயிர்களுந்தன்னுள்ளே காணுமவற்றுள்ளே, கழியாதெங்குந்தானின்ற பரிசுந்தெரியக்காணுமால்" என்று கூறியிருத்தல் காண்க.

க-ரை. தான் அதிட்டானமாயிருத்தலையும் தன்னிடத்துப் பிரபஞ்சம் அத்தியஸ்தமாயிருத்தலையும் உள்ளவாறு அபரோக்ஷமாக வறிந்தவன் பிரஹ்மானந்த நிலையை அடைவான். எ-ம். (௯௫)

௱௫௰௬ ஆசைப்பேய் வாய்ப்பட் டலைந்து சுழலுமன
நேசித் திருத்துகினு நில்லாதே—யாசையினைப்
போக்கி லதுபின் புறத்திலடித் தோட்டுகினு
நீக்காதா னந்த நிலை (௧௬)

இ-ள். ஆசைப்பேய் வாய்ப்பட்டு – இச்சையென்னும் பிசாசினிடத்தகப்பட்டு, அலைந்து சுழலுமனம் - [அஃது இழுத்துச்செல்லும் விடயங்கள் தோறும்] வருந்தி யுழலுகின்ற மனத்தினை, நேசித்து - நண்பு கொண்டு, இருத்துகினும் - [விடயங்களிற் செல்லலாகாதென் றறிவுறுத்தி] அடக்கினாலும், நில்லாது - நிற்கமாட்டாது, [அங்ஙனமாய் மனத்தினை நிறுத்த முடியாதோ வெனின் அதற்கு மேற்கூறுகின்றார்], ஆசையினைப்போக்கில் - இச்சையாகிய பேயை ஒழித்துவிட்டால், பின் - பின்னர், புறத்தில் - விடயங்களிற் செல்லுமாறு, அடித்து ஓட்டுகினும் - வெறுத்துத் தள்ளினாலும், அது - அம்மனமானது, ஆனந்த நிலை - [தானடைந்துள்ள] பிரஹ்மானந்தானுபவத்தினின்றும், நீக்காது - நீங்கமாட்டாது. எ-று.

பொ-ரை. இச்சையென்னும் பேயினிடத் தகப்பட்டு அஃது இழுத்துச் செல்லும் விடயங்கள் தோறும் வருந்தியுழலுகின்ற மனத்தினை நண்பு பாராட்டி விடயங்களிற் செல்லலாகாதென் றறிவுறுத்தி அடக்கினாலும் நிற்கமாட்டாது. அங்ஙனமாய மனத்தினை நிறுத்தமுடியாதோ வெனின் அதற்கு மேற்கூறுகின்றார். இச்சையாகிய பேயை ஒழித்துவிட்டால் பின்னர் விடயங்களிற செல்லுமாறு வெறுத்துத் தள்ளினாலும் அம்மனம் தானடைந்துள்ள பிரஹ்மானந்தானுபவத்தினின்றும் நீங்காது. எ-று.

நீங்காது எனற் பாலது எதுகை நோக்கி வலிந்து நின்றது.

க-ள. மனஞ்சலித்ததற்கும் நிற்றற்கும் காரணம் இச்சையுண்மையும் இன்மையுமாம். எ-ம். (௰௪)

எடுமிலா மாடேறி னோர்க்கு மனவெழுச்சி நீங்கினன் றி
வீடேறு மாறு விளையாதே—நாடோ று
மற்ப மற்ப மாகவா னுமஃ தற்றொழியி ற்
கற்பிதம்போம் வீடுறுமக் கால் (௧௭)

இ-ள். மாவேறினோர்க்கும் - இடபவாகன மேறுதல் முதலியவாகச் சொல்லப்படுகின்ற சிவசாருப்பிய மடைந்தவர்களுக்கானாலும், மன எழுச்சி - மனோ முயற்சியானது, நீங்கின் அன்றி - நீங்கினாலல்லாமல், வீடு ஏறும் ஆறு - மோக்ஷமடையுமார்க்கம், விளையாது - பயன்படாது, நாடோறும - தினந்தினமும், அற்பம் அற்பம் ஆக ஆனாலும - கொஞ்சங் கொஞ்சமாகவாகிலும, அஃது - அம்மனோ முயற்சியானது, அற்று ஒழியில் — கெட்டுப்போமாகில், கற்பிதம்போம் - கற்பித வஸ்துக்கள் நீக்கும், அக்கால் - அக்கற்பிதவஸ்துக்கள் நீங்கிய பொழுது, வீடு உறும் — மோக்ஷமுண்டாகும். எ-று.

பொ-ள. இடபவாகன மேறுதல் முதலியவாகச் சொல்லப்படுகின்ற சிவசாருப்பிய மடைந்தவர்களுக் கானாலும் மனோ முயற்சி நீங்கினாலல்லாமல் மோக்ஷமடையுமார்க்கம் பயன் படாது. தினந்தினமுங் கொஞ்சங்கொஞ்சமாகவாகிலும் அம்மனோ முயற்சியானது கெட்டுப் போமாயிற் கற்பித வஸ்துகள் நீங்கும். அஃது நீங்கிய பொழுது மோக்ஷமுண்டாகும். எ-று.

ச-ள. மனோவிர்த்தி நீங்காதவர்க்கு மோக்ஷமுண்டாகாது. எ-ம். (௧௭)

[ கட்டளைக் கலித்துறை ]

௭௰௮ விடயா னுபவ முறுங்கா லறிபவன் மேவறிவு
விடயங் களிற்றம்மை வேறாகக் காணும் விவேகி
களே
அடைவார் பரானந்த மிப்பேதஞ் சற்று மறிய
கில்லார்
கெடுவா ரிவர்க்கப் பரானந்த முத்தி கிடைப்
பரிதே (௧அ)

இ-ள். விடயம் – விஷயங்கள், அநுபவம் உறுங்கால் - அநுபவப் படுங் காலத்தில், அறிபவன் - ஞாதிரு (காண்பான்), மேவு அறிவு - பொருந்திய ஞானம் (காட்சி), விடயங்களில் - ஞேயம் (காணப்படு பொருள்) ஆகிய இவற்றிற்கு, வேறு ஆக - அந்நியமாக (சாக்ஷியாக), தம்மை - தங்களை, காணும் - அறிகின்ற, விவேகிகளே - அறிவுடைய வர்களே, பர ஆனந்தம் அடைவார் – பிரஹ்மானந்தத்தை யடைவார் கள், இப்பேதம் - இவ்வேறுபாட்டினை, சற்றும் அறியகில்லார் - கொஞ் சமேனு முணராதவர்கள், கெடுவார் - [பிறந்திறத்தலாகிய] கேட்டினை அடைவார்கள், இவர்க்கு – திரிபுடியின் பேதந்தெரியாத இவர்களுக்கு, அப்பர ஆனந்தமுத்தி – அந்தப் பேரின்ப மயமாகிய மோக்ஷம், கிடைப்பு அரிது - கிடைக்காது. எ—று.

பொ-ரை விஷயங்கள் அநுபவப்படுங் காலத்தில் ஞாதிரு பொருந்திய ஞானம் ஞேயம் ஆகிய இவற்றிற்குச் சாக்ஷியாகத் தங்களையறி கின்ற அறிவுடையவர்களே பிரஹ்மானந்தத்தை யடைவார்கள். இவ் வேறுபாட்டினைக் கொஞ்சமேனு முணராதவர்கள் பிறந்திறத்தலாகிய கேட்டினை யடைவார்கள். திரிபுடியின் பேதந் தெரியாத இவர்களுக்கு அந்தப் பேரின்ப மயமாகிய மோக்ஷங் கிடைக்காது. எ—று.

க-ரை. விஷயானுபவ காலத்திற் றோன்றப்படுகின்ற திரிபுடிக ளுக்கு வேறாகத் தம்மைக் காண்பவர் பிரஹ்மானந்தத்திற்குரியவரா வர். எ—ம். [௰அ]

௫௱௪௰௧. ஓரோர் விடயத் துறுநசை யானவ்வி யாதியுயி ர்
சோரா விறக்குந் துயரறிந் தேயுஞ் சுகமடைவா ன்
பாரோரவ் வைந்து விடயமுஞ் சேரப் பரிந்தருந் த
னீரா லுறுவ தழலாற் றொளவெனு நீர்மையொப்
பே. [௰௯]

இ-ள். ஓர் ஓர் விடயத்து - [சத்த முதலாகச் சொல்லப்பட்ட]ஒவ் வொரு விஷயங்களில், உறும் நசையால் — உண்டாகின்ற விருப்பத்தி னால், நவ்வியாதி உயிர் - மான் முதலாகிய பிராணிகள், சோரா - தளர் வடைந்து, இறக்கும் - மடிகின்ற, துயர் அறிந்தும் — துக்கத்தை [ஆக மப் பிரமாணத்தினாலும் பிரத்தியக்ஷப் பிரமாணத்தினாலும்] தெரிந் திருந்தும், சுகம் அடைவான் - [நீங்காத] ஆனந்தத்தைப் பெறும்பொ ருட்டு, பாரோர் - உலகத்திலுள்ள அஞ்ஞானிகள், அவ்வைந்து விடய முஞ் சேர - அந்தப் பஞ்ச விஷயங்களையு மொருங்கே, பரிந்து அருந் தல் - விரும்பிப் புசித்தல், [எதுபோலுமெனில்], நீரால் உறுவது - புனலா லடையக்கூடிய தாகசாந்தி முதலிய பயனை, அழலால் கொள எனும் — அக்கினியா லடைதற்கு நினைக்கின்ற, நீர்மை ஒப்பு — தன் மைக் கொப்பாகும். எ—று.

பொ-ரை. சத்த முதலாகச் சொல்லப்பட்ட ஒவ்வொரு விஷயங் களிலுண்டாகின்ற விருப்பத்தினால் மான்முதலாகிய பிராணிகள் தளர் வடைந்து மடிகின்ற துக்கத்தை ஆகமப் பிரமாணத்தினாலும் பிரத்தி யக்ஷப் பிரமாணத்தினாலுந் தெரிந்திருந்தும், நீங்காத ஆனந்தத்தைப் பெறும்பொருட்டு உலகத்திலுள்ள அஞ்ஞானிகள் அந்தப் பஞ்ச விஷ

யங்களையு மொருங்கே விரும்பிப் புசித்தல் எதுபோலுமெனில், புனலா லடையக்கூடிய தாகசாந்தி முதலிய பயனை அக்னியா லடைதற்கு நினைக்கின்ற தன்மைக்கொப்பாகும். எ—று.

பிரஹ்ம ஞானத்தா லடையக்கூடிய ஆனந்தத்தைத் துக்கத்தைத் தரும் விஷயானுபவத்தாலடையக் கருதுதலால் "நீராலுறுவ தழலாற் கொளவெணு நீர்மை யொப்பு" என்றார்.

ஓரோர் விடயத் துறுநசையால் நவ்வியாதி யுயிர், சோசா விறக்கு முயரறிந்து என்றதற் குதாரணம்.

பாகவதம்

"மடந்தையர் மொழியுங் கானமுங் கேட்டு மன்னவன்
மகன்முலை மணந்தான்
கடந்திரி கலையின் கோடுபெற் றுயர்ந்த கருகருந் தவ
னெனக் கேட்டும
மடந்திகழ் மதிமான் வேட்டுவன்கானம் பகர்செவி மடுத்
தவன் வலைமேற்
கிடந்தன கண்டும் வெவ்விசை கேளேன் கேட்பதுங்
காமகீர்த்தனமே"
எனவும்

"துதிதரு வயவர் படுகுழி செலுத்துந் துகளறு பிடியை
யுள் ளுவந்து
மதகரி தழுவி வயவர்கை வசமாய் வயங்குதல் கண்டு
மட் டொழுகுந்
ததைமலர்க் குழலார் தனகிரி தழுவிதனப்பரி தாய்
மதன் வசமாய்
விதலையின் மனமா மயக்குறு மென்ன விடுத்தனன
புணர்ச்சிமேற் றன்றே"
எனவும்

"ஒளிகொளும் விளக்கி னழலுருக் கண்டீ தணவுகொ
லெனவதிற் சுழன்று
விளிவுறும் பசிய பதங்கமுங் கண்டு வெய்பதித் தொழி
லெனக் கருதித்
தெளிவுகொண் முனிவ ராயினுங் காணிற் சிந்தைகொண்
டனுதின மருந்தக்
களிகொளுங் கருங்கண் மடந்தைய ருருவங் கருத்தொ
டுங் காண்கில னம்மா"
எனவும்

"வஞ்சநெஞ் சினராய்த் தூண்டிலின் வீழ்ந்த வண்சுவை
யூன் பெற வடைந்து
துஞ்சுத லடைந்த மீன்குழுக் கண்டு துன்னுமை வகை
யெனும் வாயுப்
பஞ்சா மென்றுற் றுடலுறை வதற்காய்ப் பசிக்கன
றணிப்பதற் கன்றி
அஞ்சுவை யிவையென் றுசையி னினைந்தே யருந்துத
லொழிந்தன னடிசில்"
எனவும்

"ஓருமரை மலரை யுவந்துமென் முருகுண் டுறைதரு
மொருசுரும் பிரவில்
விரியிதழ் குவிய மலரகப்பட்டு விளிந்தது கண்டு"
எனவும் அன்றியும்

பாரோரவ்வைந்த விடயமுஞ் சோப் பரிந்தருந்தல் என்றதற்குதா
ரணம்.

"முந்தமேவொலி யாதியி லொருகுண முன்னிப்
பந்தமோடிட ருற்றிறந் தனபல வென்றல்
ஐந்து சேர்குணங் களுமொருங் காசையி னடைந்தோர்க்
குய்ந்து ஃபாநெறி யுண்டுகொ லோமதித் துரைக்கில்"

எனவுங் கூறியிருத்தல் காண்க.

க-ஊ. துக்கநிவிர்த்தியை விரும்பினவன் பிரஹ்மஞானத்தை யடையாது விஷயங்களை அனுபவித்தல் தாகசாந்தியை விரும்பினவன் நீரருந்தாது தீயருந்துதற் கொப்பாகும். எ-ம். (ருக)

ாசுய கோடானு கோடி யறம்புரிந் தாலுங் குலவுமாற்
கேடார் மலர்கொண் டருச்சனை யாதி யியற்றினு
மோடா துளத்தை நிறுத்தித்த முண்மை யுணர்தலிலார்
வீட்டை யெய்தா ரெய்திடுவரென் றுலது வீவுறுமே (உ0)

இ-ள். உளத்தை ஓடாது நிறுத்தி - மனத்தினை விஷயங்களிற் செல்லவொட்டாமல் நிற்கச்செய்து, தம் உண்மை - தம்முடைய யதார்த்த சொரூபத்தை, உணர்தல் — விசாரித்தறிதல், [ நேரேமோக்ஷ சாதனமாயிருக்க], இலாா - [அங்ஙனம் விசாரித்தறியுந் தன்மை] யில்லாதவர்கள், கோடானு கோடி — அளவற்ற, அறம்புரிந்தாலும் - தருமங்களைச்செய்யினும், குலவும் - விளங்கா நின்ற, அரற்கு — சிவபிரானுக்கு, ஏடு ஆர் மலர் கொண்டு — இதழ் பொருந்திய புஷ்பங்களைக் கொண்டு, அருச்சனை ஆதி இயற்றினும - அருச்சித்தல் முதலிய ஆராதனைகளைச்செய்தாலும், வீடு எய்தார் - மோக்ஷமடையமாட்டார்

கள், எய்திடுவர் என்றால் - யாதாயினுமோர் பதவியை அடைவரென்று கூறின், அது வீவுறும் - கருமத்தாலாகிய அப்பதவியானது அழிந்து விடும். எ-று.

பொ-ரை. மனத்தினை விஷயங்களிற் செல்லவொட்டாமல் நிற்கச்செய்து தம்முடைய எதார்த்த சொரூபத்தை விசாரித்தறிதல் நேரே மோக்ஷசாதனமாயிருக்க அங்ஙனம் விசாரித்தறியுந் தன்மையிலலாதவர்கள் அளவற்ற கருமங்களைச் செய்யினும் விளங்காநின்ற சிவபிரானுக்கு இதழ்பொருந்திய புஷ்பங்களைக்கொண்டு அருச்சித்தல் முதலிய ஆராதனைகளைச் செய்தாலும் மோக்ஷமடையமாட்டார்கள். யாதாயினுமோர் பதவியை அடைவரென்று கூறின் கருமத்தாலாகிய அப்பதவியானது அழிந்துவிடும். எ-று.

க-ரை. கருமத்தாலாகிய பதவி அழியும் எ-ம். (உ௭)

௱௬௰௧ மன்னிய வின்ப வடிவாயொன் றாய்நின்ற வத்துவுந்தா
னுன்னிடி லன்னிய மாயின்பப் பேற்றை யுதவிலதே
லுன்னஞ் சடவுரு வாய்ப்பல வாகி யுளவிடயர்
தன்னிற் றுயர்தரு மென்கைசொல் லாமற் றுலங்கிடுமே (உ௮)

இ-ள் மன்னிய - நிலைபெற்ற, இன்பவடிவாய் - சச்சிதானந்தமயமாயும், ஒன்றாய் - ஏகமாயும், நின்றவத்துவும் - வியாபித்திருக்கின்ற பிரஹ்மசொரூபமும், உன்னிடில் - [ஒருவனுக்கு மனத்தால்] நினைக்கப்படின், அன்னியமாய் - வேறாகி, இன்பப்பேற்றை - ஆனந்தானுபவத்தை, உதவு இலதேல் - கொடாதென்றால், உன்னம் - அம்மனமானது, சடவுருவாய் பலவாகி உள - அசிர்சடதத்வமயமாயும் அநேக

மாகியுமிருக்கின்ற, விடயம் தன்னில் - சத்தாதி விஷயங்களைப் பொருந்தினால், துயர்தரும் என்கை – [அவ்விடயங்கள்] துக்கத்தைக் கொடுக்குமென்பது, சொல்லாமல் நிலவிடும் - சொல்லாமல் அதன் அருத்தத்தினாலேயே விளங்கும். எ-று.

பொ-ரை. நிலைபெற்ற சச்சிதானந்த கனமாயும் ஏகமாயும் வியாபித்திருக்கின்ற பிரஹ்மசொரூபமும் ஒருவனுக்கு மனத்தால் நினைக்கப்படின் வேறாகிய ஆனந்தானுபவத்தைக் கொடாதென்றால் அம்மனமானது அநித்தசடதுக்கமயமாகியும் அநேகமாயுமிருக்கின்ற சத்தாதி விஷயங்களைப் பொருந்தினால் அவ்விடயங்கள் துக்கத்தைக் கொடுக்குமென்பது சொல்லாமல் அதன் அருத்தத்தினாலேயே விளங்கும். எ-று.

இன்பம் சத்து முதலியவற்றிற்கும் சடம் அநித்த முதலியவற்றிற்கும் உபலக்ஷணங்கள்.

க-ரை. மனத்தின் தொழிலெல்லாந் துக்கமே தரும். எ-ம். [௨௰௧]

௱௬௰௨. நாடி யருங்கலை கற்றலுங் கேட்டலு நல்லருத்தந்
தேடிமுற் றாய்ந்து தெளிதலும் பூவினர் சித்தமெய்க்கப்
பாடலு மங்ங னடையையுள் ளார்க்குப் பரிசுத்தமுங்
கோடு நடையர்க் குறுப்போய் துயருங் கொடுப்பனவே. [௨௰௨]

இ-ள். அருங்கலை நாடி – கிடைத்தற்கு அருமையாகிய ஞானநூல்களை விரும்பி, கற்றலுங் கேட்டலும் – அப்பியசித்தலும் பிறர் படிக்கச் சிரவணஞ் செய்தலும், தேடி - [நல்லாசிரியனை] விசாரித்துத் [தரிசித்து], நல் அருத்தம் - [அந்நூல்களிலுள்ள] உண்மையாகிய அருத்தங்கள், முற்று [உம்] ஆய்ந்து - முழுமையும் [அவர் முன்னிலை

யாக] ஆராய்ந்து, தெளிதலும் - அறிதலும், பூவினர் - உலகத்தவருடைய, சித்தம் மெய்க்கப் பாடலும் - மனமானது மெய்ச்சம்படி பாடுதலும் [ஆகிய இவைகள்], அவ்வன் நடையை உள்ளார்க்கு-அச்செயல்களுக்குரிய ஒழுக்கமுடையவர்களுக்கு, பரிசுத்தமும் - சித்த சுத்தியையும், கோடும் நடையர்க்கு - மாறுகிய ஒழுக்கம் உடையவர்களுக்கு, உறுப்பு ஒய்துயரும் - [அத்தொழில்களைச் செய்யும்] கருவிகட்குத் தளர்ச்சியுண்டாகின்றதாகிய துன்பத்தையும், கொடுப்பன - உண்டு பண்ணுவனவாம். எ று.

பொ-ரை. கிடைத்தற்கு அருமையாகிய ஞான நூல்களை விரும்பி அப்பியசித்தலும் பிறர் படிக்கச் சிரவணஞ் செய்தலும் நல்லாசிரியரை யச்சார்ந்தருத தரிசித்து அந்நூல்களிலுள்ள உண்மையாகிய அருத்தங்கள் முழுமையும் அவர் முன்னிலையாக ஆராய்ந்தறிதலும் உலகத்தவருடைய மனமானது மெய்ச்சம்படி பாடுதலுமாகிய இவைகள் அச்செயல்களுக்குரிய ஒழுக்கமுடையவர்களுக்குச் சித்த சுத்தியையும் மாறுகிய ஒழுக்கமுடையவர்களுக்கு அத்தொழில்களைச் செய்யும் கருவிகட்குத் தளர்ச்சியுண்டாகின்றதாகிய துன்பத்தையும் உண்டுபண்ணுவனவாம். எ-று.

முற்றும் என்பதின் உம்மை விகாரத்தாற் றொக்கது.

க-ரை. ஞான நூல் பழகல் முதலிய சற்கருமங்களும் நல்லொழுக்க முடையார்க்கே சித்தசுத்தியைத் தரும். எ-ம். [௨௰௨]

௱௬௰௩. இன்பந் தொழிலில் லிடத்துள தாமெனி லெத்தொழிலுந்
துன்பமல்லாமற் சுகந்தரு மோவதைச் சூழ்ச்சியுளார்
இன்புத்தி யாற்கண் டொழித்தின்ப மேய்வர் விசாரமிலார்
வன்பவ சாகா மாகா மாவுற்று மாய்குவரே. [௨௰௩]

இ-ள். இன்பம் - சுகமானது, தொழில் இல் இடத்து - [மனம் வாக்குக் காயங்களாலாகின்ற எவ்வகை] முயற்சியுமில்லாதவிடத்தில், உளது ஆம் எனில் – உண்டாகுமென்று பெரியோர் கூறுவாராயின், எத்தொழிலும் – [அம்மன வாக்குக் காயங்களாலாகின்ற] எந்த முயற்சியும், துன்பம் அல்லாமல் - துக்கத்தைத் [தருமே] யல்லாமல், சுகந் தருமோ - இன்பத்தைக் கொடுக்குமோ, [கொடாது], அதை - தொழில் சுகங் கொடாவென்பதை, சூழ்ச்சி உளார் - ஆராய்ச்சி யுடையவர், இன் புத்தியால் கண்டு - விவேக புத்தியினலறிந்து, ஒழித்து -[அம்முயற்சி களை முற்றும்] நீக்கி, இன்பம் எய்வர் - [ஆன்மவிசாரஞ் செய்து ஞான வாயிலாக] மோக்ஷ சுகத்தை யடைவர், விசாரம் இலார் - அவ்விசார மில்லாதவர்கள், வன்பவசாகரம் – வலிய பிறவிச்சமுத்திரத்தை, ஆகா மாவுற்று - உறைவிடமாக வடைந்து, மாய்குவர் - வருந்துவார். எ-று.

பொ-ரை. சுகமானது மனவாக்குக் காயங்களாலாகின்ற எவ்வகை முயற்சியுமில்லாத விடத்தில் உண்டாகுமென்று பெரியோர் கூறுவாராயின் அம்மன வாக்குக் காயங்களாலாகின்ற எந்த முயற்சியுந் துக்கத்தைத் தருமேயல்லாமற் சுகத்தைக் கொடுக்குமோ கொடாது. தொழில் சுகங்கொடா வென்பதை ஆராய்ச்சியுடையவர் விவேக புத்தியினு லறிந்து அம்முயற்சிகளை முற்றும் நீக்கி ஆன்ம விசாரஞ்செய்து ஞான வாயிலாக மோக்ஷ சுகத்தை யடைவார். அவ்விசார மில்லாதவர் வலிய பிறவிச் சமுத்திரத்தை யுறைவிடமாக வடைந்து வருந்துவார். எ-று.

தொழிலை விடுத்து இன்பம் எய்வர் என்றதால் இடையே விசாரமும் ஞானமும் வருவிக்கப்பட்டன.

க-ரை. விவேகிகள் தொழிலைத் துன்பந் தருவதென விடுத்து ஆன்ம விசாரஞ் செய்து ஞான வாயிலாக மோக்ஷ சுகமடைவார். எ-ம்.

[உயிக]

[விருத்தம்]

௧௯௪. நாம வுருவ மெவ்வளவவ் வளவே நாட்ட மனந்
தடிக்கு
நாம வுருவம் விடுத்தகண்ட நாட்டம் வரிலம்
மனநசிக்கு
நாம வுருவப் பற்றளவே நலிவு தருபந் தத்தளவா
நாம வுருவப் பற்றொழியின் நல்லின் புருவாம் வீடு
றுமால் (௨௪)

இ-ள். நாம உருவம் — நாமரூப வஸ்துக்களில், நாட்டம் - விருப்பம், எவ்வளவு - எவ்வளவிற்றோ, அவ்வளவு-அவ்வளவிற்கு, மனந்தடிக்கும் -மனந் தூலிக்கும், நாம உருவம் - [வஸ்துக்களிலுள்ள] நாமரூபங்களை, விடுத்து - நீக்கி, அகண்ட நாட்டம் வரில்-[அவ்வஸ்துக்களில்] ஏகமாயுள்ள சச்சிதானந்த சொரூப சாக்ஷாத்காரம் வந்தால், அம்மனம் நசிக்கும் - அத்தன்மையாகிய பழக்கமுடைய மனதுக்குத் தூலத் தன்மை கெடும், நாம உருவப் பற்று அளவு - நாமரூப வஸ்துக்களில் அபிமானம் எவ்வளவோ அவ்வளவு, நலிவுதரு - வருத்தத்தைக்கொடுக்கின்ற, பந்தத்து அளவு ஆம் - பந்தத்தினுடைய அளவாகும், நாம உருவப்பற்று ஒழியின் - நாமரூப வஸ்துக்களிலுண்டாகின்ற அபிமானம் நீங்கினால், நல் இன்பு உரு ஆம் - மாட்சிமை பொருந்திய ஆனந்தமயமாகிய, வீடு உறும் - மோக்ஷம் பொருந்தும். எ-று.

பொ-ரை. நாமரூப வஸ்துக்களில் விருப்பம் எவ்வளவிற்றோ அவ்வளவு மனந்தூலிக்கும். வஸ்துக்களிலுள்ள நாம ரூபங்களை நீக்கி அவ்வஸ்துக்களில் ஏகமாயுள்ள சச்சிதானந்த சொரூப சாக்ஷாத் காரம் வந்தால் அத்தன்மையாகிய பழக்கமுடைய மனதுக்குத் தூலத்தன்மை கெடும். நாமரூப வஸ்துககளில அபிமானம் எவ்வளவோ அவ்வளவு

வருத்தத்தைக் கொடுக்கின்ற பந்தத்தினுடைய அளவாகும். நாமரூப வஸ்துக்களிலுண்டாகின்ற அபிமானம் நீங்கினால் மாட்சிமை பொருந்திய ஆனந்தமயமாகிய மோக்ஷம் பொருந்தும். எ-று.

க-ரை. நாமரூபக் காட்சி பந்தத்தையும் சச்சிதானந்தக் காட்சி மோக்ஷத்தையுந் தரும். எ-ம். (உச)

கசுடு. நினைப்பே படைப்பா மற்றையது நீங்க மறத்த
றுடைப்பாகும்
நினைப்பின் றாகிற் படைப்பில்லை நீங்கின் மறப்பே
துடைப்பில்லை
நினைப்பு மறப்பு முளவளவும் நீங்கா தமரும் பந்தமெ
லா
நினைப்பு மறப்பு மிறந்தளவே நிமலா னந்த வீடுறு
மால் (உடு)

இ-ள். நினைப்பு படைப்பு ஆம் - [மனத்தால் யாதாயினு மொரு பொருளைச்] சங்கற்பித்தல் [ஜீவனுடைய] சிருட்டியாம், மற்றையது நீங்க - அச்சங்கற்ப வஸ்து நீங்குமாறு, மறத்தல் - மறந்து விடுதல், துடைப்பு ஆகும் - [ஜீவனது] சங்காரமாம், நினைப்பு இன்று ஆகில் - சங்கற்பித்தல் இல்லையானால், படைப்பு இல்லை - [ஜீவனது] சிருட்டி யில்லை, மறப்பு நீங்கின - மறப்பில்லையானால், துடைப்பு இல்லை - [ஜீவனது] சங்காரமில்லை, நினைப்பும் மறப்பும் - சங்கற்பித்தலும் அதனை மறத்தலும், உள அளவும் - இருக்கும் வரையும், பந்தம் எலாம் - பந்தமனைத்தும், நீங்காது அமரும - அழியாமலிருக்கும், நினைப்பும் மறபபும் - சங்கற்பித்தலும் மறத்தலும், இறந்த அளவு - ஒழிந்த காலத்தில், நிமல ஆனந்த வீடு உறும் - பரிசுத்தமுடைய ஆனந்தமய மாகிய மோக்ஷம் பொருந்தும். எ-று.

பொ-ரை. மனத்தால் யாதாயினு மொருபொருளைச் சங்கற்பித்தல் ஜீவனுடைய சிருட்டியாம். அச்சங்கற்ப வஸ்து நீங்குமாறு மறத்தல் ஜீவனுடைய சங்காரமாம். சங்கற்பித்தலில்லையானால் ஜீவனது சிருட்டியில்லை. மறப்பில்லையானால் ஜீவனது சங்காரமில்லை. சங்கற்பித்தலும் அதனை மறத்தலும் இருக்கும்வரையும் பந்தங்களனைத்தும் அழியாமலிருக்கும். சங்கற்பித்தலும் மறத்தலும் ஒழிந்தகாலத்தில் பரிசுத்தமுடைய ஆனந்தமயமாகிய மோக்ஷம் பொருந்தும். எ-று.

ஜீவர்களுக்கு அகந்தை மமதை விஷயங்களிலுண்டாகின்ற அபிமானத்தா லெழுகின்ற காமக் குரோதாதிகளே பந்தமெனும் ஜீவன் சிருட்டி யென்றுஞ் சொல்லப்படும். அவற்றுள் அகந்தை (யானென்றுண்டாகும் விருத்தியின்) விஷயஞ் சரீரமும் மமதையின் விஷயம் (எனதென்னும் விருத்தியின் விஷயம்) தார புத்திர தனாதிகளுமாம். இவ்விருவகை விஷயங்களுக்கும் அநுகூலமாகிய வஸ்துக்களிடத்து இராகமும் பிரதிகூலமாகிய வஸ்துக்களிடத்துத் துவேஷமும் உளவாம். அவற்றுள்ளும் இராகமுளதாவது அநுகூல விஷயாகாரமடைந்த அந்தக்கரணத்திலும் துவேஷமுளதாவது பிரதிகூல விஷயாகாரமடைந்த அந்தக்கரணத்திலுமாம். ஆதலால் அவ்விராகத் துவேஷங்களுக்குக் காரணம் அநுகூலப்பிரதிகூல விஷயங்களின் சங்கற்பமும் அவற்றின் (இராகத்துவேஷங்களின்) இன்மைக்குக் காரணம் அவ்விஷயங்களின் சங்கற்பமின்மையாகும். ஆகவே இராகத் துவேஷாதியாகிய விஷய சங்கற்பம் ஜீவசிருட்டியும் அச்சங்கற்பமின்மை அவற்றின் நிவிர்த்தி வடிவ சங்காரமுமா மெனபார் "நினைப்பே படைப்பா மற்றதை நீங்க மறத்தல் துடைப்பாகும்" என்று கூறினர்.

இராகத் துவேஷாதிகள் ஜீவ சிருட்டி யென்பதற்கும் ஜீவசிருட்டியே பந்தம் என்பதற்கும் பூமறையே உதாரணம்.

கைவல்லியம்.

" திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும்வெவ்
வே றே
சகந்த னிற்பொது வீசனார் சிருட்டிகள் சராசரப் பொரு
ளெல்லா
மகந்தை யாமபி மானங்கள் கோபங்க ளாசைகளிவை
யெல்லா
மிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங் காணீசனார் செயலன்
றே"
எனவும்

"மூவராம் பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்தி சாதன
மாகுஞ்
சீவ னார்செயுஞ் சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணி
யாகுந்
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சனனங்க ணசி
யாவாம்
கோவமாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிறவிகள்
போமே"
எனவுங் கூறியிருத்தல் காண்க.

க-ரை. மனிதருக்குத்தமது சங்கற்பாதிகளாற் பந்தமும் அவற்றின்
நாசத்தால் மோக்ஷமும் உளவாம். எ-ம் (உ௰௫)

௧௬௰௪ மனத்தின் றொடர்பி னியத்தொடர்பு மாய்ப்
பேர்க் கடையுந் தன்மையதா
தனியானந்த மம்மாய்வு சாரார்க் ககலுந் தன்
மையதா ம்
புனிமா மணியை யடக்கரிக்குப் பொருந்துந்
தன்மை யதுந்தி மி ர
மினமே லுமிழுங் கட்செவிக்கு விலகுந் தன்மை
யது மாம்போல் (௨௰௬)

இ-ள். திமிரம் - இருளானது, புனிமாமணியை — அழகும்பெருமையும் பொருந்திய இரத்தினத்தை. அடக்கு அரிக்கு - உள்ளே அடக்கி வைத்திருக்கின்ற பாம்பிற்கு, பொருந்தும் தன்மையதும் - சாருந்தன்மையுடையதும், மின - பிரகாசிக்கும்படி, மேல் - தனக்கு முன்னிடத்தில், உமிழும் - உமிழ்ந்து வைத்திருக்கின்ற, கட்செவிக்கு - பாம்பிற்கு, விலகுந்தன்மையதும — [தூரத்தில்] நீங்குந்தன்மையுடையதும், ஆம்போல் - ஆதல்போல, தனி ஆனந்தம் - ஒப்பற்ற பிரஹ்மானந்தமானது, மனத்தின் றொடர்பு - [விஷயங்களோடு] மனத்திற்குண்டாகுஞ்சம்பந்தத்தையும், இந்தியத்தொடர்பு - சுரோத்திராதியிந்திரியங்களுக்குண்டாகும் சம்பந்தங்களையும், மாய்ப்போர்க்கு - கெடுப்பவர்களுக்கு, அடையுந்தன்மையது ஆம் - அநுபவிக்கப்படுந் தன்மையுடையதாம், அம்மாய்வு சாரார்க்கு — விஷயங்களோடுண்டாகும் அம்மனத்தின் சம்பந்த நாசத்தையும் இந்திரியங்களின் சம்பந்த நாசத்தையும் பெறாதவர்களுக்கு, அகலுந்தன்மையது ஆம் - நீங்குந்தன்மையுடையதாம். எ-று.

பொ-ரை. இருளானது அழகும் பெருமையும் பொருந்திய இரத்தினத்தை உள்ளே அடக்கி வைத்திருக்கின்ற பாம்பிற்குச் சாருந்தன்மை

யுடையதும் பிரகாசிக்கும்படி தனக்கு முன்னிடத்தில் உமிழ்ந்து வைத்திருக்கின்ற பாம்பிற்குத் தூரத்தில் நீங்குந் தன்மையுடையதுமாதல் போல ஒப்பற்ற பிரஹ்மானந்தமானது விஷயங்களோடு மனத்திற் குண்டாகும் சம்பந்தத்தையும் சுரோத்திராதி யிந்திரியங்களுக்குண்டாகுஞ்சம்பந்தங்களையும் கெடுப்பவர்களுக்கு அநுபவிக்கப்படுந் தன்மையுடையதாம். விஷயங்களோடுண்டாகும் அம்மனத்தின சம்பந்த நாசத்தையும் இந்திரியங்களின சம்பந்த நாசத்தையும் பெருதவர்களுக்கு நீங்குந்தன்மை யுடையதாம். எ-று.

விஷயப்பிரத்தியக்ஷத்தில் சுரோத்திராதி யிந்திரியங்களின் சம்பந்தம் அந்தக்கரணத்தின் சம்பந்தமின்றி யுண்டாகாதாயினும் மனோராச்சிய விவகாரத்திலுளதாகும் அந்தக்கரண மாத்திரத்தின் வியாபாரமும் ஜீவபோதமாமென்றறிவித்தற்கு "மனத்தின் தொடர்பு" எனப்பிரித்துக்கூறினர்.

க-ரை. இரத்தினத்தையுடைய நாகத்திற்கு அவ்விரத்தினத்தை யுள்ளேயடக்குதல் இருட் சம்பந்தத்திற்கும், அதனை வெளிப்படுத்துதல் அவ்விருளின நீக்கத்திற்குங் காரணமாதல்போல, ஜீவபோத இழப்பு பிரஹ்மானந்தானுபவத்திற்கும் ஜீவபோதஇருப்பு அவ்வநுபவமுண்டாகாமைக்குங் காரணங்களாம். எ-ம் (உ௬)

௱௬௰௭ இந்தத் தூண்டி லிரைகவரி னிதுவே யிறுதி
விளைக்குமெனச்
சிந்தித் தறியா தரைதக்கவர்ந்து சிக்கி யுடல்விட்
டொழிமீன் போ
லந்தோ கொடிய துயர்க்கேது வாமென் றறியா
ரவ்விடய
பந்தத் தழுந்திப் பிறப்பாழி படிந்து மடிந்து
சுழலுவரே (உ௰எ)

இ-ள். இந்தத் தூண்டில் இரை - இத்தூண்டிலினது முள்ளின் கண் கோக்கப்பட்டிருக்கின்ற வுணவினை, கவரின் - கிரகித்தால், இதுவே - இக்கிரகித்தலே, இறுதி விளைவிக்கும் என - [எமக்கு] மரணத்தை யுண்டாக்குமென்று, சிந்தித்து அறியாது - நினைத்துணராமல், அதைக் கவர்ந்து - அத்தூண்டிலினது முள்ளின் கண்ணுள்ள இரையை வாயாற் பற்றி, சிக்கி - அத்தூண்டில் முள்ளின்கண் அகப்பட்டு, உடல் விட்டு - தமது சரீரங்களை விடுத்து, ஒழிமீன் போல் - மாளுகின்ற மீன் கூட்டங்களைப்போல, அந்தோ - ஐயோ, கொடிய துயர்க்கு - கொடுமையாகிய துக்கத்துக்கு, ஏதுஆம் என்று - காரணமாகுமென்று, அறியார் - உணரமாட்டாத மனிதர்கள், அவ்விடய பந்தத்து - அத்துக்கக்காரணமாயுள்ள விஷயங்களாகிய பந்தத்தினுள்ளே, அழுந்தி - மூழ்கி, பிறப்பு ஆழிபடிந்து - [அதனால்] பிறவிச்சமுத்திரத்தினுள்ளே வீழ்ந்து, மடிந்து உழலுவர் - கெட்டலைவார்கள். எ-று.

பொ-ரை. இத்தூண்டிலினது முள்ளின் கண் கோக்கப்பட்டிருக்கின்ற வுணவினைக் கிரகித்தால் இக்கிரகித்தலே எமக்கு மரணத்தை யுண்டாக்கு மென்று நினைத்துணராமல் அத்தூண்டிலினது முள்ளின் கண்ணுள்ள இரையை வாயாற்பற்றி அத்தூண்டில் முள்ளின் கண் அகப்பட்டுத் தமது சரீரங்களை விடுத்து மாளுகின்ற மீன் கூட்டங்களைப் போல ஐயோ? கொடுமையாகிய துக்கத்துக்குக் காரணமாகு மென்று உணரமாட்டாத மனிதர்கள் அத்துக்கக்காரணமாயுள்ள விஷயங்களாகிய பந்தத்தினுள்ளே மூழ்கி அதனால் பிறவிச்சமுத்திரத்தினுள்ளே வீழ்ந்து கெட்டலைவார்கள். எ-று.

தூண்டில் ஆகுபெயர்.

க-ரை. விடயங்களைத் துக்க காரண மென்றறிந் தொழிக்காமல் அநுபவிப்பவர்கள் பிறப்பிறப்பின்கண்ணின்று நீங்கார். எ-ம். (௨௭)

கசஅ. வாளொன் றரிய வீரனுக்கு மருவு செறுநர் வலி
தொலைக்கு
மாளுந் திறமை யறு சிறுவற் ககலாத் துன்பே யடை
விக்கும்
கோளில் வைராக் கியற்குமுத்தி கூடுஞ் சுகமு மன
மொன்றே
நாளு மாசை யுடையோற்கு நல்கும் பிறவித் துயாமுமே.
(உஅ)

இ-ள். வாள் ஒன்று – வாளாயுதமொன்றுதானே, அரிய வீரனுக்கு- [பகைவரால் வெல்லுதற்கு] அருமையாகிய யுத்த வீரனுக்கு, மருவு செறுநர் - [தன்னிடத்துக்] கிட்டிய பகைவர்களுடைய, வலி தொலைக்கும் – பலத்தைக் கெடுக்கும், ஆளும் திறமை அறு – [அவ் வாளயுதந்தன்னை யெடுத்து] ஆளுதற்குப் பயமில்லாத, சிறுவற்கு - பாலனுக்கு, [உறுப்புக்களை வெட்டிக் கொள்ளுதல் வாயிலாக], அகலாத் துன்பே - நீங்காத் துக்கத்தையே, அடைவிக்கும் - உண்டாக்கும், [அதுபோல], மனம் ஒன்றே - மனமாகிய ஒருகருவிதானே, கோள் இல் - இடையூறற்ற, வைராக்கியற்கு - வைராக்கிய முடையவனுக்கு, முத்தி கூடும் சுகமும் - மோக்ஷத்திற் கிடைக்கின்ற ஆனந்தத்தையும், நாளும் – அனுதினமும், ஆசையுடையோற்கு - [விஷய] இச்சை யுடையவனுக்கு, பிறவித்துயாமும், - ஜனனத்தாலாகிய துன்பத்தை யும், நல்கும் - கொடுக்கும். எ-று

பொ-ரை. வாளாயுத மொன்றுதானே பகைவரால் வெல்லுதற்கு அருமையாகிய யுத்தவீரனுக்குத் தன்னிடத்துக்கிட்டிய பகைவர்களு டைய பலத்தைக் கெடுக்கும். அவ்வாளாயுதந்தன்னை எடுத்தற்குப் பல

மில்லாத பாலனுக்கு உறுப்புக்களை வெட்டிக் கொள்ளுதல் வாயிலாக நீங்காத்துக்கத்தையே உண்டாக்கும். அதுபோல மனமாகிய ஒரு கருவிதானே இடையூறற்ற வைராக்கிய முடையவனுக்கு மோக்ஷத்திற் கிடைக்கின்ற ஆனந்தத்தையும் அனுதினமும் விஷய இச்சையுடைய வனுக்கு ஜனனத்தாலாகிய துன்பத்தையுங் கொடுக்கும். எ-று.

க-ரை. வாளொன்றுதானே வீரனுக்குச் சுகத்தையும் பாலனுக்குத் துக்கத்தையும் கொடுத்தல் போல மனம் ஒன்றுதானே விடய விச்சை யில்லாதவனுக்குப் பிரஹ்மானந்தத்தையும் அவ்விச்சையுடையவனுக் குப் பிறவித்துன்பத்தையுங் கொடுக்கும். எ-ம். (உ௮)

௧௪௧. என்னு வுடலக் தாமெனவெண் ணிழிபா லந்தோ
பிறந்தனம்பின்
மண்ணா குவமென் றுள்ளி யுள்ளி மயங்க வேண்டா
மியங்கு சிவ
நண்ணு வுளதக்ஷய நகர் தன்னி னணுகி நல்லடிமை
பண்ணு மின்னீர் துயரொழித்துப் பரமா னந்த மடை
வீரே (உக)

இ-ள் என்னு உடலம்-தாமென்று கருதத்தகாத சரீரத்தை, தாம் என எண் - தமது சொரூபமென்று நினைத்த, இழிபால் - கெட்ட எண் ணத்தினாலே, அந்தோ - ஐயோ, பிறந்தனம் - [இவ்வுலகின்கண்] ஜனித் தோம், பின் - இனி, மண் ஆகுவம் என்று - [இறந்து] மண்ணாய் விடு வோமென்று, உள்ளி உள்ளி-நினைத்து நினைத்து, மயங்க வேண் டாம்-மனக்கலக்கமடைய வேண்டாம், அக்ஷய நகரம் தன்னில்-சிங்கி லிபட்டியில், இயங்குசிவம் — [அன்பர்கள் நிமித்தம் மானுடச் சட்டை தரித்துச்] சஞ்சரிக்கின்ற பிரஹ்ம சொரூபமானது, (முத்தானந்த

ஞானதேசிக மூர்த்தியானது), நண்ணு உள்ளது—எழுந்தருளியிருக்கின்றது, நணுகி—அவ்விடத் தடைந்து, நல் அடிமை பண்ணுமின்-மோக்ஷசுகத்தைக் கொடுக்கின்ற அம்மூர்த்தியின் திருவடிக்குத் தொண்டு செய்யுங்கள், நீர்-முமுக்ஷுக்களாகிய நீங்கள், துயர் ஒழித்து—பிறவித்துக்கத்தை நீக்கி, பரம ஆனந்தம்-உயர்ந்த சுகமயமாகிய மோக்ஷத்தை, அடைவீர்— பெறுவீர்கள். எ—று.

பொ—ரை. தாமென்று கருதத்தகாத சரீரத்தைத்தமது சொரூபமென்று நினைத்த கெட்ட எண்ணத்தினாலே ஐயோ? இவ்வுலகத்தின்கண் ஜனித்தோம் இனி இறந்து மண்ணுய விடுவோம் என நினைத்து நினைத்து மனக்கலக்கமடைய வேண்டாம். அக்ஷயநகரத்தின் கண் அன்பர்கள் நிமித்தம் மானுடச் சட்டை தரித்துச் சஞ்சரிக்கின்ற பிரஹ்மசொரூபமானது (முத்தானந்த ஞானதேசிக மூர்த்தியானது) எழுந்தருளியிருக்கின்றது. அவ்விடத்தடைந்து மோக்ஷ சுகத்தைக் கொடுக்கின்ற அம்மூர்த்தியின் திருவடிக்குத் தொண்டு செய்யுங்கள். முமுக்ஷுக்களாகிய நீங்கள் பிறவித்துக்கத்தை நீக்கி உயர்ந்த சுகமயமாகிய மோக்ஷத்தைப் பெறுவீர்கள். எ—று.

க—ரை. முமுக்ஷுக்களே முத்தானந்த ஞானதேசிக மூர்த்திக்குத் தொண்டு செய்து மோக்ஷசுகம் அடையுங்கள். எ—ம். (உக)

௱எ௰. சிதம்பரமுஞ் சிவப்பிரகா சமுமுத்தா னந்தமுமாந்
தேசி கேச
ரெதிரில்சத் துமெய்யறிவின் பம்பெயரான் மூன்றே
னு மேக மாகி
வதிதலென முப்பெயர்கண் மருவிடினு மொருபொ
ருளா மன்னி யென்ற
னிதயமில குருவரவ ரடிவாழி வாழியென்று மின்
னான் மாதோ ௩௰

இ-ள். எதிரில் சத்து-பாரமார்த்திக சத்து, மெய் அறிவு-குன்றாத சித்து, இன்பம்-விட்டுநீயாத ஆனந்தம், [என்னுமிவைகள்], பெயரால் மூன்றேனும்-நாமங்களினாலே மூவகையாயிருப்பினும், ஏகம் ஆகி-சொரூபத்தாலொன்றே யாகி, வதிதல் என-இருத்தல்போல, சிதம்பரமும்-சிதம்பரமென்னுந் திருநாமத்தையும், சிவப்பிரகாசமும்-சிவப்பிரகாசமென்னுந் திருநாமத்தையும், முத்தானந்தமும்-முத்தானந்தமென்னுந் திருநாமத்தையும், ஆம் தேசிக ஈசர் [உடையவர்கள்] ஆகிய குரு மூர்த்திகள் மூவரும், முப்பெயர்கள் மருவிடினும்-[சரீரமாகிய உபாதியைக் கொண்டு] மூன்று திருநாமங்களைப் பொருந்தினும், ஒரு பொருளாய்-வியாபக சச்சிதானந்த வடிவ ஒரே வஸ்துவாக, என்தன்-என்னுடைய, இதயம் மன்னி இலகுறுவர்-இருதயத்தில் நிலைபெற்று விளங்குவார்கள், இவர் அடி வாழி—இவர்களுடைய திருவடிகள் [எக்காலமும்] வாழ்க, இந்நூல் என்றும் வாழி-இந்த ஆத்துமானந்தவிளக்கமென்னுஞ் சாஸ்திரமும் எக்காலமும் வாழ்க. எ—று.

பொ—ரை. பாரமார்த்திக சத்து, குன்றாத சித்து, விட்டுநீயாத ஆனந்தமென்னுமிவைகள் நாமங்களால் மூவகையாயிருப்பினும் சொருபத்தாலொன்றேயாகி யிருத்தல்போலச், சிதம்பரமென்னுந் திருநாமத்தையும் சிவப்பிரகாசமென்னுந் திருநாமத்தையும் முத்தானந்தமென்னுந் திருநாமத்தையும் உடையவர்களாகிய குருமூர்த்திகள் மூவரும் சரீரமாகிய வுபாதியைக்கொண்டு மூன்று திருநாமங்களைப் பொருந்தினும் வியாபக சச்சிதானந்த வடிவ ஒரே வஸ்துவாக என்னுடைய இருதயத்தில நிலைபெற்று விளங்குவார்கள். இவர்களுடைய திருவடிகள் எக்காலமும வாழ்க இந்த ஆத்துமானந்த விளக்கமென்னுஞ் சாஸ்திரமும் எக்காலமும் வாழ்க. எ—று.

க—ரை. நூலாசிரியர் தமது குருமூர்த்திகளையும் கிரந்தத்தையும் வாழ்த்தினது. எ-ம். (௬௮)

(௧) உறுவது கூறலியல் முற்றிற்று.

ஆத்துமானந்த விளக்க மூலமும் காண்டிகை யுரையும் முற்றின.

# பாட்டு முதற் குறிப்பு

திருயாவு மனமின்ன தவப்பிகுளிரூரி செறிகண் பொன்
சொத்து பெண்ணிகங்குல் பொய்யா மண் ணு
ஒருபோன் னவருக்கற் கொ ாநாவெங் ததம்பவுட லாவரீரி
னிராபோக்கு விள்ளு பகை மை
வருகோடோ யாவாசை யல்லுதினைத் தனையுமண்டுகை செல்
லு மொட்டியிச்சை யுட்ட வெப் பொ
தருபொல்லா வுண்ணுவெங் குங்கண்ணும் வெய்யிற்றந் து
பந்தசீ வேசவிங் குள்ளு மெல்ல [க]

மெல்லநின் மா மட்ட வத்திசொப்ப னவிங்கியவுள் வெளி
சங்க நிச்சபிரியே காமண் வீட யா
கல்லிமுற்றி பிச்சையெட்டி விடயமொன்றெள் ளுவிடகட்டி
மனபார்த்த வுள்ளும்பா வொடுமண் பந் த
கொல்லூ று பொன்னி கன்னி கஙபிரம கானற்குணமு மன்
னுபத்து நாகங் கடலி னீ ா
மில்லந்த தேவநல்ல விகேஷகன்ன பேசுவெண்ண செருப்
பண்ட காணஞான சில்லோ ரண்டோர் [உ]

அண்ணியசேற் றிற்கூத்தில் வேடவிட யபடிப்பா ரெல்லி
புலி திருட்டி விடய வட்டி யெங்கு ம
பண்ணு பழு தற வான வாக்கு மனு வுள்ளம பஞ் சவரையின்ப
கல்லாமா தாா வில் லா
இன்பேவ வஞ்ஞான வென்றுமின்ப வொன்றமெழில் சச்
சிதாத்து மாசர்க் கரையொட் டா த

வண்ணசத்தா நெய்க்கபுத்தி பந்தவெல்லோ னெனக்கிமது
வாரிபித்தி யுள்ளனச்சு சீவ சிருமெய் [௩]
சிருகானி தேககுருட் டுக்கிழவி காயாதீத பையபோக்கி சற்
றேபுறப் போத வோ ட
திருமாற்ற நாமாசத் தாவுள்ளி லிங்குதேக பட்டியெல்லா
கட்டற்ற தன்னி யா சை
வருமாடே விடயானு வேரோர்கோ டானுமன்னி நாடி
யின்ப நாமநினை மனத்தி னிர் த
அருவாளோன் றெண்ணுவு சிதம்பாமு மிவைக ளாத்துமா
நந் தவிளக்கத் தின்முகக் குறிப்பே. [௪]

முதற் குறிப்பு முற்றிற்று

௬௰௫-வது செ. ள் "கட்டினுமில்லா"

இங்கே சூக்குமமனத்தை அறிவென்றுற் போலவாசிட்டத்தில் "சங்கற்பம் வேட்கையனு சந்தானங் கணந்தோறுந் தவிர்த்தி யென்னின், மாசுற்ற மனோலயந்தா னதுவாகு மனோலயத்தை மருவு போதம, பங்கற்ற பிரத்தியக்ஷ தனமாகுமதற்கு மனோபாவ மென்ப, தவதத் தானிலாவியல்பா மாதலினன் மனோவிகற்பமின்றிப் போமே" என்று கூறியிருப்பது காண்க.

௬௰௮. செ. ள் "உள்ளும் புறமும்"

இங்கே கூறியது போல, திருவருட்பயன் "உள்ளும் புறம்பு மொரு தன்மைக்காக்ஷியருக் கெள்ளுந் திறமேது மில்" என்று கூறியிருப்பது காண்க.

எ௰௧. செ.ள் "பந்தமுற்றவந்நாளும்"

இங்கே கூறியது போல. பஞ்சதசி (௧௧௨௰) ௬-ம் வி-ம் அத்துவிதீயப் பிரஹ்மத்தில் வாஸ்தவபந்தமும மோக்ஷமும் தக்கத்தினுலும் நிருபிக்கக்கூடாதனவாயிருத்தலால் துவைதன்மை முதலியவற்றின் மயக்க

மே பர்தமாம். சொரூபமாக நிலைத்தல் வடிவ அப்பந்தத்தின் நிவிர்த்தியே மோக்ஷமாம் என்று கூறியிருப்பது காண்க.

அ௰௫-வது செ-ள். "நீாமேழந்து"

இங்கே கூறியிருத்தல் போல பஞ்சதசி அத்துவைதானந்தப் பிரகரணம் (௭௰௬) வது சு. ல் அந்த நாமரூபங்கள் உற்பத்திநாசத்தோடு கூடியனவாம். ஆதலால் அவற்றைச் சமுத்திரத்தில் குமிழி முதலியவற்றைப் போலப் புத்தியினால் பிரஹ்மத்தில் மித்தையாகக் காண்க. என்று கூறியிருத்தல் காண்க.

அ௰௬-வது செ-ள் 'தேவருலகில்"

இங்கே கூறியிருத்தல் போல வாசிட்டத்தில் "அங்குர்றறக்கத்தின் பமனைத்து மறியேனெந்தா, யிங்கென்றங் கென்றில்லை யெங்குஞ் சுவர்க்கமெனக்குப், போங்குஞ் சுகமே யெங்கும் பொன்னுடைதனால் வேண்டேன், றவகும் பதமே வென்றே சற்றும் பற்றற்றனைப்ப" என்று ஞானியாகிய சித்தவசனாற் கூறப்பட்டிருத்தல் காண்க.

அ௰௮-வது செ-ள். "கன்னலிரசம் பிரித்து"

இதற்குதாரணம் பிரபுலிங்கலீலை "ஓண்டரைக்கு ளொடிவிலனுருத், தொண்டடுத்த குருவருளாற்றனைக், கண்டமெய்த்தவன் காயந்தனையன, முண்டனெட்டிலை யொப்ப விடுப்பனால், என்று கூறுதல் காண்க.

௯௰௨-வது செ-ள். "அண்டமணுவாக"

இங்கே "ஆத்துமா அணுவுக்கணுவும் மகத்துக்கு மகத்தும்", என்று கூறியிருத்தல்போல திருவிளையாடல் "அண்டங்களெல்லா மணுவாக வணுக்களெல்லா, மண்டங்களாகப் பெரிதாய்ச்சிறிதாயினானு, மண்டங்களுள்ளும் புறம்புங் கரியாயினானும், என்று கூறியிருத்தல் காண்க.

௯௰௩-வது செ-ள். "அன்போர் விடயம்"

இங்கே "ஆதாவிற் புசித்தானேனு மதிலழுந்தான்' என்று கூறியதற்கு, உ-ம் கைவல்லியம் "காமமாதிகள் வந்தாலுங் கணத்திற்போமனத்திற் பற்றா, தாமரையிலைத் தண்ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார் என்று கூறியிருத்தல் காண்க".

'ஞானிகண்படமேக் கிழிருமெய்க்கதி யடைவர்' என்பதற்கு உ:ம் பிரபுலிங்கலீலை

'புணர்ந்த பாவமெலாம் பரிபூரண'. மூணர்ந்த ஞானி விழிபடவோ டுமே, என்று கூறியிருத்தல் காண்க.

௱-வது செ-ள். 'படிப்பார் சிவாலயம்'

இங்கே கூறியது போல ஒழிவிலொடுக்கம் 'வேட்டியுந் தாவடமும் வெண்ணீறும் வெண்பல்லும், காட்டுவது ஞானக்களவு காண்' என்று கூறியிருத்தல் காண்க.

௱௧-வது செ-ள். 'புலியின்றோல் போர்த்து'

இங்கே கூறியதுபோல குறள், வலியினிலைமையான் வல்லுருவம் பெற்றம, புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று' என்று கூறியிருத் தல் காண்க.

௱௧-வது செ-ள். 'உள்ளந்தனை'

இங்கே கூறியது போல பஞ்சதசி. திருப்தி தீபம் (௭௯௧௭) சு. ல் போகத்தின் இச்சையாகிய காமம் எதுவோ அது விஷயங்களை அநு பவித்தலால் ஒருபோதும் சாந்தியடையாது. ஆனால் நெய்விடப் பட்ட நெருப்பினைப்போல அதிகமாகவே விருத்தியை யடைகின்றது என்று கூறி யிருத்தல் காண்க.

௱௩௧-வது செ-ள். 'என்க்கிது வேண்டும்'

இங்கே கூறியது போல பகவற்கீதை 'இறவா வகைதன் னுள்ளத்தை யடக்கு மவனே தனக்கென்று, முறவா யுள்ளா னல்லாதார் தமக்கே பகையா யொழுகுவார், என்று கூறுதல் காண்க.

௱௩௧௬-வது செ-ள். 'மெய்யினை மெய்யெனும்'

இங்கே மனம எப்பொருளில் அழுந்துகின்றதோ அந்தவுருவாகவே செம்மமுண்டாம் என்று கூறியதற்கு உதாரணம், பகவற்கீதை 'இந்தவுடலம விடும் பொழுதி யாவன் யாதொன் றினை நினைந்தா னந்த வளவே யந்தப்பா வனையா லதனை யடையுமா, லெனற னியல்பே யெப் பொழுது மிதயத் தடைகொண் டெக பாவாஞ், சிந்தை யொமேவான மர் தொடங்கி லதனு லென்னையே சேருதியால்"

# பாட்டு முதற் குறிப்பகராதி

ஆத்துமாநந்த விளக்கம் பாட்டு

முதற் குறிப்பகராதி

முற்றிற்று.

# ஆத்துமாநந்த விளக்கம்

## பரிசோதனைப் பத்திரம்

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| ௨ | ௧௫ | என்பவர் | என்பர் |
| ௬ | ௪ | கிரிய | கிரிய |
|  | ௫ | வகையினரு | வகையினரு |
|  | ௬ | மூதலிய | முதலிய |
| ௭ | ௮ | பார்த்து | பார்த்துப் |
| ௯ | ௫ | கபரண | காரண |
|  | ௧௮ | லாபத்ஸத | லாபர்தை |
| ௧௰ | ௧௮ | காரணக்கி | காரணமயக்கி |
| ௧௫ | ௨௧ | கிருமையி | கிருபையி |
|  | ௨௫ | மூதலாகிப | முதலாகிய |
| ௨௰ | ௩ | முமூக்ஷு | முமுக்ஷு |
|  | ௬ | முமூக்ஷு | முமுக்ஷு |
|  | ௧௫ | வெண்பர | வெண்பா |
| ௨௧ | ௫ | எ—று | எ—று |
| ௨௨ | ௨ | மோக்ஷமா | மோக்ஷமாம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
|  | ௧௫ | கரு | ௧௫ |
| ௨௭ | ௧ | சாத்ன | சாதன |
|  | ௧௫ | மிலாத | மில்லாத |
|  | ௧௬ | ருலம் | ருலக |
|  | ௧௭ | தம்பா | தம்பா |
| ௨௮ | ௨௰ | நிர்மலம் | நிர்மலப் |
| ௨௯ | ௧ | சாத்ன | சாதன |
| ௩௰ | ௬ | மித்தையம் | மித்தையும் |
| ௩௨ | ௧௫ | விளங்களாது | விளங்காது |
| ௩௯ | ௧௭ | சுக | சுக |
| ௪௫ | ௨௫ | மாகிப | மாகிய |
| ௪௬ | ௧௪ | சுகத் | சுகத் |
| ௪௭ | ௮ | திறங்கி | திலங்கி |
| ௫௰ | ௫ | ரஃதொ | ரஃதொ |
|  | ௧௫ | சுகங்களை | சுகங்களை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௫௨ | ௭ | சச்கிதா | சச்சிதா |
| ௫௫ | ௧௫ | ௧-ணர் | ௧—ணா |
| ௫௮ | ௪ | மூத்தானந்த | மூத்தானந்த |
|  | ௨௫ | மாகமே | மாகவே |
| ௫௯ | ௧௪ | மூத்தானந்த | மூத்தானந்த |
| ௬௦ | ௧௨ | அப்பிரஹ்மா | அப்பிரஹ்மா |
| ௧ | ௧௨ | பிரஹ்மா | மிரஹ்மா |
|  | ௨௭ | எ—று | எ—ம் |
| ௬௫ | ௧௬ | சிாடி | சிாடி |
|  | ௨௫ | சக்கியார்தங் | சக்கியார்த்தங் |
| ௬௪ | ௭ | ஐக்கியம் | ஐக்கியம் |
| ௬௫ | ௧௭ | வருவணனே | வருணனே |
| ௬௬ | ௬ | அபரிசின் | அபரிச்சின் |
|  | ௧௬ | இப்போ | இப்படி |
|  | ௨௨ | மாட்டான் | மாட்டாது |
|  | ௨௫ | சத்தி | சத்திவிருத்தி |
| ௬௭ | ௨ | றுய்சொல்ல | று. சொல்ல |
|  | ௨௬ | அங்காரத்தி | அங்காரத்தி |
|  |  | லுன் | லுள் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| ௬௯ | ௨௭ | எ—று | எ-ம் |
| ௭௦ | ௧௫ | ஆராய் | ஆராய் |
| ௭௮ | ௧௨ | உசவாச | உசவாச |
| ௮௦ | ௨௧ | அற்று | அன்று |
| ௮௧ | ௨ | இல்லாதவாக் | இல்லதவாக் |
| ௮௨ | ௧௭ | சடரூபமாய | சடசொரூப மாகிய |
|  | ௨௪ | ரு | ருரு |
| ௮௭ | ௧௨ | பெரு | பொரு |
|  | ௧௭ | நிாசிரய | பியாசிரய் |
|  | ௧௮ | னின் | லெனின் |
|  | ௨௭ | இவ்வைதமிசங் | இவ்வைர் தமிசங் |
|  | ௨௭ | ளுகம் | களும் |
| ௮௮ | ௪ | கிறன | கின்றன |
|  |  | வெனின்ன் | வெனின் |
|  | ௬ | விருச்கிறது | விருக்கிறது |
|  |  | என்பது | என்பது |
| ௮௯ | ௫ | மாத்திரமா | மாத்திரமா |

உரசுயிஉ

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| கக | எ | இல்லாதவனுக | இல்லாதனவாக |
| கங | ங | விஷமா | விஷயமா |
| கரு | கங | பராமாந்தி | பரமாநந்த |
| | கச | நிற்பயமாக | நிற்பாயாக |
| | உஉ | னுபமே | னுபவமே |
| | உங | பிரமானம | பிரமாணம் |
| கசா | ச | யிரஹ்மம்ரிச் | பிரஹ்மரிச் |
| | அ | உன்ள | உள்ள |
| | கச | இலக்சன | இலக்கண |
| | கஎ | கிள்ற | கின்ற |
| | கங | ஏ-ம் | எ-ம் |
| | உஉ | ருசா | ருக |
| கஎ | அ | உஞற்றிலும் | உஞற்றினும்- |
| | ங | சாரண | காரண |
| | க0 | பிரஹமஞ்ஞான | பிரஹ்மஞான |
| | கக | மாகதிர | மாத்திர |
| | கஉ | மோக்ஷத்தைக் | மோக்ஷத்தை, |
| | ,, | கொடேக்கும் உதவும்- | கொடுக்கும். |
| | கசா | தாபிய | தாகிய |
| | | யரக | யாக |
| | உஅ | பிரஹ்மஞான | பிரஹ்மஞான |
| | உரு | அக்சதான | அச்சாதன |
| கஅ | உ | ஞானத்ன் | ஞானத்தின் |
| | | பரிரக்கதி | பரிரக்க |
| | சா | தானு | தானும் |
| | உசா | இடம் | இடர் |
| கங | ரு | சற்கரும்புகளை | சற்கருமங்களை |
| | ரு | மனைதேங் | மனைதோ |
| | எ | வருந்கத்தை | வருத்தத்தை |
| | ய | அந்தகரணை | அந்தக்கரண |
| | | யர்ல் | யால் |
| | கக | ஞகன | ஞான |
| | | மோக்ஷதனத | மோக்ஷத்தையு |
| | கஉ | பிறம் | பிறப் |
| க00 | ரு | பரிபூா | பரிபூர |
| | கங | நிதின | நிறத்தின |
| | கச | விளகா | விளங்கா |
| | கஎ | னா | னா |
| க0க | உ | மெப்யும் | மெய்யும் |
| | ச | னியமாய் | னியமாய் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | சு௰ | மாவர | மானர |
| | கச | தஙக | தங்க |
| | கரு | விளஙகு | விளங்கு |
| | உக | ஙாம | நாம |
| | உச | தமர்கு | தமக்கு |
| க0உ | ரு | பின்னருல | பின்னரும் |
| | உக | ஐந்தலே | ஐந்தாதலே |
| | உசு | கனயாகிய | கனமாகிய |
| க0௩ | ௰ | எயங்கி | மயங்கி |
| | உகூ | விடயகள்ன | விடயக்கள் |
| | | விஙளகி | விளக்கி |
| க0ச | கூ | களினடத்தா | களினிடத்தா |
| | அ | ரிலே | ரிலே |
| | கச | பிரகாசிக்கல் | பிரகாசித்தல் |
| | உக | நில்வார | நில்லார |
| | உஉ | தாயகரு | தாய்க்கு |
| | | கெட்டொர்கு | கெட்டொழிக் |
| | உரு | மோகாமற் | போகாமற் [ரு |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| க0சு | ரு | எல்லய | எல்லா |
| | கரு | மனம்இருத்தலி | மனத்தின் |
| | கரு | ஆரந்தம | ஆனந்தமய |
| | கஎ | அந்ரிய | அந்நிய |
| | உஎ | தேசஙகளே யும | தேசங்களே யும் |
| க0எ | அ | திருத்தனுக்கும | திருத்தனுக் கும் |
| | கக | கெட்டுபே இல | கெட்டுப் இலம் |
| க0அ | ச | சாதபூதி | சாதபூதி |
| க0கூ | எ | பிரஎசி | பிரகாசி |
| | கசு | ஒழிவிலொ மெம் | ஒழிவிலொ மெகம் |
| க0கூ | உரு | துக | துக்க |
| | உகூ | தரும் | தரும் |
| கக0 | க | நித்தித்திப் | நித்திப் |
| | க௰ | யொம்மாம | யொப்பாம் |
| | கக | துக் | துக்க |
| | கக | ஒரு | ஒரு |

| | | | |
|---|---|---|---|
| | | ஞான | ஞான |
| | | விசற்ப | விகற்ப |
| | உ௰ | பருச | பருக |
| கககக | ௰கூ | வவப | வடிவப் |
| | உ௪ | மந்தம் | பந்தம் |
| | | மாண | மரண |
| | உ௭ | லதை | வதை |
| | | உள்ளத்தை | உள்ளதை |
| ககஉ | உ | இல்லா | இல்ல |
| | கக | றுக்கட்டு | அக்கட்டு |
| | கஉ | யில்லா | யில்ல |
| | | மயக்கத்தையடைந்த | மயக்கத்தை |
| | கரு | யில்லா | யில்ல |
| | கஅ | செயவெனச்ச | செயவெனெச்ச |
| | உ௰ | யிருத்தலால் | யிருத்த |
| | | மனத்தி | லால் |
| | உக | தவிர | தவிர |
| | உ௪ | கொள்ளைரோ | கொள்கைநேர் |
| | உ௫ | பூரணரா | பூரணநா |
| கஉ௩ | உஉ | மர்க்ய | மாகிய |
| கஉ௪ | ௬ | வாகிப | வாகிய |
| | ௭ | சுபம் | சுயம் |
| | க௪ | பூர | பூத |
| | க௮ | சசா | சகசா |
| கஉ௫ | க௭ | ஞ்ச | பஞ்ச |
| | உ௬ | யயிலங்க | யிலங்க |
| | ௰௬ | அப்க்கு | அப்பக்கு |
| | உ௫ | ஞனி | ஞானி |
| க௬0 | ௮ | பொருவா | பொருளா |
| க௬௬ | உக | ஞரவி | ஞானி |
| க௬௯ | க௮ | சொரூபமர | சொரூபமா |
| க௪௯ | க௫ | பருந்தி | பருந்தி |
| க௫௫ | க௪ | இராகசால | இராக்கால |
| க௫௬ | உ௭ | சூரிப | சூரிய |
| | | பயிரினை | பயிரினை |
| | | மேப் | மேய் |
| க௫௮ | கஉ | பொருந்த | பொருந்த |
| க௬௭ | உஉ | பலனதி | பாலானதி |
| க௬௯ | உ௰ | சுரேத்திராதி | சுரோத்திராதி |
| க௭க | ௰௬ | இநகிரி | இந்திரியம் |
| க௭௬ | ௰ | தாக்க | தக்க |
| க௭௫ | ௰௮ | இல்லாதா | இல்லாத |

உாசுய௫

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கஎஅ | கடு | படியோபின் | படிமாயின் |
| | உச | பிரகாச | பிரகாச |
| கஎகூ | சஅ | சுக | சுக |
| கஅக | கஉ | வறியாத | யொழிக்கவறியாத |
| | | அவிவேகமொழிக்க | அவிவேக |
| | கச | சமூத்திக | சமுத்திர |
| | உக | கொடிர | கொடிர |
| கஅடு | உடு | சத்தல்ல | சத்தல்ல |
| ககூ | கக | அறியால் | அறியால் |
| ககக | ரு | முறக்தமதை | முறக்கமெதை |
| | சு | வன்மத | வருமத |
| | சஅ | சம்மந்த | சம்பந்த |
| ககூஉ | கரு | பிரபஞ்ச | பிரபஞ்ச |
| ககூரு | சஉ | மதலிய | முதலிய |
| ககூசு | சு | பிறக்கின்ற | பிருக்கின்ற |
| | கசு | ஞூசிய | ஞூகிய |
| ககூஎ | உச | தைக்கண் | தசைக்கண் |
| உ0ரு | எ | மிதத | மிததை |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| | கஉ | திரமிட் | திராவிட் |
| உகசு | கஅ | சண் | கண் |
| உகஎ | கச | வசத்தாற் | வசத்தாற் |
| | கடு | தொழிலர்ல் | தொழிலால் |
| உஉ0 | கக | தர்ஙகு | தாங்கு |
| | உச | யடையவதற்கு | யடைவதற்கு |
| உஉக | கக | தயாதறிவர்கள் | தறியாதவர்கள் |
| உஉஎ | கச | தவர்சள் | தவர்கள் |
| உஉஅ | கடு | வரன் | வான |
| உஙக | கக | மாய் | மாப |
| உஙசு | ய | ஒரு | ஒரு |
| உசய | அ | தாபிப | தாபிய |
| | உடு | விசார | விசார |
| உசச | ரு | ஜீலனது | ஜீவனது |
| உசஎ | அ | நீ | நீர் |
| உசஅ | ச | மணத்தை | மாணத்தை |
| உடுச | க | ஆத்மா | ஆத்துமா |
| உடுடு | க | பாட்டுமுதற்குறிப்பு | மேற்கோள் |
| | கஅ | சொணடடுத்த | கொண்டடுதத |

| | | | |
|---|---|---|---|
| ௫௯ | ௨௧ | ௨௰ | ௨௧ |
| ௭௧ | ௨௩ | ௯௨ | ௨௯ |
| ௭௫ | ௧௧ | ௩௨ | ௩௩ |
| ௭௭ | ௨௨ | ௪௬ | ௪௯ |
| ௯௯ | ௨௧ | ௯௧ | ௬௧ |
| ௧௧0 | ௨௫ | ௯௰ | ௰ |
| ௧௧௧ | ௧௯ | ௧௰ | ௰ |
| ௧௪௫ | ௧௫ | ௯ | ௬ |
| ௧௯௮ | ௧௧ | ௯ | ௬ |
| ௧௭௬ | ௧௮ | ௧௧௯ | ௧௧௬ |
| ௨௨0 | ௧௯ | ௫ | ௬ |
| ௨௨௮ | ௨௫ | ௰௩ | ௰௪ |
| ௨௩௨ | ௪ | ௰௯ | ௰௬ |

## சிறப்புக்கவி

| | | | |
|---|---|---|---|
| 12 | 12 | கருனே | கருணை |
| 13 | 10 | சிறங் | சிரங் |
| 14 | 4 | அறஙேர் | அறஞேர் |

# விஞ்ஞாபனம்.

இந்நூலை யென் சிறிய புத்தியறிந்தவரை பிழைபார்த்துத் திருத்த மெழுதியிருக்கிறேன். ஆனால், பெரும்பாலும் இந்நூலில் ஒற்றெ றெழுத்துக்களை நன்றாய்ப் பதியவில்லை. இவ்விஷயத்தைப் பிரஸ் புரோப்ரைட்டரவர்களிடம் கேட்டதில் நாட்பட்ட டைப்கள் என்றும் மாற்றவேண்டிய காலந் தற்சமயமென்றும் மாற்றியபின் இந்நூல் அச்சிட்டால் டைப் (எழுத்து) மிகத் தெளிவா யிருக்குமென்றுஞ் சொன்னார்கள்.

பெரும்பான்மை ":மெய்யெழுத்துக்கள் உயிர்மெய் யெழுத்துக்களாகத் தோன்றுபவைகளைப் பிரஸ் புரோப்ரைட்டரவர்கள் சொல்லுங் காரணத்தால் இங்கு துலக்கவில்லை. ஏனெனின்? இங்கும் அம்மாதிரியே தோன்றுமெனத் தெரிந்தே.

இலக்கணப் பயிற்சியில்லாத யான் பிழைபார்த்திருப்பதில் பிழையிருக்கக்கூடும் மன்னிப்பதோடு பிழைகளைத் தெரிவித்தால் இரண்டாம் பதிப்பில் திருத்தி யச்சிடுவதோடு தெரிவித்தவர்களை ஷை நூலில் நன்றி கூறப்படும்.

சற்குரு மூர்த்தி துணை

உலகமா ருயிர்கள் யாவு முண்மைவீ டடையும் வண்ணந்
தலமலி யரிகை வாழ்வோன் சண்மதப் பயிர்க ளீனும்
நலமலி யறிவே வாழ நான்மறைத் தனித நேர்வான்
அலகிலாவான்மா நந்த வடியிணை தலைமேற்கொள்வாம் உ

மகாரவி அவ சோமவாரத்தன்று புரூப் பார்த்து முடிந்தது.

இங்ஙனம்
வி. வீரவாதபிள்ளை
வீரபாண்டியபுரம்
சக்கம்மான்புரம் போஷ்டு
தட்டப்பாறை ரெயில்வே.

21—1—1924